


# சிவம்

சிறந்த ஆறு தெலுங்கு
நாடகங்களின் தொகுப்பு

ஔவை நூலகம்

# சிவம்

[சிறந்த தெலுங்கு நாடகாசிரியர்கள்
அறுவரின் நாடகத் தொகுப்பு]


தொகுத்தவர் :

**கூர்மா வேணு கோபாலசாமி**

தமிழில் : எஸ். கே. சீதா தேவி



ஔவை நூலகம்

4/141 பிராட்வே, சென்னை-1

TAMIL
FIRST EDITION : 5000 COPIES
JULY, 1959

# SIVAM

## (Six Telugu Plays in Tamil)

COMPILER :
KURMA VENUGOPALSWAMY

"The Translated version of the original plays in Telugu have been incorporated with the permission of the copyright holders."

Price Rs. 1—65.

---

Published under the auspices of
The Southern Languages Book Trust, Madras.
TAMIL 45

---

# அணிந்துரை

**டாக்டர் ஏ. எல். முதலியார்,**
துணைவேந்தர்,
சென்னைப் பல்கலைக்கழகம்

தென்னிந்திய மொழிகள் புத்தக டிரஸ்டு, தன்னுடைய முன் அனுபவங்களாலும், பொதுமக்களைக் கவர்வனவாயும் அதனோடு அவர்களுக்கு நற்பயன் அளிப்பனவாயும் உள்ள நூல்களை வெளியிட்டதால் பெற்ற அறிவின் திறத்தாலும், இரண்டாம் வரிசை நூல்களை வெளியிடத் தலைப்பட்டுள்ளது. அவற்றைத் திராவிட மொழிகள் அனைத்திலும் ஆக்கி அளிக்கவும் அது கருதுகின்றது. இந்த நூல்களெல்லாம் மிக்க கவனத்தோடும், படிப்பவர்களின் பலதிறப்பட்ட சுவைகளுக்கு ஏற்பவும் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன. வாழ்க்கையின் பலவகைக் கூறுபாடுகளையும் பற்றிய பலபல பொருள்கள் அடங்கிய நூல்களை வெளியிட இந்தப் புத்தக டிரஸ்டு இயற்கையாகவே ஈடுபடத் தொடங்கியுள்ளது. இந்தியப் பெருந்தலைவர்களுள் சிலருடைய வாழ்க்கை வரலாறுகளையும் அவர்கள் சாதித்தவைகளையும் விரித்துரைப்பதற்கென ஒரு பகுதியும் இதில் தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. நாட்டின் நலன்களில் அக்கறைகொண்டு, மக்களின் அடிப்படை உரிமைகளுக்காகப் போராடவும், நாட்டின் மதிப்பையும் செல்வாக்கையும் வலுப்படுத்தவும் அரும்பணி ஆற்றிய இப்பெருந்தலைவர்களுக்குத் தாங்கள் எவ்வளவு கடமைப்பட்டவர்கள் என்பதை வருங்கால மக்கள் அறிந்துகொள்வது நல்லது.

தத்துவம், சமயம், விஞ்ஞானம், பேரிலக்கியங்கள், பொருளாதாரம் என்பனவும் இவ்வரிசையில் இடம் பெற்றுள்ளன. சிறு கதைகளுக்கும் பண்டைய கலைகளைப் பொதுமக்களிடையே பரப்புவதற்கும் இதில் இடம் வகுக்கப்பட்டுள்ளது என்பதைத் தெரிந்துகொள்வது

நலமாகும். நடனநாடகக் கலைகள், சிற்ப சாஸ்திரங்கள், தொல் பொருள் ஆராய்ச்சியில் கண்டறிந்த உண்மைகள், என்றென்றும் வியத்தகு பொருள்களாய் விளங்கும் தென்னிந்தியப் பெருங் கோயில் களின் வரலாற்றுக் குறிப்புக்கள் ஆகியவையும் இதில் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்போது வெளியிடப்பெறும் இந்த நூல் வரிசை படிப்பவர்க்குச் சுவையூட்டும் பல்வேறு வகைப்பட்ட பொருள்களை வழங்கும் என்பது என் துணிபு. பொதுமுறைக் கல்விக்குரிய பொருள்களைக்கொண்ட இத்தகைய வெளியீடுகள் மேன்மேலும் பெருகும் பெருந்தொகையினராகிய வாசகர்களைக் கவர்ந்துகொள்ளும் என்பதில் ஐயமில்லை.

இந்த நூல் வெளியீட்டுத் திட்டத்தில், தென்னிந்திய மொழி நூல்களுள் ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மொழி பெயர்க்கும் அம்சம், பாராட்டத் தகுதியுடையதாகும். இவ்வரிசை முற்றுப்பெற்றதும், எழுதப்படிக்கமட்டும் தெரிந்த ஏராளமான மக்களைத் தங்கள் அறிவைப் பெருக்கிக்கொள்ள உண்மையான ஆர்வம் கொள்ளும்படி செய்து, அவர்களைப் பழக்கமாகப் படித்துவரும் தொகையினருடன் இணைத்து, அவர்கள் தாங்களாகவே மிக்கதிறம் உடையவர்களா வதற்கு இவைகள் உறுதுணை ஆகும் என்பது என் துணிபு. தென் னிந்திய மொழிகளின் புத்தக டிரஸ்டு எந்த உயரிய நோக்கங் களோடு தொடங்கப்பெற்றதோ அந்நோக்கங்கள் அஃது ஆற்றிவரும் அரும்பணியால் மேன்மேலும் நிறைவேறிவரும் என்று நம்புகிறேன்.

ஏ. எல். முதலியார்.

# அ ர ங் க ம்

# STAGE

# முன்னுரை

சில சந்தர்ப்பங்களின் அபூர்வச் சேர்க்கையால் 1943-ல் தெலுங்கு நாடக அரங்கம் புத்துயிர் பெற்றது. யுத்தத்தின் தொடக்கத்திலேயே சினிமாவானது பொழுது போக்குக்கான தனது கவர்ச்சியை இழந்து விட்டது. யுத்தநிலையால் உயர்தரப் பிலிம்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாவது தடைப்பட்டு விட்டது; விலை விபரீதமாக ஏறி விட்டதால் தேசீயச் சினிமாத் தொழில் முதலாளிகள் செலவைக் குறைக்க நேர்ந்தது. அதனால் நம் படங்களுக்கிருந்த கொஞ்ச நஞ்சப் பொழுது போக்குத் தன்மையும் குறைந்துவிட்டது. நாடகத் தொழில், சினிமா மேடையில் சோபிக்காத கலைஞர்களின் கையில் சிக்கியது. தெனாலி, பெஜவாடா, ஏலூர் முதலிய இடங்களில் சிலர் அப்போதைக்கப்போது சேர்க்கப்பட்ட நடிகைகளையும் நடிகர்களையும் கொண்டு, 'யுத்த நன்கொடை' நாடகங்கள் என்ற பெயரால் கலை ரகசியம் தெரியாத ஜனங்கள்முன் நாடகங்கள் நடத்திப் பணம் கொள்ளை அடித்தார்கள். என்றைக்குமே கணக்கு எழுதியோ தணிக்கை செய்தோ அறியாத அரசாங்க உத்தியோகஸ்தர்கள், பயமுறுத்தியும் தொந்தரவு செய்தும் நிர்ணயம் இல்லாத கட்டாய விலைக்கு டிக்கட்டுகளை வாங்கச் செய்து இந்த ரஸிகக் கூட்டங்களைத் தயார் செய்வார்கள். இந்த நிலையில் விரும்பத்தகுந்த முன்னேற்றத்தைச் சாதிக்கக்கூடிய உத்ஸாகம், நாடகத் தொழிலுக்கு உண்டாகவில்லை. படத் தொழிலுக்கும் நாடகத் தொழிலுக்கும் ஏற்பட்ட இந்த வெறுமை நிலையை நிரப்புவதற்கு அமைச்சூர்கள் துடியாகத் துடித்தார்கள். ஆனால் இவர்களுக்கு ஊக்கம் ஊட்டி ஏற்று நடத்தும் திறமை அமைச்சூர் சபைக்கு இருக்கவில்லை. அபிநயத் திறமையிலும், நடத்தும் திறமையிலும், வேண்டிய சாமக்கிரிகளிலும் அதிக வாய்ப்புப் பெற்ற கல்லூரி மாணவர் நாடக அரங்கத்தாருக்குத்தான் இந்தக் குறையை நிரப்புவது சாத்தியமாயிற்று.

ஏப்ரல் 6, 1942-ல் ஜப்பான் குண்டு விசாகப்பட்டணத்தில் விழுந்ததால் ஆந்த்ர சர்வகலாசாலையை ஒட்டிய கல்லூரிகளெல்லாம் குன்ட்டூருக்குப் போக நேர்ந்தது. இதனால் உயர்தரப்பள்ளி மாண வர்கள், கல்லூரி மாணவர்கள் இவர்கள் தொகை அங்கே மூவாயிரத்துக்குமேல் ஆகிவிட்டது. எனவே நாடகம் மறுபடியும் முன்னேற்றம் பெறுவதற்குக் குன்ட்டூர்தான் காரணமாயிற்று.

1943-ல் சீர்திருத்த வாரத்தில் நாடகம் நடத்தவேண்டும் என்ற பிரஸ்தாபம் வந்தபோது பொங்கி எழுந்த உத்ஸாகத்துடன் குன்ட் டூரிலிருந்த மூன்று கலாசாலைத் தலைவர்களும் பேராசிரியர்களும் மாணவர்களும் முன்வந்து உதவினார்கள். தாராளமான பண உதவியும், நாடக சாமக்கிரிகளும் அரசாங்கத்திடமிருந்து கிடைத்தன. நாடகத்தை நடத்தும் பொறுப்பிலும், வேண்டிய சாமக்கிரிகளைச் சேகரிப்பதிலும் ஆசிரியர் குழு உதவி செய்தது. மாணவர் குழு, அபிநயத் திறமையையும், வேறு வகைச் சேவைகளையும் அளித்து உதவியது. இந்த நாடகத் தொகுதியின் பதிப்பாசிரியரை நாடகத் தைத் தலைமை தாங்கி நடத்த அழைத்தபோது, அவர், தமக்கு நாடகக் குழுவினர் கொடுத்த கௌரவத்துக்காகச் சந்தோஷப் பட்டாலும் முக்கியமாக இரண்டு பிரச்னைகளோடு போராடவேண்டி வந்தது. ஆந்த்ர தேசத்து மற்றப் பட்டணங்களில் நேர்ந்தது போலவே குன்ட்டூர் நாடக சாலைகளும் சினிமா ஹால்களாக மாறி, நாடகம் நடிக்க வசதியற்றவைகளாக ஆகிவிட்டன. ஹால்களுக்கு வாடகைகளும் அளவுக்கு மீறி ஏறிவிட்டன. எது எப்படியானாலும் நாடகத்தை நடத்தியே தீருவது என்று நிச்சயித்தோம். ஆனால் ரஸிகர்களின் கூட்டத்தைச் சமாளிக்கக்கூடிய ஹால் கிடைப்பது கஷ்டம் என்பதை உணர்ந்தோம். இடம் கிடைக்காவிட்டாலும் பத்தாயிரம் ஜனங்கள் கொள்ளக்கூடிய வெட்ட வெளியில் நாடக மேடை அமைப்பதே இந்தப் பிரச்னை தீர வழி. இரண்டாவது பிரச்னையோ இன்னும் சிக்கலாகிவிட்டது. நடிக்கத் தகுதி உள்ள நாடகங்களே கிடைக்கவில்லை. புராண நாடகங்களையும் சரித்திர நாடகங்களையும், நாடகத்தையே தொழிலாகக் கொண்டவர்கள் ஆறு ஏழு மணி நேரத்துக்கு மேலும் நடித்துக் காட்டுவார்கள்.

1920 வாக்கில் நடிக்கப்பட்ட சமூக நாடகங்கள் மிக அருவருக்கத் தக்கவையாக இருந்தன. மாணவர் நாடக அரங்கத்துக்கு, தொழில் நாடக அரங்கத்தோடு போட்டியிடப் பொழுதோ, திறமையோ,

ஆசையோ இல்லை. அது, தங்கள் நாடக நிகழ்ச்சிக்காக வேறு நாடகக் கதைகளைத் தேடவேண்டி இருந்தது.

இருந்தாலும் நாங்கள் ஏற்படுத்திய மூன்று மணி நேரத்தில் முடியக்கூடிய நாடகங்களும் சில இல்லாமல் போகவில்லை. 'குர ஜாட அப்பாராவ்' அவர்களின் 'கன்யா ஸீல்க' நாடகக் கதையை நிர்த் தாட்சிண்யமாகச் சுருக்கி, காட்சிகளின் முறையை மாற்றியபின் அது நன்றாகவே சோபித்தது. சமூகப் பிரச்னைகளை ஆதாரமாகக் கொண்டு எழுதிய ராஜமன்னார் அவர்களின், 'தப்பு யாருடையது?', முத்து கிருஷ்ண அவர்களின், 'டீ கப்பில் புயல்', 'பீமா விலாசத்தில் பாமா கலாபம்', முதலியன 1930—40-க்கு இடையில் நடிக்கப்பட்டவை-சில நாடகக் கதைகள் கிடைத்தன. அப்பொழுதே வெளிவந்த முத்து கிருஷ்ணவின், 'அசோகம்', சலத்தின், 'சித்திராங்கி', 'சசாங்கம்', 'ஹரிச்சந்திரா', 'கவிராஜு', 'சம்புகவதை', 'கொலை', ஆமஞ்சர்லவின், 'ஹிரண்ய கசிபு' முதலிய நாடகக் கதைகள், புராணக் கதைகளுக்கும், சரித்திரங்களுக்கும் தற்கால வியாக்கியானங்கள் மட்டுமே ஆனாலும் நாடகக் கலையில் அவை நிரூபித்துக் காட்டிய புதிய வழிகள் நடிக்கத் தகுந்தவையாகவே இருந்தன. ஆனால் 1944-ல் நடித்துக் காண்பிக்கக் கிடைத்த நாடகக் கதைகளின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தது. இரண்டரை மணி நேரம் ரஸிகர்களின் மனத்தை இழுத்து நிறுத்தக் கூடிய நாடகக் கதைகளை எழுதுவதற்கு வேண்டிய திறமையும், உழைக்கும் சக்தியும் உள்ள எழுத்தாளர்களும் முன் வருவதாகத் தெரியவில்லை. கடைசியில் ஓரங்க நாடகந்தான் கதி என்பது தெளிவாயிற்று.

ஒரு வகையான சில ஓரங்க நாடகங்கள் நமது நாடகத் தொகுதிக்கு முன்னால் வெளிவந்தன. கந்து கூலி, பானு கண்டி, திலகமரித்தி இவர்கள் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதிய ஹாஸ்ய நாடகக் கதைகள் ஆந்த்ர தேசம் எங்கும் பிரசித்தமாக இருந்தன; சிலவற்றை நடித்தும் இருக்கிறார்கள். முக்கியமாகப் பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும் தெலுங்கு உபாத்தியாயர்களும் மற்றவர்களும் ஹாஸ்ய நாடகங்கள் எழுதி, மாணவர்கள் மூலம் நடிக்கச் செய்வது வழக்கமாயிற்று. இவைகளுள் பல மறைந்து போய்விட்டாலும் பமிடி பாட்டி காமேச்வர ராவ், சிந்தா தீக்ஷிதலு, விசுவநாத கவிராஜு, நோரி நரசிம்ம சாஸ்திரி, மொக்கபாடி நரசிம்ம

சாஸ்திரி ஆகியோரும் வேறு சிலரும் எழுதிய சில படிக்கும் நாடகக் கதைகள் வாசகர் உலகில் பிரசாரத்துக்கு வந்தன. சாவித்திரி, ஸகி, பிரதிபா, பாரதி, தெலுகுதல்லி முதலிய பத்திரிகைகள் ஹாஸ்ய நாடகங்களையும் ஓரங்க நாடகங்களையும் பிரசுரித்தன. ராஜமன்னர், சலம், முத்துகிருஷ்ண இவர்கள் எழுதியவை முதல் முதலாக அல்பாயுசான இரண்டு பத்திரிகைகளில் வெளிவந்தன. இவற்றுள் ஒன்று, ராஜமன்னர் ஆசிரியராக இருந்து நடத்திய கலை, இரண்டாவது முத்துகிருஷ்ண ஆசிரியராக இருந்து நடத்திய 'ஜ்வாலா'. பிறகு இவர்கள் எழுதியவை புத்தகங்களாக வெளி வந்தன.

1943—44-ஆம் வருஷங்களில் இரண்டு ஓரங்க நாடகப் புத்த கங்கள் அச்சிடப்பட்டன. ஒன்று, தல்லாவஜ்ஜல சிவ சங்கர சாஸ்திரி சேகரித்து நவம்பர், 1943-ல் ஆந்திரப்பிரசாரிணி லிமிடெட் பிரசுரித்த பன்னிரண்டு சிறு நாடகக்கதைகளின் தொகுதி. இரண்டா வது ஸ்ரீபாத கோபால கிருஷ்ணமூர்த்தி சேகரித்து ஜனவரி 1944-இல் அத்தேபல்லி லஹ்மணசுவாமி நாயுடு அவர்கள் ஸரஸ் வதி பவர் பிரஸ்ஸில் பிரசுரித்த ஒன்பது நாடகங்களின் தொகுதி. இதில் முதல் தொகுதியை வெளியிட்டவர், 'நாடகங்களை நாலு தொகுதிகளாக வெளியிட வேண்டும் என்பது எங்கள் லட்சியம். இவைகள் சிறந்த ஐம்பது நாடகங்களாக இருக்கும் என்று நினைக் கிறோம்' என்று சொன்னார். இரண்டாம் தொகுதியை வெளியிட்டவர் 'ரஸிகர்களின் தூண்டுதல் தகுந்த அளவு இருந்தால் இரண்டாம் தொகுதி வெளியிடுகிறோம். மூன்றும் தொகுதி உங்கள் இஷ்டம்' என்று ஜாக்கிரதையாகவே சொல்லிவைத்தார்.

எழுத்தாளர்கள், தனியாகவும் சேர்ந்தும் பிரசுரித்த ஓரங்க நாடகத் தொகுதிகள் பல இருந்தாலும் இப்பொழுது சேகரித்தது பழைய தொகுதி வரிசையில் மூன்றுவது; 1944-க்குப் பிறகு வந்த வற்றுள் முதலாவது.

இதற்குமுன் வெளிவந்த இரண்டு தொகுதிகளை வெளியிட்டவர் கள் சில கஷ்டங்களுக்கு உள்ளாகவேண்டியிருந்தது. தாங்கள் தேர்ந்தெடுக்கும் நாடகங்களின் எண்ணிக்கை, குறைவாக இருந்த தனால் அதுவரைக்கும் அச்சில் ஏருத நாடகக் கதைகளிலிருந்து தேர்ந்தெடுக்கவேண்டியிருந்தது. அவசரத்தில் ஏற்பாடான நாடக மேடைகளில் ஏதோ பெயருக்கு நடிக்கப்பட்டவையே தவிர, ரஸிகர்

கள் பார்த்து, நிஜமான விமர்சனம் செய்யப்பட்ட நாடகங்கள் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

இப்பொழுது சேகரிப்பதற்கு இரண்டாயிரம் ஓரங்க நாடகங்கள் கிடைத்தன. இவற்றுள் பல, ரசிகர்கள்முன் நடித்தும் நல்ல விமரிசனங்களில் வெற்றி பெற்று வந்தவையுமே ஆகும். ஏறக்குறைய நூறு நாடகங்கள் வரையில் நடத்திக்காட்டிய அனுபவம் இந்தப் பதிப்பாசிரியருக்கு மிகவும் உதவியது. விசுவகளா பரிஷத் நாடக சமிதியில் தலைவராய்ச் சில நூறு நாடகங்களைப் படிக்கும் சந்தர்ப்பமும் வாய்த்தது. இந்த நாடகக் கதைகளுள் சில, பல ஊர்களில் வெளிவரும் பத்திரிகைகளில் பிரசுரமானவை. வேறு சில, கையெழுத்துப் பிரதிகளாக எழுத்தாளர்களும் நடிப்பதற்காக நண்பர்களும் அனுப்பியவை. இப்பொழுது கிடைத்த நாடகங்களின் எண்ணிக்கை அதிகமாய் இருந்து, பதிப்பாசிரியரின் பொறுப்பை மிக அதிகப்படுத்திவிட்டது. இப்படித் தேர்ந்தெடுக்கும்போது தர்க்கத்துக்கு இடம் இல்லாமல் தீர்மானமாகக் கையாளும் வழி இதுதான். சிறந்த கருத்துக்கள், பண்பட்ட நடை, பார்க்கத் தகுதி, சுருக்கம், ஆகிய தன்மைகள் நாடகக் கதைக்கு இருக்கின்றனவா என்று கவனிப்பதுதான் அது. இதனால் மட்டுமே முடிவு ஏற்படுவதும் சாத்தியம் இல்லை.

இந்தத் தொகுதி, உருவில் மிகப் பெரியதன்று; எனினும் சுருக்கமாயிருப்பதை நோக்கமாகச் கொள்ளவில்லை. அப்படிக் கொண்டிருந்தால் இன்னும் பல எழுத்தாளர்களின் பலவிதங்களான நாடகங்களைச் சேர்த்திருக்கமுடியும். ஆனால் சிறந்த நாடகங்களின் மாதிரியாக இருந்திருக்காது. தவிர, ஓரங்க நாடகம் மட்டும் என்ற விதியைக் கவனிக்காமல் நம் நாடக இலக்கியத்தை மாற்றி அமைத்த, தகுந்த நாடகங்களைச் சேர்ப்பதே நல்ல முறையாகத் தோன்றியது. அதாவது சில எழுத்தாளர்களுக்கு மட்டுமே இதில் இடங்கொடுக்க முடிந்தது. அப்படியும் இந்தத் திட்டத்தின்கீழ் அடங்கும் நாடகங்களை ஒரே தொகுதியில் அடக்க முடியவில்லை. அதனால் இந்தத் தொகுதியின் பதிப்பாளருக்கு 1930-இல் தொடங்கிய காலத்தை இரண்டு பகுதியாகப் பிரித்தல் நல்லதென்று தோன்றியது.

1930-இல் சென்னை மியூசியம் தியேட்டரில் 'ராகவா'வின் தலைமையில், நடந்த ராஜமன்னாரின் 'தப்பு யாருடையது?' என்னும்

நாடக நிகழ்ச்சியைத் தெலுங்கு நாடகச் சரித்திரத்தில் முதல் திருப்ப மாகவும், 1949-இல் 'வெங்கடகிரி அமெச்சூரி'ன் நிர்வாகத்தின்கீழ் ஏலூர் 'நாட்டிய கலா பரிஷத்'தில் நடந்த 'ஆத்திரேயா'வின் 'என். ஜி. ஓ' நாடக நிகழ்ச்சியை அடுத்த திருப்பமாகவும் வைத்து இத் தொகுதியில் 1930—1949-க்கு இடையில் எழுதிய நாடகங்களை மட்டும் சேர்த்திருக்கிருர். 1949-க்குப் பிற்பட்டவை அடுத்த தொகுதிக்காக ஒதுக்கப்பட்டன.

ஸாஹிதீ ஸமிதி, 1920 வாக்கில் தெலுங்கு இலக்கியத்துக்குப் புதிய வழிகாட்டியதை முதல் முயற்சி என்று சொல்லலாம். நம் கவிதையின் போக்கையும் பல கோணங்களுக்கு மாற்றி, நாவல், சிறு கதை இவற்றில் பல விதங்களை உண்டாக்கிய இந்த முயற்சி, நாடகம் எழுதுபவர்களின் முன்னேற்றத்துக்கு வேண்டிய அளவு உழைக்க முடியவில்லை. ஸாஹிதீ ஸமிதியின் செல்வாக்கு மிகுந் திருந்த காலத்தில் நாடகம் வர வர க்ஷீணதசையை அடைந்தது வருந்தத்தக்கதே.

நாடக இலக்கியத்தை முன்னணியில் கொண்டுவந்த பிரமுக எழுத்தாளர்களுள் ராஜமன்னுரையே முதலில் வைக்க வேண்டும். அவருடைய முதல் ஓரங்க நாடகங்கள் 1920-இல் வெளிவந்தன வாயினும் அவற்றுக்கு அக்காலத்தில் போதிய மதிப்புக் கிடைக்க வில்லை. தற்காலத்து ஐரோப்பிய இலக்கியத்தின் சாயையில் முதலில் தெலுங்கு நாடகம் இயற்றிய எழுத்தாளர் இவர் என்பது உண்மை யானுலும் 19-ஆம் நூற்ருண்டின் ஐரோப்பிய நாகரிகத்தால் இந்தி யாவில் ஏற்பட்ட சிக்கலான சூழ்நிலைகளோடு அவர் போராடும்படி நேர்ந்தது. ஆந்த்ரர்கள் எந்தக்காலத்திலும் அர்த்தமற்ற பழமைப் பிரியர்கள் அல்லர். தெலுங்கு இலக்கியமும் தனிமையில் மடிஉடுத்து ஒதுங்கியிருக்க வில்லை. ராமமோகன ராய், கேசவசந்திரசேன், வீரேசலிங்கம் பந்துலு, ரகுபதி வேங்கடரத்தினம் நாயுடு இவர்கள் தலைமையில் எற்பட்ட சமூகச் சீர்திருத்த இயக்கம் நாட்டுக்கு ஒப்பற்ற சேவை செய்தது. ஆனுல் விக்டோரியா காலத்து இங்கிலாந்தில் பரவிய போலி ஒழுக்கத்தைத் தன்னுடன் கொண்டு வந்தது. கடைசி யில் இந்தப்போலி ஒழுக்கம் சிலரால் டம்பாச்சாரமாக மாறிவிட்டது. ராஜமன்னுரின் நாடகங்கள் இந்தப்போலி ஒழுக்கத்துக்குச் சரியான அடிகொடுத்தன. இவருடைய 'பிசாசுகளின் இலங்கை' சிறந்த நாடக மானுலும் இத்துறையில் பழகத்தொடங்கிய காலத்தில்

எழுதியதாகையால் அதை இதில் சேர்க்க வில்லை. அவருடைய சிறந்த கற்பனையை வெளியிடும், **'நிஷ்பலம்' 'பிறருடையது' 'என்ன ஆண்பிள்ளைகள்?'** என்னும் மூன்று நாடகங்களையும் **'நாகப்பாம்பு'** என்ற கற்பனையையும் ஆராய்ந்தோம். **'என்ன ஆண்பிள்ளைகள்?'** என்பது ஆசிரியரின் பழுத்த நாடகமாகத் தோன்றியதால் இப்புத்தகத்தில் அதற்கே முதன்மை கொடுத்தோம்.

ஆணுக்கொரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதி என்ற ஆண், பெண் சம்பந்தமான வேறுபாட்டை நிர்த்தாட்சண்யமாகச் சலம் கண்டிக் கிறார். **கண்ணீர் வாய்க்கால்!** என்ற தலைப்போடு வெளிவந்த இவருடைய முதல் கதைத் தொகுதி ஆந்த்ர இளைஞர் கூட்டத்தை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. பிற்காலத்து இளம் எழுத்தாளர்களை அவர் வழியிலேயே எழுதத் தூண்டியது. அவர், தம் நாவல்களில் முக்கியமாகத் **'தெய்வம் கொடுத்த மனைவி'** என்பதில் தம் கொள்கைகளைத் தெளிவாக்கியிருக்கிறார். ஆண், பெண் சம்பந்தப் பட்ட பிரச்னைகளில் தம் கூரிய விமரிசன நோக்கைத் தம் நாடகங்கள் மூலமாகவும் வெளிப்படுத்தியிருக்கிறார். அவருடைய நீண்ட நாடகங் களாகிய, **'சித்திராங்கி, சசாங்க'** என்ற இரண்டும் பலரை ஆழ்ந்த யோசனைக்குள் ஆழ்த்தி விட்டன. அவருடைய ஓரங்க நாடகங்கள் கதைகளைப் போல் அவ்வளவு தீவிரமாக இல்லாவிட்டாலும் அதே தத்துவத்தையே சித்திரிக்கின்றன. **'ஹரிச்சந்திரர், சத்தியம், சிவம்'** என்ற மூன்று நாடகங்களையும் ஆராய்ந்ததில், ஆண், பெண் சம்பந்தப்பட்ட பிரச்னைகளில் ஆசிரியரின் கொள்கைக்குக் கண்ணாடி போன்ற பாவத்தை வெளியிடுவது **'சிவம்'** என்று தோன்றியதால் அதையே தேர்ந்தெடுத்தோம். 1932-ல் ஒரு பள்ளிக் கூடச்சங்கத்தார் இதை நடித்திருந்தாலும் **'விச்வகளாபரிஷத்'** இதை மேடையேற்றிய பிறகுதான் இதன் பெருமை எல்லோருக்கும் புரிந்தது.

முத்து கிருஷ்ண என்பவர் வேறு வரும்படியை எதிர்பார்க்காமல் தம் எழுத்து ஒன்றையே ஆதாரமாகக் கொண்டு வாழத் துணிந்தவர் களுள் ஒருவர். இவருடைய நாடகங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், அவ்வப்பொழுது எழுதிய தனிப்பாடல்கள் எல்லாமாக அவருக்குச் சிறந்த எழுத்தாளர் என்ற பெயரைச் சம்பாதித்துக் கொடுத்தன. இவர் ஆரம்பித்த **'ஜீவாலா'** என்னும் பத்திரிகை சிலகாலமே நடந்ததென்றாலும் சிறந்த கதை கட்டுரைகளையே தாங்கி வந்தது.

'வைதாளிகர்' (வந்தமாகதர்) என்ற இவருடைய கவிதைத் தொகுதி கவிதையின் தற்கால மறுமலர்ச்சிக்கு நல்ல எடுத்துக் காட்டாக இருக்கிறது. 'அசோகம்' என்பது இவருடைய முக்கியமான நாடகமாக இருக்கலாம். அது ஆழ்ந்த ஆராய்ச்சியின் பலனுக எழுந்தது. பெண்ட்யாலா சுப்ரமண்ய சாஸ்திரி, கவிராஜு திரிபுர நேனிராம சுவாமி கௌத்ரி இவர்களையும் இந்தியப் புரானக் கதா நாயகர்களையும் ஒன்றுபடுத்தி எழுதிய 'அசோகத்'தின் மூலமாக, கடமையின் பெருமையில் ஒரு புரட்சியை உன்டாக்கிய பெருமை அவரைச் சாரும். இவருடைய எழுத்துத் திறமை 'டீ கப்பில் புயல்' போன்ற எளிய நாடகத்திலிருந்து 'அனார்க்கலி' போன்ற சோக நாடகம் வரைக்கும் பரவியிருக்கிறது. அனார்க்கலி இந்தத் தொகுதி யில் சேர்ந்திருக்கிறது. இந்த நாடகம் 1938-லேயே முதல் முதலாக மேடை ஏறினாலும் ரேடியோவில் ஒலி பரப்பப் பட்டாலும் அதன் முழுப்பெருமையும் அப்பொழுது விளங்கவில்லை. ஏழை பணக்காரன் என்ற அந்தஸ்து வித்தியாசத்துக்கும், ஆவேசத்தை மையமாகக் கொண்ட காதலுக்கும் இடையே எழும் போராட்டத்தை இவர் சித்திரிக்கிறார் என்பது இது பலமுறை மேடை ஏறிய பின்புதான் தெரிந்தது.

நாரல வெங்கடேசுவர ராவ் என்பவர் சிறந்த பத்திரிகை ஆசிரிய ராக இருந்து புகழ் பெற்றவர். இவர் கதைகள், தனிப்பாடல்கள், ஓரங்க நாடகங்கள் இவை மூலமாக அடிக்கடிச் செய்து வரும் இலக்கி யச்சேவையை நாம் அவ்வப்போது மறந்து விடுகிறோம். இவருடைய ஓரங்க நாடகங்கள் சில 1947-ல் அழகிய தொகுதியாக வெளிவந்தன. நாடகக்கலையில் இவ்வளவு வகைகளைக் கற்பனை செய்த ஆசிரியர் வேறு யாரும் இல்லை. மூன்று ஓரங்க நாடகங்கள், 'பங்கப்படல்' 'சகுனபட்சி' 'தலைஎழுத்து' ஆகிய மூன்றும் 1943-ல் மேடை ஏறின. இந்த நாடகக் காட்சிகளில் கண்ட தத்ரூப அமைப்பு (realism), தெலுங்குமேடைக்குப் புதியது. 'ஓரே அபிப்பிராயம்' முத லிய நாடகங்கள், தெலுங்குநாட்டுக் கிராமவாழ்க்கையின் பேதைமை, குறுகிய மனப்பான்மை இவைகளோடு அங்கேயுள்ள நல்ல பண்பு களையும் சித்திரித்து நம்மைக் கிராமவாழ்க்கையின், அருகே இழுத்துச் செல்கின்றன. இந்தத் தொகுப்பில் சேர்ந்துள்ள 'தலைஎழுத்து' அருவருக்கத்தக்க சோம்பேறித் தனத்தால் நேரும் துன்பங்களை சோகம் தோன்றத் தெரிவிக்கும் முறை 'செக்கோவை' நினைவுக்குக் கொண்டுவருகிறது.

அமஞ்சர்ல கோபலராவின் நாடகங்கள் கணக்கில் அதிகமாக இல்லாவிட்டாலும் ஆழ்ந்த ஆராய்ச்சின் பலனுக எழுந்தவை. உண்மையிலேயே இப்படிப் பட்ட ஆராய்ச்சி மிகுந்த சரித்திர நாடகங்கள், சரித்திரத்தைத் தெளிவாக்க மிகவும் அவசியமானவை. சத்தியாக்கிரக இயக்கம் இவருடைய படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் தடையானுலும், சிறைவாசம் ஆர அமர யோசிக்க இவருக்குச் சந்தர்ப்பம் கொடுத்ததோடு, சுதந்தர இயக்கத்தில் ஆந்த்ர சரித்திர மரபுக்குத் தகுந்த ஸ்தானம் கொடுக்கப்படவில்லை என்ற உண்மையையும் மக்கள் உணரும்படிச் செய்தது. ‘ **மல்லம தேவியின் சாபம்** ’ இந்தக் குறையைத் தீர்க்க முயன்றது. இந்த நாடகத்தை 1938-ல் குன்ட்டூரில் ஹரீந்த்ர நாத் சட்டோபாத்யாயரின் வழியைப் பின்பற்றிய இந்த ஆசிரியரைக் கொண்டே, திறமை வாய்ந்த விமர்சகர்களின் முன்னிலையில் (ரஸிகர்களில் சிலர் நவ்யசாஹித்ய பரிஷத்தின் அங்கத்தினர்கள்) நடிக்கப்பட்டது. பிறகு இவர் அஜந்தா, எல்லோரா வரலாறுகளைப்பற்றி குறிப்பிடத் தகுந்த ஆராய்ச்சி செய்து, சரித்திர உண்மையோடு விளங்கும் ‘ **விச்வந்தர** ’ என்னும் நாடகத்தை எழுதினுர். இந்த ஆராய்ச்சியின் அவசியத்தை மற்றச் சரித்திர நாடக ஆசிரியர்களே உணரவில்லை என்று தெரிகிறது.

புச்சி பாபு என்ற சிவராஜு வெங்கட சுப்பாராவ், தம் கருத்துக்களையும் அநுபவங்களையும் சிறு கதைகள், நாவல்கள் மூலமாகவும், மேடை, ரேடியோ நாடகங்கள் மூலமாகவும் பல வழிகளில் வெளியிட்டிருக்கிருர். மனத்தத்துவ சாஸ்திரப் பயிற்சி, பல விதமான மேல்நாட்டுச் சித்தாந்தங்கள் இவைகள் இவருடைய எழுத்தில் இடம் பெற்றிருக்கின்றன. பழைய தொகுதி ஒன்றில் சேர்க்கப்பட்ட ‘திஷ்ய ரட்சிதை’ என்பது சிறந்த படைப்பு. ‘ **வழியோடு போகும் தானையா** ’வைத் தேர்ந்தெடுக்க நினைத்தோம். ஆனுல் அது ஒரு காலத்தில் மட்டுமே மதிப்புடையது என்ற காரணத்தால், ஆசிரியர் அதை எடுக்க ஒப்புக் கொள்ளவில்லை. கேட்டதுதான் தாமதம் ரிஜிஸ்தர் கூடச்செய்யாமல் புக் போஸ்டில் இதுவரைக்கும் பத்திரிகாசிரியர்கள் கண்ணில் படாத, ‘ **திரைக்கு ஏருத நாடகம், ராஜமார்க்கம், எடுத்த திரை** ’ என்ற நாடகங்களின் ஒரே கைஎழுத்துப் பிரதிகளை மிகுந்த அன்புடன் அனுப்பினுர். நம் தபால் இலாகாவின் ஒப்பற்ற திறமையின் காரணமாக அவை வால்டேருக்கு வந்து சேரவே இல்லை. இந்தத் தொகுதியில் சேர்த்த ‘ **உமர்கயாம்** ’

ஒரு விசேஷமான கற்பனை. பாரஸீக கவிஞனுடைய ‘காதல்தேன் ஊறும் பூங்கொத்து’ இது.

இந்தத் தொகுதியில் சேர்த்த நாடகங்களெல்லாம் ஏற்கனவே பிரசுரமானவை-நடித்தவையும் கூட.

தம்தம் நாடகங்களை இதில் சேர்த்துக்கொள்ள அநுமதித்த ஆசிரியர்கள் அறுவருக்கும் இவைகளைப் பிரசுரித்த பத்திரிகாசிரியர்களுக்கும் நன்றி. இந்தத் தொகுதியைத் தயாரிப்பதில் உதவிய டாக்டர் டி.வி.கே. ராகவாச்சாரி, ஸ்ரீ கொரலபாடி ஸ்ரீராமமூர்த்தி இவர்களுக்கும் பதிப்பாசிரியரின் நன்றி.

வால்தேர், கூர்மா வேணு கோபாலசாமி.

# 1. என்ன ஆண்பிள்ளைகள்?

★

ஆசிரியர்:

ஸ்ரீ. பி. வி. ராஜமன்னார்

(10—5—1901-ல் பிறந்தவர். சென்னைத் தலைமை நீதிபதி. "தப்பு யாருடையது?" என்னும் நாடகத்தின் மூலம் நவீன நாடகரங்கத்துக்கு இவர் புத்துயிர் கொடுத்திருக்கிறார். இவர் "நாகப்பாம்பு; பிசாசுகளின் இலங்கை;" என்னும் வேறு நாடகங்களும் இயற்றி இருக்கிறார்.

**என்ன ஆண்பிள்ளைகள்?** ஆந்திரப் பத்திரிகாவின் 1947 யுகாதி சஞ்சிகையில் பிரசுரமானது. 17—1—1947-ல் பெஜவாடா ஆந்திரப் பிரஜா நாட்டிய மண்டலியில் மேடையில் நடிக்கப்பெற்றது.)

# பாத்திரங்கள்

★

| | | |
|---|---|---|
| வேணுகோபால் | — | |
| சோமசுந்தரம் | — | வேணுவின் பெரியப்பா |
| சுந்தரம்மாள் | — | சோமசுந்தரத்தின் இரண்டாம் மனைவி |
| கிருஷ்ணமூர்த்தி | — | சோமசுந்தரத்தின் தம்பி |
| சங்கர சாஸ்திரி | — | சோமசுந்தரத்தின் நண்பர் |
| கனகாங்கி | — | தாசிப்பெண், வேணுவின் மனைவி |
| நிர்மலா | — | சோமசுந்தரத்தின் மூத்த மனைவியின் பெண் |

(வேளை—நிகழ்காலம்.

இடம்: சோமசுந்தரத்தின் வீடு.

சோமசுந்தரம் சாப்பிட்டபின் வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டிருக்கிருர். வயது சுமார் 50. பழைய காலத்து மனிதர். சப்பட்டை மூக்கு. பருத்த உடல். ஆனாலும் உயரமும் பருமனும் சேர்ந்து ஆஜானுபாகுவாய் இருப்பதால், பார்க்க விகாரமாய் இல்லை.

சுந்தரம்மாள் சோமசுந்தரத்தின் இரண்டாம் மனைவி. மூத்த மனைவி ஒரு பெண்ணை வைத்துவிட்டு இறந்துபோய் விட்டாள். சுந்தரம்மாளுக்கு வயது இருபத்துநாலுக்கு மேல் இருக்காது. ஒற்றை நாடித் தோற்றம் மாறிவிட்டதென்ருலும் இன்னும் பருமன் ஆகவில்லை. அழகாய்த்தான் இருக்கிருள். கட்டும் பொட்டும் புதிய நாகரிகத்தின்படி தான். கிராமபோன் வைத்துக்கொண்டிருக்கிருள்.

பக்கத்திலேயே கிருஷ்ணமூர்த்தி ரிக்கார்டுகளை எடுத்துக் கொடுத்தபடி நிற்கிருன். இவன் சோமசுந்தரத்தின் தம்பி. ஒல்லியான தோற்றம். வயது இருபத்தைந்து. கதர் வேஷ்டி, சட்டை அணிந்திருக்கிருன். கிராப்புத் தலை. மூக்குக் கண்ணுடி அணிந்திருக்கிருன். வயது 25.

சுந்தரம்மாள் ஓய்வாக இருக்கும்போதெல்லாம் கிருஷ்ணமூர்த்தியையே கவனிப்பாள். கிருஷ்ணமூர்த்தி சில சமயந்தான் அவளைப் பார்ப்பான். மற்றச் சமயங்களில் சுவரில் மாட்டிய படங்களையும் மோட்டு வளையையும் பார்த்துக் கொண்டிருப்பான்.

நிர்மலா சோமசுந்தரத்தின் மூத்த தாரத்தின் பெண். வயது பத்து. நிலைப்படிக்கருகே வந்து நின்று பாட்டைக் கேட்கிருள்.)

சுந்தரம்மாள்: (நிர்மலாவைப் பார்த்து) போ! போய்ப் பாடத்தைப் படி! சின்னக் குழந்தைகளுக்குப் பாட்டெதற்கு?

நிர்மலா: பாடமெல்லாம் படிச்சாச்சு, சித்தி!

சுந்: பொய்!

நிர்: இல்லே; நிஜம்மா.

சுந்: பாருங்கள்!

சோமசுந்தரம்: சித்தியை இப்படி எதிர்த்துப் பேசலாமா! இந்தப் பாட்டை மட்டும் கேட்டுவிட்டுப் போ.

சுந்: செல்லப்பெண்!

(நிர்மலா பாட்டு முடிவதற்குள்ளேயே போய்விடுகிறாள்.)

சோம: (பாட்டு முடிந்ததும்) அப்பா! அறுபது நாழியும் இந்த ஹிந்தி நாடகப் பாட்டுத்தானா...! காதைத் துளைக்கிறது!

சுந்: ஐய!...சண்டிதாசில் வரும் பாட்டுக்களாம்! ஸைகால் முதலியவர்கள் பாடியிருக்கிறார்கள்!

சோம: வாழ்ந்தாப்போலே இருக்கு. ராகமா, தாளமா ஒரு மண்ணாங்கட்டியும் இல்லே. ஒரே அழுகை! இத்தனை பாட்டுக்களையும் சேர்த்துப் பார்த்தாலும் ஒரு தியாகையர்வாள் பாட்டில் இருக்கிற சங்கீதம் தேறுமா?

சுந்: அது வேறு; இது வேறு. சினிமாவில் தியாகையர் சுருதி பாடினால் ரசிக்குமா! ரசிக்காது. அதனால்தான் தெலுங்குப் படங்களில்கூட வங்காளி, மராட்டி மெட்டுகளிலேயே பாடுகிறார்கள். 'ஏதி கிருஷ்ணா' என்கிற பாட்டை அன்று நாம் பார்த்த 'சந்திரஹாஸா'வில் கனகாங்கி பாடினாள்.

சோம: சரி, போதும்; இன்னிக்கி இந்த மட்டும் போதும்!

கிருஷ்ணமூர்த்தி: அந்தக் கனகாங்கியைத்தான் நம் வேணு கல்யாணம் செய்துகொண்டிருக்கிறான்.

சோம: யாரோ ஒரு தேவடியாச் சிறுக்கி. கனகாங்கி, ரத்தினாங்கி, சித்திராங்கி யாரானால் என்ன?

சுந்: இனிமேல் நம்மோடு சேர்ந்து இருக்கமாட்டான் அல்லவா? தன் பங்கைக் கொடுத்துவிடும்படிக் கேட்டானா வேணு?

சோம: இல்லே, இல்லே! ஆனால் கேட்காமலா இருக்கப்போகிறான்? கையில் இருக்கும் காசு கரைந்தால் பங்கு வேண்டிக் கேஸ் போடுவான்.

கிரு: அவனே வக்கீல்தானே!

சோம: அதற்காக நான் பயப்படணுமா?

சுந்: ஏன்ஞ? நம்ம தர்ம சாஸ்திரப்படி இந்தக் கல்யாணம் செல்லுமா?...

சோம: நம்ம தர்ம சாஸ்திரமெல்லாம் மண்ணுப் போச்சு! இப்பொழுது நமக்கு வண்ணர் அம்பட்டர்கூடச் சாஸ்திரம் அமைக்கிருர்கள்...சட்டசபையில்!

கிரு: சட்ட ரீதியாக இந்தக் கல்யாணம் செல்லும் மன்னி!

சோம: என்ன சட்டம் இருந்தாலும் சரிதான்! அக்கினி சாட்சியாய், தருமம் அனுமதிக்கும் முறையில், சாஸ்திர சம்மதப்படி, கல்யாணம் செய்துகொண்டவளைத் தவிர, வேருெருத்தி மனைவி என்பதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். தாசிக்குத் தாலி கட்டிஞல் தர்மபத்தினி ஆய்விடுவாளா? நாய்க்குக்கூடத்தான் முனிசிபாலிடியார் தாலி கட்டுகிருர்கள்.

சுந்: நல்ல உபமானம்! உங்கள் வேணு வந்தால் சொல்லுங்கள். (தெருக்கதவைத் தட்டும் ஓசை.) கிருஷ்ணு! யாரென்று பார்!

கிரு: (சிரித்து) வேணு! (என்று சொல்லிவிட்டுப் போகிருன்.)

கிரு: (திரும்பி வருகிருன். கையில் கடிதம் இருக்கிறது) கேளுங்கள், கேளுங்கள்!

சோம: என்ன?

கிரு: டெலிகிராம்! வேணுவிடமிருந்து! இன்றைய எக்ஸ்பிரெஸ்ஸில் வருகிருனும். பெண்டாட்டியோடு.

சோம: ஆ!...நிஜமாகவா?

கிரு: அப்படியாஞல் இப்பொழுதே வந்திருக்கவேண்டுமே! தந்தி தாமதமாகக் கிடைத்திருக்கிறது.

சுந்: என்ன செய்யப் போகிறீர்கள்?

சோம: என்னத்தைச் செய்யறது? இந்த வீட்டில் மட்டும் குடித்தனம் செய்ய விடமாட்டேன். அவன் பாகத்தை அவன் முகத்தில் விட்டெறியத் தயாராய் இருக்கிறேன்.

சுந்: ஆனல்...படியேறி வந்தவர்களை விரட்டமுடியுமா?

சோம: அதைப்பற்றி உனக்கென்ன? என் பொறுப்பு அது.

(மறுபடியும் தெருவில் சத்தம் கேட்கிறது.)

சுந்: அவர்கள்தான்!

(தலையையும் தலைப்பையும் ஒழுங்குபடுத்திக்கொள்கிருள். கிருஷ்ணமூர்த்தி போகிருன். திரை மறைவில் பேச்சு.

'ஹலோ! கிருஷ்ணு! இவள் என் ஒய்ஃப்.?'

'நமஸ்காரம்!'

'சாமான்களை இந்த அறையிலேயே வைத்துவிடு.'

'ஏ கூலி!'

'ஹௌ ஈஸ் எவ்வரி படீ?'

கிருஷ்ணமூர்த்தி, மனைவி கனகாங்கியுடன் வேணுகோபால் ஆகியவர்கள் பிரவேசிக்கிருர்கள். வேணுகோபால் சோமசுந்தரத்தின் அண்ணு பிள்ளை. வயது முப்பது. நடை உடை பாவனைகள் நவீன நாகரிகமுறையில் அமைந்தவன். அறிவைவிட ஊக்கம் மிகுந்தவன், வக்கீல்.

கனகாங்கி வேசியர் குலத்தில் பிறந்தவள். முதலில் தொடங்கியது குலத் தொழில்—வேறு வழி இல்லாததால். அழகு, சங்கீதப் பயிற்சி, சாமர்த்தியம் எல்லாம் அமைந்திருந்ததால் புகழேணியில் ஏறிவிட்டாள். அவளைப் பிலிம் கம்பெனியார் வலை வீசிப் பிடித்தார்கள். நடிகை ஆனுள். அந்தக் கணத்திலேயே குலத்தொழிலை உதறிஞள். புதுச் சொக்காயைக் கண்டவுடன் பழையதை உதறுவதுபோல. பணமும் புகழும் விரும்பியபடி கிடைத்தாலும் கௌரவத்திலும் சம்பிரதாயத்திலும் அபிமானம் உள்ளவள். கல்யாண முறையைக் கௌரவமாக மதிப்பவள். வயது கிட்டத்தட்ட முப்பது ஆனுலும் இருபத்தைந்தே மதிக்கலாம்.)

வேணு: சித்தப்பா! நமஸ்காரம். சித்தி! அடையாளம் புரிகிறதா?... உங்கள் நாட்டுப் பெண்ணை எல்லோருக்கும் அறிமுகம் செய்து வைக்கவே அழைத்து வந்தேன்.

கனகாங்கி: நமஸ்காரம்.

சுந்: உட்காருங்கள்!

கிரு: நன்ருயிருக்கிறது சித்தி! நாட்டுப் பெண்ணுக்கு மரியாதை!

வேணு: என்ன சித்தப்பா! போன வருஷம் பார்த்ததற்கு இப்பொழுது ரொம்ப வயசான மாதிரியாய் விட்டீர்களே! உடம்பு ஒன்றும் இல்லையே!

சோம: ஊஹாம்! எனக்கொன்னும் இல்லே. சளிகூடப் பிடிக்க வில்லே. நீதான் என்னேவிடச் சோர்வாக இருக்கிருய்!

வேணு: அது பிரயாணம் செய்த அலுப்பினல்...சித்தி! நாட்டுப் பெண்ணே அழைத்துக்கொண்டுபோய்த் தண்ணீர் கிண்ணீர் கொடுக்கலாமே!

சுந்: இப்படி வா அம்மா! (வழி காண்பிக்கிருள்)

கன: (குதித்தெழுந்து) ஓ! அப்படியே!...(சுந்தரம்மாளுடன் உள்ளே போகிருள். கிருஷ்ணமூர்த்தி அவளுடைய சுரு சுருப்பையும் அவள் அசைவுகளில் உள்ள ஜீவகளேயையும் கண்கொட்டாமல் பார்த்து மகிழ்கிருன்.)

சோம: பையா! ஏது இப்படித் திடீர் வரவு?

வேணு: (சிரித்துக்கொண்டே) ஆச்சரியமாக இருக்கிறதா? ஆம்; எங்களுக்கே நேற்று வரையிலும் தோன்றவில்லே. ஞாயிற்றுக் கிழமை லீவ்நாள்தானே. உங்கள் எல்லோரையும் ஒரு தடவை பார்த்துவிட்டு வரவேண்டும் என்று கனகாங்கி சொன்னுள். சரி என்றேன். (தாழ்ந்த குரலில்) கனகாங்கிக்கு உங்கள் எல்லோரிடத்திலும் நல்ல மதிப்பு; பக்திகூட. அவளுக்குக் கொஞ்சமாவது, தான் என்ற பெருமையோ கர்வமோ இல்லே.

சோம: ஆனு...மறுபடியும்...

வேணு: எங்கள் பிரயாணமா? ராத்திரியோ நாளேயோ?

சோம: அப்படியா......? கிருஷ்ணமூர்த்தியோடு ஏதாவது பேசிக் கொண்டு இரு. நான் அப்படியே கடைப்பக்கமாப் போயிட்டு வரேன். (போகிருர்.)

வேணு: என்ன கிருஷ்ணு? ஏதாவது விசேஷம் உண்டா?

கிரு: சரிதான் போ. கிணற்றுத் தவளேயாக இருக்கும் நான் என்ன விசேஷத்தைச் சொல்லப்போகிறேன்.

வேணு: அப்படிச் சொன்னுல் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். பட்டணத்து விசேஷங்கள் வேறு; பட்டிக்காட்டு விசேஷங்கள் வேறு. அது பேககடடும்; உன் கல்யாணம் எப்பொழுது?

கிரு: பிள்ளேயாருக்கு நடந்த மறுநாள்.

வேணு: நான் கூட அப்படித்தான் சொல்லிக் கொண்டிருந்தேன்.

கிரு: எல்லோருக்கும் வழியிலே தங்கம் கிடைத்துவிடுமா?

வேணு: அப்படி யென்ருல்?

[சுந்தரம்மாளும் கனகாங்கியும் வருகிருர்கள்.]

கன: (கிருஷ்ணமூர்த்தியின் பேச்சைக் கேட்டு விட்டாள்.) என்னைக் கேலிசெய்கிருர். என்னிடம் இல்லாவிட்டாலும் என்பெயரில் தங்கம் இருக்கிறதல்லவா?

வேணு: (சிரித்து) ஓஹோ! கனகாங்கி என்பதனுலா?

கிரு: (கனகாங்கியிடம்) என்னம்மா! என்மேல் அநியாயமாகப் பழி சுமத்துகிறீர்களே. உங்கள் பெயர் உங்களுக்கும் பொருத்த மாகவே இருக்கிறது. உள்ளதைத்தான் சொல்லுகிறேன்.

சுந்: வேணு! நீ காபி சாப்பிட வேண்டாமா?

வேணு: 'யஸ்', காபி என்றதும் நினைவு வருகிறது. என் பழைய நன்பன் ராமாராவைச் சந்தித்து அவனுடன் ரமணம்மாவின் காபிஹோட்டலைத் தரிசித்து வரவேண்டும். தவறக் கூடாது. கனகம், போய்விட்டு வரட்டுமா?

கன: ஐயோ! என் உத்தரவுப்படிதான் நடக்கிறீர்கள் போல் இருக் கிறது. உங்கள் மனிதர்கள் எதிரில் என்னைக் காட்டிக் கொடுக் கிறீர்கள்; அவ்வளவுதான்.

வேணு: 'ஆல்ரைட்' பார்டன் மீ; குட்பை; (போகிருன்).

(சற்று நேரம் யாரும் பேசுகிறதில்லை, கிருஷ்ணமூர்த்தி கனகாங்கியைக் கண்ணுலேயே விழுங்கி விடுகிருன். சுந்தர ம்மாள் கிருஷ்ண மூர்த்தியைக் கோபத்துடன் பார்க்கிருள்.)

கன: ஓஹோ! கிராமபோனு? உங்களுக் கெல்லாம் சங்கீதம் என்ருல் ஆசை போல் இருக்கிறது!

கிரு: எனக்கு ரொம்ப ஆசை......அதுவும் உங்கள் பாட்டு ரொம்பப் பிடிக்கும்.

கன: என் பாட்டா? டாக்கிகளில் வருபவை தானே! எல்லாம் இரண் டாந்தரமான ஹிந்தி மொழிபெயர்ப்புக்கள் அல்லவா அவை!

கிரு: இருந்தாலும் உங்கள் குரல்! அது முதல்தரம்தானே!

கன: என்குரலை நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும்.

கிரு: நான் ஒருத்தன்மட்டுமா......எவ்வளவோபேர் ஆயிரம்-பதினா யிரம் பேருக்குமேலேயே............

சுந்: உங்கள் ஊர் எது?

கன: ஒரே ஊரா! பிறந்தது ஏலூரில். வளர்ந்தது காக்கி நாடாவில். நாடகங்களுக்கும் பிலிம்களுக்குமாகப் போன ஊர்கள் எத்தனையோ! பம்பாய் கல்கத்தா உள்பட.

கிரு: நாங்கள் பிறப்பது, வளருவது, சாவது எல்லாம் ஒரே ஊரில் தான்!

கன: அமைதியான மனிதர்கள்!

கிரு: அல்ல; அல்ல! நடைப்பிணங்கள்.

சுந்: இவ்வளவு இடங்களுக்கும் தனியாகவே போவீர்களா?

கன: அப்படி யென்றால்?

சுந்: எங்கள் வேணுவைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு முன்?

கிரு: இது என்ன கேள்வி, மன்னி?

கன: பதில் சொல்லுகிறேன்...........பத்துப்பேர் நடுவில் தனியாகவே.........

சுந்: புரியாத பிரச்னை.

கன: கலப்பில்லாத உண்மை.........

கிரு: பலே! எவ்வளவு பாவத்தைக் கொட்டி விட்டீர்கள்!

சுந்: (கோபத்துடன்) என்னமோ! எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் மக்குப்பினம்......நீங்கள் பேசிக்கொள்ளுங்கள். நான் வீட்டு வேலையைப் பார்க்கிறேன். (விசுக்கென்று எழுந்திருந்து போய் விடுகிறாள்.)

(கிருஷ்ணமூர்த்தி கனகாங்கியைப் பார்க்கிறான். கனகாங்கி குப்பென்று சிரிக்கிறாள். கிருஷ்ணமூர்த்தியும் சிரிக்கிறான். சிரிப்பொலி......)

கன: கோபம் வந்துவிட்டது, உங்கள் மதனிக்கு.

கிரு: எதற்காக?

கன: உங்களுக்குத்தான் தெரியவேண்டும்.

கிரு : அது கிடக்கட்டும். ஒருபாட்டுப் பாடுங்களேன் !

கன : ஐயையோ ! இங்கே பாடுவதா ?

கிரு : ஏன் ? இது காடா ?

கன : காட்டில் நிம்மதியாய்ப் பாடலாம். துஷ்டமிருகங்கள் கூடப் பாட்டைக் கேட்டால் அமைதியாக இம்சை செய்யாமல் இருக்குமாம்.

கிரு : அப்படியானல் இந்த வீடு காட்டை விடக்கொடியது. புலி, சிங்கங்களை விட நான் கொடியவன் என்பதுதானே உங்கள் கருத்து ?

கன : அப்படியெல்லாம் கற்பனை செய்தீர்களானல் என் உயிரேபோய் விடும். சரி ; மெதுவாகப் பாடுகிறேன்.

(ஹிந்திப்பாட்டுப் பாடுகிருள்)

[கிருஷ்ணமூர்த்தி மெய்மறந்து போகிருன். அந்த மெல்லிய குரல் அவனை மேலும் தலை இறங்கவைக்கிறது. அவள் பாடும்போது சற்றுத்தூக்கிய கழுத்தும் மலர்ந்த கண்களும் துடிக்கும் மூக்கும் அவனை மோகக்கடலில் ஆழ்த்தி விடுகின்றன.]

கிரு : அப்பாடா ! என்ன உல்லாசம் ! என்ன ஆனந்தம் ! (தெரிந்தோ தெரியாமலோ திடீரென்று கனகாங்கியின் கையைப் பிடிக்கிருன்.)

கன : (பாட்டை நிறுத்தி) நிறுத்துங்கள் ! என்ன இது ? தன்னையே மறந்து விடுகிறீர்கள் ! (கையை இழுத்துக் கொள்ளப் பார்க்கிருள்.)

கிரு : (வெறியோடு) விடமாட்டேன்...... தங்கம் கைக்கு அகப்பட்டால் நழுவ விடுவேனு ?

(வேணு பிரவேசம்)

வேணு : ஹலோ !

(அவர்களைப்பார்த்து விட்டு நிற்கிருன்)

கிரு : (கனகாங்கியின் கையை விட்டுவிட்டு வேணுவின் பக்கம் பார்க்காமலேயே) ரொம்ப தாங்க்ஸ் ! பாட்டு அற்புதமாய் இருந்தது (இப்படிச் சொல்லி விட்டுப்போய் விடுகிருன்.)

கன : (கிருஷ்ணமூர்த்தி போனவுடன் கொல்லென்று சிரித்து) வாருங்கள் ! வாருங்கள் ! நிறைய விசேஷம் இருக்கிறது வாருங்கள் !

[ வேணு சிரிக்கவில்லை. உற்சாகம் காட்டவுமில்லை ]

கன : உங்க வீட்டுச் செய்திகளைச் சொல்கிறேன் ! வந்து உட்காருங்க !

வேணு : அதற்குள்ளே விசேஷமா ?

கன : வேண்டியமட்டும்......ஆனால் தர்க்கம் பண்ணாமல் கேட்கணும். முதல் விசேஷம்...உங்க சித்திக்கு மைத்துனர்மேலேயே மனசு

(வேணு திடுக்கிடுகிறான்)

கன : சந்தேகமே இல்லை. அவள் அவரைக்கண்ணால் பார்க்கிறதில்லை விழுங்கியே விடுகிறாள். பாவம் ! அவர் அதைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. அல்லது புரிந்து கொண்டும் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் குழம்பித் தவித்துக்கொண்டிருக்கவேண்டும். இரண்டாவது விசேஷம். நான் வந்தது முதல் உங்க கிருஷ்ணமூர்த்திக்கு என மேலேயே கண். நல்ல பருவம். பிரம்மசாரி ! சங்கீத சாகித்தியங்களில் ரசனை இருக்கிறது. இந்த விஷயத்தை அப்பொழுதே உங்க சித்தி கண்டு பிடித்துவிட்டாள். .........இது மாதிரி விஷயங்களைப் பெண்கள் சீக்கிரம் கண்டு பிடித்துவார்கள்.

வேணு : அப்புறம் ?

கன : நாங்கள் மூணுபேருமாய் உட்கார்ந்து இரண்டே நிமிஷம் பேசுவதற்குள் சித்தி கோபித்துக்கொண்டு புஸ்வாணம் போல் சீறி எழுந்திருந்து போய் விட்டாள். நாங்கள் இரண்டு பேர்தான் இருந்தோம். அவர் என்னைப் பாடும்படி கெஞ்சினார். பாடும் போது தீடீரென்று கையைப்பிடித்தார். பைத்தியம் ! உண்மையில் அவ்வளவுதூரம் நிலை தவறிவிடுவாரென்று நான் எண்ணவில்லை. அதே சமயத்தில் நீங்கள் வந்து விட்டீர்கள் ; திரௌபதியின் மாணங்காக்க வேணுகோபால மூர்த்தி வந்தது போல்.........

வேணு : தலை சுத்தறது ; ராத்ரியே கட்டாயம் போய் விடணும்.

(உள்ளே போகிறான்)

(கனகாங்கி தனிமையில் ஏதோ ராகத்தை முணு முணுத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருள். நிர்மலா மெதுவாக வருகிருள்.)

கன: வாம்மா, வா! நீ யார் வீட்டுப்பெண்?

நிர்: இந்த வீட்டுக்காரரின் பெண்தான்.

கன: அம்மா என்ன செய்கிருள்?

நிர்: (பேசாமல் இருக்கிருள்.)

கன: என்னேடு பேச வேண்டாமென்ருர்களா?

நிர்: (அழுதுகொண்டே) எங்க அம்மா இல்லே; செத்துப் போயிட்டா!

கன: (உருக்கத்துடன்) வா, என் கண்ணல்லவா? அழவேண்டாம். வா! (கையைப்பிடித்து இழுத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொள்ளுகிருள்.)

நிர்: சித்தி பார்த்தாத் திட்டுவா.

கன: நான் இருக்கிறேன். பயமில்லே. படிக்கிருயா?

நிர்: ஓ! எங்க பள்ளிக்கூடத்துலே பாட்டுக்கூடச் சொல்லித்தராளே! எனக்குப் பாட்டு ரொம்பப் பிடிக்கும்!

கன: நான் பாடட்டுமா?

(நிர்மலா சந்தோஷத்துடன் தலையை ஆட்டுகிருள்.)

கன: ("சக்கனிராஜமார்க்கமு" என்கிற கிருதியைப் பாடுகிருள். பின்புறமாகச் சோமசுந்தரம் பாட்டை ரசித்துக் கேட்டுக் கொண்டே வருகிருர்.)

சோம: (பாட்டு முடிந்ததும்) வெகு அருமையாய்ப் பாடுகிருய். அதுவும்கிருதி. தங்கமான பாட்டு.

(நிர்மலா நழுவுகிருள்.)

கன: (எழுந்திருந்து மரியாதையாக) உட்காருங்கள். மாமாவுக்கு இந்தக் கன்னுபின்னு ஹிந்துஸ்தானி மெட்டுக்களைவிடப் பழங் காலத்துக் கீர்த்தனைகள்தான் பிடிக்கும் போல் இருக்கிறது.

சோம: ஆம், நன்ருகச் சென்னுய்! என்ன கண்ணராவி ஹிந்துஸ்தானி மெட்டுகள்.........

கன : எனக்கும் நம் சங்கீதத்தின் மேல் தான் ஆசை. சிறு வயதில் கொஞ்சம் கற்றுக்கொண்டேன். கிருதிகள், பதங்கள், ஜாவளிகள்.........

சோம : ஜாவளி கூடத்தெரியுமா ?

கன : ஏதோ சில ஜாவளிகள். பாடட்டுமா ?

சோம : மெதுவாகப்பாடு. நிதானமாய், நயமாய்ப் பாடினுல் தான் ஜாவளி சுகமாய் இருக்கும்,

கன : அடேயப்பா. மாமா நல்ல ரசிகர்தான் !

(ஜாவளி பாடுகிருள்)

சோம : பலே, பலே ! சிறு வயதில் படித்த மனுசரித்திரம் நினைவு வருகிறது, உன்குரலைக் கேட்கும்போது. (கொஞ்சம் ராகத்தோடு இசைய) "இனிமை பிறக்க வீணை நாதத்தால் கல்லையும் கரைக்கும் குற்றமற்ற சங்கீதம் எங்கள் வித்தை" ......(என்று பாடுகிருர்)

கன : (கைதட்டி) சங்கீதம் இலக்கியம் எல்லாவற்றிலுமே மாமனுருக்குப் பழக்கம் இருக்கிறது !

சோம : (உடம்பையே மறந்து விடுகிருர். நாற்காலியை அவளுக்குப் பக்கத்தில் நகர்த்திக்கொள்கிருர்.) எங்கே ! இன்னும் பதம் ஒன்று.

(கனகாங்கிபாடுகிருள். சோமசுந்தரம் தாளம்போடுகிருர். தவறியோ, வேண்டுமென்றே தானே ஓர் அடியைக் கனகாங்கியின் தொடைமேல் போடுகிருர்.)

கன : (சட்டென்று பாட்டை நிறுத்தி விட்டு, எழுந்திருந்து நிற்கிருள் சுருதி மிஞ்சிப் போச்சே !

சோம : (அசடுவழிய எழுந்திருந்து பேந்தப் பேந்த விழுக்கிருர். தெருக்கதவைத் தட்டும் ஓசை கேட்கிறது) வறேன், வறேன்.

(இப்படிச்சொல்லிக் கொண்டே வேகமாகப் பேய், சங்கர சாஸ்திரியுடன் திரும்பி வருகிருர். சங்கர சாஸ்திரி சோமசுந்தரத்தின் நண்பர். ஏறக்குறையச் சமவயதினர், ரசிகர்.)

சங்கர : யாரது ? கனகமா ?......கனகந்தான் !

கன : சாஸ்திரியார்!

சோம : (இனிமேல் இங்கே இருக்கக் கூடாதென்று நினைத்து) உட்கார், உட்கார், இதோ வந்துவிட்டேன்!

(போகிருர்)

சங் : நிஜமாகப் பார்ப்பது என் கண்தானு? நான் விழித்துக் கொண்டுதான் இருக்கிறேனு? பார்த்து எந்தக் காலமாச்சு?

கன : அவ்வளவு அன்பு இருக்கிறது!

சங் : (உட்கார்ந்து) நான் என்ன செய்யட்டும்? நீதான் எட்டாப் பழமாய் விட்டாய்...ஆமாம்! இங்கே எப்படி வந்தாய்? ஆச்சரியமாய் இருக்கிறதே?

கன : இன்னும் ஆச்சரியம்...நான் யாரென்று நினைத்தீர்கள்?... சோமசுந்தரத்தின் மருமகள்.

சங் : (கலகலவென்று சிரித்து) அப்புறம்?

கன : நீங்கள் நம்பவில்லை, சத்தியமாச் சொல்றேன்.

சங் : அப்படியென்ருல் வேணு உன்னைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிருனு?

கன : ஆம்

சங் : எப்படி? செல்லுமா?

கன : ஓ! சட்டம் இருக்குதாம்.

சங் : கெட்டிக்காரி! என்னவேலை செய்தாய்? சோமசுந்தரத்தின் வமிசத்தார் வடிகட்டின ஆசார சீலர்கள் என்பது பிரசித்தம். நீ திக்விஜயமே செய்துவிட்டாய்! கிழவன் ஒப்புக்கொண்டானு?

கன : கல்யாணம் நடந்தபிறகுதான் அவருக்கு விஷயம் தெரியும். என்னை இன்றைக்குத்தான் பார்த்தார்.

சங் : எரிந்து விழுந்தானு?

கன : இல்லை. நான் வந்தவுடன் 'கப், சிப்'பென்று மேலே போய் விட்டார். திரும்பி வந்தார். அப்பொழுது பக்கத்தில் யாரும் இல்லை. என்கிட்டவே வந்து உட்கார்ந்துகொண்டார். பாடச் சொன்னுர். என் பாட்டைப் புகழ்ந்தார்.

சங் : அடபாவி !

கன : (சிரித்துக்கொண்டே) பாட்டை ரசித்துக்கொண்டே தன்னை மறந்து தவறிப்போய் என் தொடையில் தாளம் போடத் தொடங்கினர்.

சங் : அட, கிழட்டு நரியே ! (விழுந்து விழுந்து சிரிக்கிருர்.)

கன : (சிரித்து) பாவம் ! நான் அதட்டினேன் ! நடுங்கிப் போய் விட்டார்.

சங் : என்ன அவஸ்தை ?

(இருவரும் சேர்ந்து சிரிக்கும்போது வேணுகோபால் வருகிருன்.)

வேணு : (கடுமையாக) கனகம் என்ன இது ?...சாஸ்திரிகளே ! நமஸ்காரம் !

சங் : வெகுகாலமாய் விட்டதல்லவா, வேணு ? கேள்விப்பட்டேன். கனகம் சொன்னுள். நீ அதிருஷ்டசாலி. கனகம் நல்ல பெண்.

(வேணுவுக்கு இந்தப் பேச்சுப் பிடிக்கவில்லை.)

கன : சாஸ்திரியாருக்கு என்னைச் சிறு வயசிலிருந்தே தெரியும்.

வேணு : ஓஹோ !

சோம : (பிரவேசித்து) சங்கரா, வாடா ? (என்று தெருப்பக்கமாகப் போகிருர்.)

சங் : கனகம் ! போய்வருகிறேன். கொஞ்ச நாட்கள் இருப்பீர்களா?

வேணு: இல்லை ; ராத்திரி போகிருேம்.

சங் : சரி, போய் வருகிறேன்.

(சோமசுந்தரம், சங்கர சாஸ்திரி இருவரும் போதல்)

கன : ஏன் இவ்வளவு கோபம் ?

வேணு: உன் போக்கு வெகு அழகு ! வந்து முழுசா ஒருநாள் ஆக வில்லை. கிருஷ்ணமூர்த்தியோடு சரஸம் ; யாரோ ஊர் பேர் தெரியாத சாஸ்திரியோடு விளையாட்டு ! சித்தியிடம் சண்டை !

கன : ஆமாம். எல்லாம் என் குற்றந்தானு ? கிழவனைக் கட்டிக் கொண்டு உங்க சித்தி மச்சினரைக் கண்டு மயங்குவதும் என்

குற்றம். பித்துக்குள்ளிப் பிரம்மசாரி அழகான பெண்ணைக் கண்டதும் அசட்டுப் பிசட்டென்று நடந்துகொள்வதும் என் தவறுதான். மச்சினன் என்மேல் கண் போட்டானென்று அந்த அம்மாள் ஆத்திரப் படுவதும் என் தப்புத்தான். ஐம்பது வயசுக் கிழம்—தர்ம சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்த உங்க சித்தப்பா—நான் தனியாய் இருக்கும்போது என் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டு முறை தவறி என் தொடைமேல் கை போடுவதும் என் குற்றந்தான். ஒரு காலத்தில் காக்கி நாடாவில் எங்கள் பக்கத்து வீட்டில் இருந்த சாஸ்திரிகளுடன் இந்தச் செய்தியைச் சொல்லிச் சிரித்ததும் என் தவறுதான்!

வேணு: ஆம்...ஆம்...அத்தனை தூரத்துக்குப் போய்விட்டாரா, சித்தப்பா! உன் உடம்பாடு இல்லாமலா அது நடந்திருக்கும்? கிருஷ்ணமூர்த்திதானாகட்டும்! அப்படிச் செய்வானா? நீதான் அவர்கள்மேல் வலை வீசியிருப்பாய்!

கன: ராம, ராமா!

வேணு: போதும், போதும்! ஊழல்! பழைய புத்தி எப்படிப் போகும்?

கன: (ஏங்கிய முகத்துடன் எழுந்திருந்து) அப்படிச் சொல்லாதீர்கள். என்னைக் கொல்லுகிறீர்கள்!

வேணு: உன்னைப் பத்து நிமிஷ காலம் விட்டு விட்டுப் போகப் பயமாய் இருக்கிறது. நீ என்ன வேண்டுமானாலும் செய்வாய். உன்னைப் போன்றவர்களைக் கல்யாணம் செய்துகொள்வதுதான் தவறு.

கன: என்ன?

வேணு: அதற்குள் இரண்டுபேரைக் கெடுத்துவிட்டாய்!

கன: நானா? வெறிநாய்போல் அவர்கள் என்மேல் விழுந்தால்...

வேணு; சட்! வாயை மூடு!

கன: (பொங்கிவரும் அழுகையையும் கோபத்தையும் அடக்கிக் கொண்டு) ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?

வேணு: இன்று ராத்திரியே போய்த் தீரவேண்டும்!

கன : சரி !

(வேணு உள்ளே போகிறான்.)

கன : (கண்ணீரைத் துடைத்துக்கொண்டு வெறுப்புடன் உதட்டைப் பிதுக்கித் தாலியைக் கையால் அறுத்தெறிந்துவிட்டு) *சீச்சீ!* என்ன ஆண்பிள்ளைகள் ! (என்று திட்டிவிட்டுத் தெருப்பக்கம் போகிறாள்.)

# 2. தலையெழுத்து

★

ஆசிரியர் :

ஸ்ரீ நார்ல வெங்கடேசுவர ராவ்

(ஆந்திரப் பிரபா வாரப் பத்திரிகையின் ஆசிரியர். பந்தர், நோபில் கல்லூரியில் படித்தவர். தெலுங்கு இலக்கிய அரங்கில் மிக்க உழைத்துப் புகழ் பெற்ற மேதாவி.

"புதிய கிழங்கு; நார்லவாரு பேச்சு; உலக நாடகம்;" என்ற பலவகைப் படைப்புக்களின் கர்த்தா.

**தலையெழுத்து** 1944-ல் இயற்றப்பெற்று 1947-ல் பிரசுரமாகினாலும், 1944-லேயே சென்னை, மியூசியம் தியேட்டரில் நடிக்கப்பெற்றதாகும்.)

## பாத்திரங்கள்

★

| | | |
|---|---|---|
| லக்ஷ்மையா | — | நாட்டுப்புறத்துக் குடியானவர் |
| மாணிக்கம்மா | — | அவர் மனைவி |
| கிருஷ்ணமூர்த்தி | — | அவர் மகன் |
| கமலம் | — | அவர் மகள் |
| டாக்டர் | — | |
| வண்டிக்காரன் | — | |

[ இடம் : லக்ஷ்மையாவீட்டுக் கூடம்.

காலம் : தற்காலம்.

லக்ஷ்மையா வீட்டுக்கூடம். வலப்புறம் தலைவாசல்படி இடப்புறம் கொல்லை வாசல்படி. எதிர்ப்புறச் சுவரின் நடுவே ஓர் அலமாரி. அதற்கு வலப்பக்கம் சமையல் அறைக் கதவு. இடப்புறம், படுக்கையறைக் கதவு.

சுவரில் ஸ்ரீராமர், கிருஷ்ணர், திருப்பதி வெங்கடேசுவரர், லங்காதகனம் முதலிய படங்கள். ஒரு படத்தின் மேல் அதே ஆணியில் மாட்டிய விசிறி ஒன்று தொங்குகிறது. கூடத்தின் ஒரு மூலையில் மூங்கில் பரண். அதன் மேல், தவிடு, கொள்ளு மூட்டைகள்.

திரை விலகும்போது லக்ஷ்மையா நடுக்கூடத்தில் உட்கார்ந்திருக்கிறான். அவன் வயது நாற்பத்தைந்துக்குமேல் ஐம்பதுக்குள் இருக்கும். ஐந்தேகால் அடிக்கு மீறுதஉயரம். பருமன் இல்லாவிட்டாலும் குள்ளமானதால் புளிமூட்டை போல் காணப்படுவான். சிறியதொந்தி குச்சிபோன்ற தலைமயிர். குடுமி, பின்னல் முடிச்சு. க்ஷவரம் செய்து கொள்ளச் சாமானியமாக நல்ல நாள் கிடைக்காததால் எப்பொழுதும் தாடியும் மீசையும் வளர்ந்த தோற்றம். பழுப்பேறிய வேஷ்டி உடுத்துத் தோளில் ஈரத்துண்டைப் போட்டிருக்கிறான்.

திரை விலகும்போது அவன் பட்டை நாமம் இட்டுக் கொள்ளும் வேலை முடியும் தறுவாயில் இருக்கிறது. அவன் முன், திருமண் பெட்டி, தண்ணீர்ப் பாத்திரம், பெட்டியைச் சுற்றிலும், கண்ணாடி, நாமக்கட்டி, ஸ்ரீசூர்ணக் குடுக்கை, ஈர்க்குச்சி முதலியவை பரப்பிக்கிடக்கின்றன.]

லக்ஷ்மையா : (கண்களைமூடியபடி கைகூப்பி) பரமாத்மா! புனித மூர்த்தி! பரமகல்யாண குணபரனு! பாபஹரனு! புண்டரீக வரதா! பக்த வத்ஸலா! பிறவிக்கட்டை அறுப்பவனே! தாமரைக் கண்ணு! பாம்பின்மேல் படுத்தவா! கருணாநிதி! காமி தார்த்த வரதா! நந்தகுமாரா! நவநீத சோரா! லட்சுமீ நாயகா! யானைபோல் நடப்பவனே! அழகனே! மந்தரம் தூக்கியவா! அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகா! அடி முடி நடுவற்ற வனே! அப்ரமேயா! ஆனந்தரூபா! அநாத ரட்சகா! கவிலோக ரஞ்சகா! காளிங்கனை அடக்கியவா! சதானந்தா சச்சிதானந்தா! முகுந்தா! கோவிந்தா! கஜராஜவரதா! கருடத்வஜா! தானவ மர்த்தனு! ஜனுர்த்தனு! தர்மவர்த்தனு! ஏழை பங்காளா!

(மாணிக்கம்மாள், அறைவாயிலுக்கு வருகிருள். அவ ளுக்கு வயது நாற்பதுக்குக் கிட்டத்தட்ட இருக்கலாம். நாகரிகக்கலப்பற்ற கிராமத்துப் பெண்மணி. கஷ்டம், சுகம் எது வந்தாலும் தாங்கமாட்டாள்.)

மாணிக்கம்மாள் : (வாயிற்படிக்கருகில் நின்று கொண்டே) இன்னும் உங்களோட ஜபதபம் எல்லாம் முடியல்லியா?

லக்ஷ் : (காதில்வாங்காமல்) கோவர்த்தனமலை எடுத்தவனே! கோபி கைகளின் துகில்களைத் திருடியவனே! முனிஜன வந்திதா! முசுகுந்த வந்திதா! முத்தி தருபவனே! குழல் ஊதுபவனே பொன்னுடை தரித்தவனே! கம்சமர்த்தனு! ராதா மனோஹரா! சந்திரனைப் பழிக்கும் முகம் உடையவனே! நீலமேக சியாமளா! நிர்மல நாமா!

மாணி : (அங்கிருந்தே) உங்களுக்குப் புண்ணியம் உண்டு. இன்னிக் காவது கொஞ்சம் வேகமா முடிச்சுக்கிங்க.

லக்ஷ் : (உரக்க) சர்வேசுவரா! எங்கும் நிறைந்தவனே! சர்வலோக பூஜிதா! சத்திய சங்கல்பா! உண்மையைக் காப்பவனே! உண் மைக்குஇருப்பிடமே! உண்மைக்குக்காவலனே! சுஜனப்ரியா! சாந்தமூர்த்தி!

மாணி : (படிதாண்டி வந்து) என்னங்க! உங்களைத்தானே!

**லக்ஷ்:** (இன்னும் உரக்க) அர்ஜுனன் தோழா! பாசம் அற்றவனே! பாண்டவர் நேயா! திரௌபதியின் மானங்காத்தவனே! தேவகீநந்தனு! யசோதையின் மகிழ்ச்சியை வளர்த்தவனே! அனந்தா! அச்சுதா! மனம் வாக்குக்களுக்கு எட்டாதவனே! வீணாகாத ஆணை செலுத்துபவனே! நரகனை அழித்தவனே!

**மாணி:** (இரண்டடி முன் வந்து) அப்பப்பா! இவள் இங்கே உசிருக்கு மன்றுடும் போதுகூட ஒங்க அழுகைதான் ஒங்களுக்கு!

**லக்ஷ்:** (கோபம் தோன்ற) பரமேச்வரா! நிர்க்குணு! நிஷ்களங்கா! நிருபத்திரவா! நிரஞ்ஜனு! நிரிந்திரியா! நிர்விகல்பா! நிராகாரா! நிர்விகாரா! பரமபுருஷா!

**மாணி:** (இன்னும் அருகே வந்து) உங்களுக்குக் காது செவிடாப் போயிடுச்சா!

**லக்ஷ்:** (கூப்பாடு போடும் ஸ்தாயியில்) பரஞ்ஜோதி சொரூபா! பரந்தாமா! புருஷோத்தமா! புண்ணிய சொரூபா! புண்ணிய நிலயா! புண்ணிய பாவனு! தேவதேவோத்தமா! தேவதா சார்வபௌமா!

**மாணி:** (தலையில் அடித்துக்கொண்டு) என் கர்மம் இது!

**லக்ஷ்:** (சாதாரணமானகுரலில்) சுயம் பிரகாசா! பரதத்துவதீபா! பரிபூர்ணு! ஞானப்ரதா! யோகீசுவரேசுவரா! குசேலவரதா! விசுவநேத்ரா! விமல சரித்திரா! ஹரே கிருஷ்ணு! பாஹி மாம்! பாஹிமாம்! பாஹி! (மும்முறை வணங்கிய பின் கண்ணைத் திறத்து) ஏன் இப்படிக் கழுதையாகக் கத்துறே!

**மாணி:** களுதையாக் கத்திலுைம் காக்காயாக் கத்திலுைம் ஒங்க சடங்கை நீங்க விட்டீங்களா? அந்தப் பொண்ணைக் கொஞ்சம் வந்து பாருங்களேன்! ரொம்ப ஆராட்டப்படுறு!

**லக்ஷ்:** இன்னக்கி அமாவாசை யல்ல! பின்னே எப்படி இருக்கும்? சேஷாச்சாரி கொடுத்த மாத்திரை கொடுக்கல்லியா?

**மாணி:** என்னு மாத்திரையோ! மண்ணுங்கட்டி! அதைக் குடுத்தப் பறம்தான் மேல் மூச்சு ஜாஸ்தியா இருக்குது! சித்தேப் போயி டாக்டரை அழச்சிட்டு வாங்க!

லக்ஷ் : நல்லா வந்து தோணினுன், நமபளுக்கு ஒரு டாக்டர்! நம்ம பெரியவங்களுக்கெல்லாம் டாக்டரா வைத்தியம் பார்த்தான் ?

மாணி : ஏட்டின்னுப் போட்டி! நம்பளுக்கு என்னிக்கும் உள்ளது தானே இது! இன்னிக்கிப் புதுசு அல்லவே!

லக்ஷ் : போதும். நிறுத்திக்க. டாக்டராம்—டாக்டர்! நேத்திக்கிப் பொறந்த அந்தப் பயலுக்குக் கிழக்கு மேற்குச் சரியாத் தெரியுமா சூட்டும் பூட்டும் போட்டுக் கிட்டு, கழுத்துலே மார் நீளம் கொழா யெத் தொங்கவிட்டுக் கிட்டு, பட்லர் இங்கிலீசு நாலு வார்த்தை பேசிப்பிட்டா, பெரிய வைத்தியனுயிடுவானு, அவன்! அதுக்கு எத்தினி சாஸ்தரம் படிக்கணும்! எத்தினி பழக்கம் வேணும்! புத்தி இல்லாதவங்க எல்லாம் டாக்டர், டாக்டருன்னு அவன் காலிலே போய் விழுந்தா நானும் போவேனு?

மாணி : நீங்க ஏன் போவீங்க! என்னக்கி நீங்க என்பேச்சை மதிச் சீங்க, இன்னக்கி மதிக்கறத்துக்கு! பையன் வந்தா அவனுவது .........

லக்ஷ் : (கண்ணுடியை மேல்வேஷ்டியால் துடைத்துப் பெட்டியில் வைத்துக்கொண்டே) அவன் வந்தா வியாதியைக்கிள்ளியெறிஞ் சிடுவானு? யார் வந்தாலும் செய்யப்போறது ஒண்ணுமில்லே! யார் தலையெழுத்தை யாராலே மாத்த முடியும் ?

மாணி : எப்பொப்பாத்தாலும் இந்த வறட்டு வேதாந்தந்தான் என் குடியைக் கெடுக்குது!

(விர்ரென்று உள்ளே போதல்)

லக்ஷ் : (பின்னுலிருந்து) போதும், வாயைமூடு! (திருமண்பெட்டியைச் சரியாக மூடிவிட்டு) கமலம்! (ஒருகணம் நிறுத்தி உரக்க) கமலம்! (மறுபடியும் ஒருகணம் நிறுத்திப் பின்னும் உரக்க) கமலம்!

மாணி : (வாயில் படிக்கருகே வந்து) ஏன் இப்படிக் கூப்பாடு போட நீங்க! அவகொல்லைப் பக்கம் போயிருக்காளோ என்னமோ, என்ன வேணும்?

லக்ஷ் : (கோபமாக) ஒண்ணும் வேண்டாம் போ!

மாணி : உங்களுக்குப் புண்ணியம் உண்டு! இந்தச்சத்தமும் கூப் பாடும் வேண்டாம். இங்கே இவளுக்குத் தூக்கிப்போடுது.

(மாணிக்கம்மா உள்ளே போகிருள். லக்ஷ்மையா திருமண் பெட்டியை அலமாரியில் வைத்து விட்டுத் திரும்பும்போது கிருஷ்ணமூர்த்தி வருகிருன். வயது இருபத்தைந்து இருக்கும். உருவத்தில் தந்தையையும் குணத்தில் தாயையும் போன்றவன். பி. ஏ. பாஸ் செய்து விட்டுப் பட்டணத்தில் வேலே பார்க்கிருன். மல் வேஷ்டி, காலர் ஷர்ட், டபள் பிரெஸ்டு கோட் அணிந்திருக்கிருன்.)

கிரு: அப்பா! தங்கச்சிக்கு எப்படி இருக்குது?

லக்ஷ்: என்னடா, இருந்து இருந்து அமாவாசையிலே வந்தே! நாளேயோ, மறுநாளோ வரக்கூடாது?

கிரு: தங்கச்சிக்கு எப்படி இருக்குதப்பா?

லக்ஷ்: தெரிஞ்சு தெரிஞ்சு அமாவாசையிலே ஏண்டா வந்தே? நாளே மறுநாள் வரக்கூடாதா?

கிரு: தங்கச்சிக்கு எப்படியப்பா இருக்குது?

லக்ஷ்: அமாவாசையல்ல; கொஞ்சம் கடுமையாகத்தான் இருக்குது.

மாணி: (அறையிலிருந்து பாய்ந்து வந்து) என்ன சொல்லறது. அடயப்பா; அவளேப்பத்தி!—ஜொரம் நெருப்புப் பறக்குது. மூடின கண்ணேத் தெறக்கவே இல்லே. என்ன நோவோ, எங்கே நோவோ 'ஆ, ஆ' என்கிற அனத்தல் ஓயவே இல்லே. எம பாதைப்படுது.

கிரு: (தன் கைப்பெட்டி, ஹோல்டால்களே உள்ளே கொண்டுவந்த வண்டிக்காரனுக்குச் சில்லறை கொடுத்துக் கொண்டே) டாக்டர் என்ன சொன்ஞர்?

மாணி: டாக்டரை அளச்சுட்டு வந்தால்ல...

கிரு: நல்லாருக்குது போ. அப்பொ யாரு வைத்தியம் செய்யருங்க?

லக்ஷ்: சேஷாச்சாரி மருந்து கொடுத்திட்டிருக்காரு. அவருக்குக் கைராசி உண்டு.

கிரு: கண்ணெதிரே டாக்டர் இருக்கறப்போ இந்த வேர், விறகு வைத்தியம் எதுக்கு? (தாயிடம்) ஜானகி எங்கம்மா?

மாணி: இப்படிவா, ராஜா, இந்த உள்ளே!

(உள்ளே போகிருள். கிருஷ்ணமூர்த்தியும்கூடப் போகிருன். லஷ்மையா நாமம் இட்டுக் கொள்ள உபயோகித்த தண்ணீரை எடுக்கும்போது கமலம் வருகிருள். அவள் புத்திசாலி. எந்த விஷயத்தையும் நிமிஷத்தில் கிரகித்துக் கொள்வாள். ஆனல் வெளியில் காண்பித்துக் கொள்ளமாட்டாள். அண்ணுவிடமும் அக்காவிடமும் ஆழ்ந்த அன்பு. பாலியத்துக்கும் யௌவனத்துக்கும் இடைப் பருவம். பெரியவர்களுடன் அளவாகப் பழகும் சுபாவம் உள்ளவள்.)

கமலா: அப்பா! என்னைக் கூப்பிட்டயா?

லக்ஷ்: ஆம் அம்மா!

கமலா: என்னத்துக்கு?

லக்ஷ்: ஒண்ணும் இல்லே. உங்க அண்ணன் வந்திருக்கான்.

கமலா: எங்கே?

லக்ஷ்: அதோ அக்காவோட அறையிலே இருக்கான்.

கமலா: அண்ணிகூட வந்திருக்குதா?

லக்ஷ்: இல்லேம்மா!

கமலா: ஏனே?

லக்ஷ்: போக வர ரயில் செலவுதண்டம். உங்க அண்ணி வேறு இப்பொ என்னுத்துக்கு வரணும்.

கமலா: அண்ணியைப் பாத்து ரொம்ப நாளாயிடுச்சே; கூட அளச்சிட்டு வருவானேன்னு பாத்தேன். போனுப் போவுது. பேபியையாவது அளச்சிட்டு வந்திருக்கலாம்.

லக்ஷ்: ஆமா! அவம்மாவை விட்டுட்டு அவ இருப்பாளா, செய்வாளா? சரி; நெத்திக்கு இட்டுக்க எடுத்த தண்ணியெத் தொளசி மாடத்துலே ஊத்து. (கொடுக்கிருன். அவள் வாங்கிப் போகிருள்.)

கிரு : (முகத்தைச் சுளித்துக்கொண்டு கூடத்துக்கு வருகிருன்) என்னம்மா இது! ஜானகி படுத்திருக்கும் அறை ஒரே நாத்தமா நாறுது ?

மாணி : (பின்ஞலேயே வருகிருள்.) நான் என்னமோ மூணுவேளை யும் சாம்பிராணி தூபம் போட்டுக்கிட்டுத்தான் இருக்கேன்? பையா !

கிரு : அதை இருட்டறையாவே பண்ணிட்டீங்க! கொஞ்சம் காத்தும் வெளிச்சமும் வரும்படியா வைக்கக்கூடாதா, அம்மா!

மாணி : ஜொரம் அவளுக்கு நெருப்பாப் பறக்குதே! சில்லுன்னு காத்துப்பட்டா ஜன்னி பொறந்துடுண்டா மகனே!

கிரு : சொன்ஞ உனக்குப் புரியாதம்மா! நல்ல ஒடம்புக்காரங் களுக்கே அந்த நாத்தத்துலே இருந்தா நோவு வந்துடும். தங்கச்சி படுத்து எத்தினி நாளாச்சி ?

(அண்ணனைப் பார்த்துப் பேச வேண்டுமென்ற ஆசை யோடு? சமையல் அறைக் கதவருகே நிற்கிருள் கமலம்.)

மாணி : நாளெக்கி. சரியா ஒரு வாரம் ஆவுது. மூடிய கண்ணெத் தெறக்காமயே கெடக்கரு. என்னம்மாவை நாலு நாள் ஜொரத் தோடெ மொட்டை வண்டியிலெ ஏத்தி ஒம் மச்சான் அனுப்பிச் சிட்டான் பாவி!

கிரு : அவன் மனுசஞ, மிருகமா ?

லக்ஷ் : அவனைச் சொல்லி என்ஞ லாபம் ? அது நம்ப தலையெழுத்து.

மாணி : ஏன்னு கேப்பார் இல்லாமெ, ஏக்கம் புடிச்சுப் போயி, பொசுக்கற வெய்யில்லே வந்தது தங்கச்சிக்குத் தாங்கல்லே. நோவு கைமீறிப் போச்சுடா அப்பா! இப்பொ அதுக்கு நம்ப நியாபகமே இல்லெ. ஒரே மயக்கத்துலே கெடக்குது.

லக்ஷ் : எப்படியோ, மூதேவி வந்து நம்ப தலையிலெ ஏறிக்குந்திக்கிட் டிருக்கா.

கிரு : (தாயிடம்) ஜானகி பேத்தல் தொடங்கி எத்தினி நாளாகுது?

(தன்னை அண்ணன் கவனிக்காததை உணர்ந்து முகம் சற்று வாட்டம் அடைய, கமலம் உள்ளே போகிருள்.)

மாணி : முந்தாநாள் தொடங்கி, காரணம் என்னன்னு தெரியல்லெ. "என்னாலெ இந்தப் பழியைச் சொமக்கமுடியாது"ன்னு ஒரே அழுகை. அழுது அழுது சித்தெக் கண்ணெ மூடிச்சுன்னாலும் அதே பேத்தல்தான். எதுனாச்சியும் காத்து, கறுப்பு, செய்யற வேலேயோன்னு கழிப்புக் கழிச்சுக்கூடப் பாத்துட்டேன். ஏழுமலேயானுக்கு முடிப்புக் கட்டி வச்சிருக்கேன். 'எப்படியோ இந்தக் கண்டம் தாண்டி, என்னம்மாவைப் பொழைக்க வச்சி யானா உன் மலேக்கு வந்து அவ ஒடம்புலே இருக்கிற நகையை அப்படியே உனக்குக் கொடுத்திடறேன்'னு வேங்கடேசப் பெருமாளே வேண்டிக்கிட்டேன். அந்தச் சாமி தயவு எப்படி இருக்குதோ?

கிரு : உடம்பு இவ்வளவு அதிகமா இருக்குதுன்னு அந்த லெட்டர்லெ எழுதியிருந்தா, ஆபீசுக்கு லீவு எழுதிப்போட்டு நேத்திக்கே வந்திருப்பேனே!

லக்ஷ் : நீ பயந்துடுவேன்னுதான் எழுதல்லே. அவளுக்குக் காலம் சரியில்லே. என்ன தலெயிலே எழுதி இருக்குதோ, பட்டுத் தானே தீரனும்.

மாணி : டாக்டரையாவைக் கூட்டியாரச்சொல்லி மூணுநாளா முட்டிக் கிட்டேன். உங்க அப்பா இந்த வாய் வேதாந்தம் பேசிக்கிட்டு.

லக்ஷ் : இந்தா! இந்தப் பேச்சு வேணும்னுதானே வாய் மேலேயே அடிச்சுக்கிட்டிருக்கேன்.

மாணி : (பிள்ளேயிடம்) பார்த்தயா ஆத்திரத்தை! அங்கே அவ படற வாதனேயையும் பார்க்கமுடியல்லே! இங்கே இவர் வாயிலெ விழுந்து எந்திரிக்கவும் முடியல்லே! நான் சாகாம செத்துண் டிருக்கேன். நிசம்மா!

கிரு : சரி விடு; அம்மா! நான் டாக்டரை அளச்சிட்டு வர்றேன். நீ அந்த ஜன்னல் கதவையெல்லாம் தெறந்துவச்சு, சாம்பிராணிப் புகை போட்டு வச்சிரு.

லக்ஷ் : சேஷாச்சாரி உபயோகம் இல்லென்னு நெனச்சுட்டியா தம்பி! அவருக்கு அப்பா வைத்தியர் பாட்டன் முப்பாட்டன் எல்லோருமே வைத்தியர்கள் தெரியுமா. அவங்க குடும்பமே பரம்பரையா வைத்தியம் தெரிஞ்ச குடும்பம். அவங்க வீட்டிலே

இருக்கற லேகியங்கள், குளிகைகள், ரஸ பஸ்மங்கள் எல்லாம் லேசுன்னு பாத்தியா! ஒருவாட்டி எனக்குக் கால் கொடச்சல் எடுத்துக்கிச்சு. அப்பொ அவரு கொடுத்த கூச்மாண்ட லேகியம் என்னமா வேலே பண்ணிச்சுங்கிறே!

கிரு: ஒருவாட்டி டாக்டரைக் கூட்டியாந்து காமிக்கறது எதுக்கும் நல்லதில்லேயா, அப்பா!

லக்ஷ்: ஆ! அவளுக்கு ஒரு நோவும் இல்லேயாண்டா! அவ ஒடம்பே கணச்சூட்டொடம்பாம். அதோடு பித்தம் தலேக்கேறியிருக்கிறது. அவர் நாடியை நிதானிப்பதில் சூரப்புலி. எந்த நோயையும் இன்னதென்று நொடியில் கண்டுபிடிச்சிடுவார். மருந்து கொடுக்கறதுலேயும் அவருக்கு மிஞ்சிய ஒத்தன் இருக்க முடியாது. டாக்டர்கள் உள்ளே நொழஞ்சது மொதலா, ஊசின்னும், பாட்டிலுன்னும் என்ன தடபுடல் செய்யருங்க! எத்தினி பணம் பறிக்கிருங்க! அளச்சிட்டு வந்தாப் போதுமா? எந்த நோவும் அதது போறப்பத்தான் போவும்!......

மாணி: ஆச்சு! மறுபடியும் தொடங்கிட்டாங்க!

லக்ஷ்: என்னது?

மாணி: உங்களுக்குத் தெரியாதாங்காட்டியும். என் வாயாலெ நான் வேறெ சொல்லணுமா?

லக்ஷ்: இந்த வாய் வேணுன்னுதான் முட்டிக்கிறேன்.

மாணி: பாத்தியாடா! இப்ப நான் என்ன சொல்லிட்டேன்! சரி! அது கெடக்கட்டும்! எனக்குத் தினங் கேக்கற ராமாயணந்தான் இது. நீ போய் டாக்டரையாவெ அழச்சிட்டுவா. கண்மூடித் தெறக்கறபொழுதுலே வரணும்டாப்பா!

கிரு: நல்லதம்மா? (போகிருன்)

லக்ஷ்: (கோபத்தில் குதிக்கிருன்) நாம தொரைங்களா, தொரசானிங்களா? இங்கிலீசு வைத்தியம் நம்பிளுக்கு என்னத்துக்கு? அந்தப் பாழும் மருந்து நமக்கு ஒத்து வராது. (ஒரு கணம் நிறுத்தி) காலம் கெட்டுப் போச்சு. நம்ப வைத்தியம், மருந்து, நம்ப வழக்கம், கட்டுப்பாடு—எதுவும் உபயோகம் இல்லெ. (சுவரில் மாட்டியிருந்த விசிறியை எடுத்து விசிறிக்

கொள்ளுகிருன்.) பெரியவங்க சும்மாவா சொன்னுங்க, 'அரசனைப் பாத்த கண்ணுக்குப் புருசனைப் பாத்தாப்பிலேன்னு' நல்லது பொல்லாது வேணும். புதுசா ஒண்ணு வந்தாப்போதும். கண்ணை மூடிக்கிட்டுப் போய் விழவேண்டியதுதான். நம்ப மதம், ஆசாரம், சம்பிரதாயம் எல்லாம் இப்பொழுதா தோணிச்சு! பூமி பொறந்ததுமே அதுகள்ளாம் தோணிச்சு!

(லக்ஷ்மையா இப்படிச்சொல்லும்போது மாணிக்கம்மா வாயைக் கோணிக் கொண்டு முகத்தைத் தோளில் இடித்துக்கொண்டு உள்ளே போய் ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்துவிட்டு மறுபடியும் கூடத்துக்கு வருகிருள்.)

மாணி: (சமையலறைக்கு முன் நின்றுகொண்டு) கமலம்! கொஞ்சம் நெருப்புக் கொண்டாடி!

லக்ஷ்: (இன்னும் முணுமுணுக்கிருன்) என்னதான் இருக்கட்டும்! மனுசாளுக்கு வராதெ மண்ணுக்கா வரும். காலம் போதாமெ நோவு நொடி வந்துச்சுன்ஞ எங்க காலத்துலே ரெண்டு நாள் பட்டினி போடுவாங்க. அப்பறம் எந்த நோவானுலும் பறந்து போயிடும். இப்பொ என்ன இருக்குது. சளி பிடிச்சாக்கூட டாக்டர் வந்தாகணும். அவங்க பணம் பிடுங்கறத்துக்காகவே நோயை அதிகமாக்குவானுக.

('உன் குப்பை வேதாந்தத்துலே நெருப்புவை' என்ற பாவனையில் மறைவாக மாணிக்கம்மா கைகளைச் சொடுக்குகிருள்)

லக்ஷ்: ஆயுசு கெட்டியா இருந்துச்சுன்ஞ, முழுகிப்போற படகுகூட மொதக்கும். மாயைக்கு வசப்பட்டு மருந்தும் மாயமும் கொடுத்து நாம தவிக்கருேம். ஆஞ தலையெழுத்து, மாருது.

(விசிறியை மறுபடியும் படம் மாட்டிய ஆணியில் மாட்டி விட்டு, அலமாரியிலிருந்து அபினி டப்பாவை எடுத்து, அபினியை மாத்திரையாக உருட்டுகிருன்.)

கமலம்: (கரண்டியில் நெருப்பைக் கொண்டுவந்து) அம்மா, இதோ. நெருப்பு.

மாணி: இப்படிக் கொண்டா, அம்மா! (நெருப்புக் கரண்டியை வாங்கியபடி) இன்னும் உன் சமையல் வேலை முடிஞ்சுதா, இல்லையா?

கமலம் : அண்ணனுக்காக இன்னொரு கறி சமைக்கிறேன், அம்மா !

மாணி : வீடு கொண்ட வேலெ ஒந்தலேலெ சொமந்திருக்குது. ஓயாம ஒழெச்சு ஒடம்பு ஓடாப் போயிடுச்சு. நீ செய்யல்லேன்னு அண்ணன் நெனச்சுப்பானு ! என்னுத்துக்கம்மா இப்பொ, காயும் கறியும் !

கமலம் : கத்திரிக்காயைத்தாம்மா வதக்கறேன். ஒரு நிமிஷத்திலே ஆயிடுமே !

(மாணிக்கம்மா அறையில் நுழைகிருள்.)

லக்ஷ் : எனக்கு அபினி திங்கறவேளெ மீறிப் போகுது, ஒருபிடி சோறு போடறியா தாயி !

கமலம் : போடறேன், அப்பா ! காலு கழுவுக்கிட்டுவா. (சமையல் அறைக்குப் போகிருள்.)

லக்ஷ் : (அபினி டப்பாவை அலமாரியில் வைத்துவிட்டு, அபினியை உருட்டி விழுங்கிவிட்டு) ஹரே கிருஷ்ண ! ஹரே கிருஷ்ணு ! பாஹிமாம், பாஹிமாம், பாஹி !

(சமையலறைக்குப் போக முயல்கிருன்)

மாணி : (அறையிலிருந்து வெளியே வந்து) கொஞ்சம் இருங்க ! சாப்பாட்டுக்கு அப்பிடி என்ன அவசரம் ! (தெருப்பக்கம் பார்த்து) இதோ டாக்டரையா வருங்க.

(அறைக்குள் போகிருள்.)

லக்ஷ் : ஊஹூம் ! வந்துட்டானல்லவா ?

(டாக்டரும் கிருஷ்ணமூர்த்தியும் அறைக்குப் போகிருர்கள். லக்ஷ்மையா எள்ளும் கொள்ளும் முகத்தில் வெடிக்கக் கூடத்தில் உலாத்துகிருன்)

கிரு : (அறையிலிருந்து சமையல் அறைக்கருகே வந்து) கமலா ! தம்ளரில் கொஞ்சம் தண்ணி கொண்டுவா. (சற்றுப் பொறுத்துச்) சீக்கிரம் கொண்டா !

கமலம் : (உள்ளே யிருந்து) வந்தேன், அண்ணு ! வந்தேன்.

கிரு : (ஒரு நிமிஷம் பொறுத்து) சடுக்குனு கொண்டான்னு—தெரி யுதா பார்!

(பேசி முடிக்குமுன் கமலம் தம்ளரில் தண்ணீருடன் வருகிருள். அதை வாங்கிக் கொண்டு கிருஷ்ணமூர்த்தி படுக்கை அறைக்கு விரைகிருன். கமலம், அறை வாசற் படிக்குமுன் நின்று எட்டிப் பார்க்கிருள்.)

கிரு : (அறை வாயிலுக்கு வந்து, கமலாவிடம்) டாக்டருக்குக் கை கழுவப் புழக்கடையில் செம்பில் தண்ணியும் சோப்பும் வை. டவலும் வை.

கமலம் : (போய்க்கொண்டே) ஆகட்டும் அண்ணு!

(கிருஷ்ணமூர்த்தி திரும்ப அறைக்குள் நுழைகிருன்; கமலம் கொல்லே வாசற்படியில் சோப்பும் சொம்பில் தண் ணீரும் வைத்துவிட்டுத் திரும்புகையில் டாக்டர் வெளியே வருகிருர். அவரைப் பார்த்த கமலம் சடக்கென்று சமைய லறையில் புகுந்து கொள்கிருள். டாக்டர் பின் தொடரக் கிருஷ்ணமூர்த்தி கொல்லேப்பக்கம் போகிருன்.)

கமலம் : (சமையலறை வாயிற்படிக்கு வந்து) அண்ணு! இதோ, டவல்!

(கிருஷ்ணமூர்த்தி அதை வாங்கிக் கையலம்பிக் கொண்டு வரும் டாக்டரிடம் கொடுக்கிருன்.)

டாக்டர் : (கையைத்துடைத்துக்கொண்டு டவலேத் திருப்பிக் கொடுத் துக்கொண்டே) என் பை!

(அறைப்பக்கம் ஓர் அடி எடுத்து வைக்கிருர்.)

கிரு : நான் கொண்டு வருகிறேன், இருங்கள்!

(அவன் அறையிலிருந்து டாக்டரின் கைப்பையை எடுத்துக்கொண்டு டாக்டர் பின்னே போகிருன்.)

லக்ஷ் : (டாக்டர், வீட்டை விட்டு இறங்கியவுடன்) வந்தாச்சு! போயாச்சு! சித்தெக்குந்தறது; நல்லது பொல்லாது பேசறது ஒண்ணும் கெடயாது. பேசக் காசு கொடுக்கணும்! இந்த அழகுக்குத்தான் டாக்டர் கீக்டர் இன்னுமேல் விழுறீங்க.

கமலம் : (சமையலறை வாசற்படியில் நின்று கொண்டு) அப்பா! சாப்பிட வர்றியா!

லக்ஷ் : (காதில் வாங்காமல்) சேஷாச்சாரி வந்தாருன்னு, கஷ்ட சுகங்களைப் பத்திப் பேசிக்கிட்டே, ஒருமணி நேரம் குந்தியிருப்பாரு! அவரோட பேச்சும், மட்டும், மரியாதையும் நேத்திப் பிறந்த இந்த பசங்களுக்கு ஒருகால்லெ நின்னு தபசு செஞ்சாலும் வருமா?

கமலம் : உன்னைத் தானப்பா! சாதம் பரிமாறட்டுமா?

லக்ஷ் : ஆன நேரம் ஆய்ப்போச்சு! அண்ணனும் வரட்டும்! எத்தினி தாட்டி சோத்துக்கடை வைக்கறது! ரெண்டுபேரும் சேர்ந்தே சாப்பிடறோம்.

மாணி : (அறையிலிருந்து வந்து) இன்னும் அவன் குளிச்சுத் தெளிச்சு ஒண்ணும் ஆகலெ. அவனுக்காக நீங்க எதுக்காவக் காத்துக் கெடக்கணும்! அந்தப் பொண்ணு ஒங்களுக்கும் போட்டுட்டுத் தானும் ரெண்டு பிடி சாப்பிட்டுடுவா. மட்டமத்தியான்னம் வரைக்கும் அவ ஏன் பட்டினி கெடக்கணும்!

கமலம் : ஆமாம்! எனக்கென்ன அவசரம்! அண்ணன் வரட்டும்.

மாணி : மருந்து வாங்கியாரணுமில்லே! நேரமாகுமம்மா!

லக்ஷ் : கலர்த் தண்ணிதானே! புட்டியிலே ஊத்திக் கொடுக்க எத்தினி நேரமாகப் போவுது?

மாணி : போதும் பேசாதிருங்க! யாராவது கேட்டாங்கன்னு சிரிப்பாங்க!

லக்ஷ் : நான் இந்த வீடுகட்டி இருவத்தஞ்சு வருஷம் ஆகுது. எண்ணிக்காவது ஒரு டாக்டர் வாசப்படியை மெதிச்சிருப்பானு? இன்னிக்கி நீயும் ஒன் மகனுமா அவனைத் தருவிச்சிட்டீங்க! டாக்டர் கால் வச்ச வீடு எது மிஞ்சிச்சு! குந்தினு பில்; எழுந்திருச்சா பில்லு! அவன் நாளையிலிருந்து வீட்டைக் கொள்ளையடிக்கமாட்டான். நம்ப கையிலே கெடச்சது காலோ, அரையோ, கொடுத்தா சேஷாச்சாரி வாங்கிக் கண்ணுலெ ஒத்திக்குவாரு. அப்போ எனக்கு மூணுமாசம் மருந்து கொடுத்தாரே, நான் என்னு கொடுத்தேன். வயல்லே வௌஞ்ச உளுந்து மூணு மரக்

கால் அளந்தேன். அதுக்கே அவர் பிரம்மானந்தப்பட்டாரு! இந்த டாக்டருங்கள்ளாம் சொளே சொளேயா ரூபாயை மேசை மேலெ வ்ச்சாத்தான் திரும்பிப்பாத்துப் பேசுவாங்க.

மாணி: ஆபத்துக் காலத்துலெகூட அண்ணு, பைசாக் கணக்குப் பாக்க றீங்க! அவ பொழச்சுப் பேர் சொன்ஞ, எனக்கு அதுவே ஆயிர மாயிரம் வந்தமாதிரி. பாழும் பணம்! பணம் என்ன பண்ணும்?

லக்ஷ்: நடத்துங்க, நடத்துங்க, கொட்டாங்கச்சி எடுத்துட்டு பிச்சை வாங்கிச் சாப்பிடுவீங்களாம். யோசிச்சா, உங்களுக்கெல்லாம் அப்பிடித்தான் இருக்குது தலெயெழுத்து. யார் விதியை யார் மாத்த முடியும்?

மாணி: சரி! மறுபடியும் தொடங்கியாச்சு!

லக்ஷ்: என்னுது?

மாணி: என்னவா? நான் பெண்ணுகப் பிறந்தது!

கிரு: (வருகிருன்) என்னம்மா, அது?

மாணி: மருந்து வாங்கி வந்தியா, அப்பனே!

கிரு: ஓ!

லக்ஷ்: ஒங்க டாக்டர் என்னடா சொன்னுரு?

கிரு: (கோபத்துடன் லக்ஷ்மையாவிடம்) ஆமாம்! சொன்ஞர் சொரைக்காய்க்கு உப்பில்லேன்னு... (ஆதரவுடன் மாணிக்கம்மா விடம்) என்னம்மா நீ சொன்ஞக் கேக்கறதில்லே; முதல்லே நீ தான் படுக்கை போட்டிடுவே போலெ இருக்குது! போய்க்குளிச் சிட்டு வா. நான் தங்கச்சியைக் கவனிச்சுக்கறேன்.

மாணி: ஆமா! எனக்கென்னடா அவசரம் வந்துச்சு!

கமலம்: நேத்திமொதலா அம்மா பல்லுலெ பச்சைத் தண்ணி ஊத் தல்லே, அண்ணு!

கிரு: என்னம்மா நீ செய்யற வேலே! நீ படுத்துட்டியான, ஜானகி யைப் பார்க்கறவங்க யாரு?

மாணி: என்னடா, சொல்லட்டும். எனக்கு மனசு மனசா இல்லே! சரி, அந்த மருந்தை இப்படிக் குடு. ஊத்திப் பார்க்கிறேன்.

தண்ணிகூட சரியா எறங்கக் காணும். என்னு மருந்தைக் குடிக்கப்போரு, அவ ?

கிரு: இதோ பாரம்மா! இந்தக் கோடுவரைக்கும் கண்ணுடி தம்ளரிலே ஊத்திக்குடு. இதோ, ஆறு பொட்டலம். மிக்சர் குடுத்த அரைமணிக்குப் பிறகு இதைத் தண்ணியிலே கரைச்சுக் குடுக்கணும்.

(கிருஷ்ணமூர்த்தியின் கையிலிருந்து மருந்துகளை வாங்கிக்கொண்டு, மாணிக்கம்மா அறைக்குள் போகிருள்.)

லக்ஷ: (இரண்டு மூன்று தடவை வேண்டுமென்றே இருமிவிட்டு) டாக்டர் என்னதான் சொன்னுண்டா ?

கிரு: கொஞ்சம் பொறுங்க. சொல்றேன்.

(ஒரு நிமிஷம் மௌனம்)

லக்ஷ: காலையிலெ சேஷாச்சாரி வந்து ஒருவாட்டி கை பாத்தாரு. நாடி கொஞ்சம் வேகமா அடிச்சுக்குது, ஆனலும் பயம் இல்லேன்னு சொன்னரு. இன்னக்கி அமாவாசை. அதனலெ நோவு கொஞ்சம் அதிகமாத்தான் இருக்கு முன்னரு. இந்த ஒரு நாள் தாண்டிடிச்சுன்ன, நாளையிலிருந்து எறக்கமாகும் அப்படின்னரு. எதுக்கும் கிரகபலம் நல்லதா இருக்கணும்.

மாணி: (அறையிலிருந்து வருகிருள்) மருந்து சரியாக் குடிக்கலே, தம்பி! பாதி கீளெயே போயிடுச்சு!

கிரு: பரவாயில்லெ. நீ போய்க் குளிச்சிட்டுவாம்மா.

மாணி: இவளெ ஒரு கண் பாத்துக்கப்பா!

(சமையலறை வழியாக உள்ளே போகிருள்.)

கிரு: (மருண்ட மான்போல் நின்ற கமலத்திடம்) கமலா! அம்மாவுக்குத் தண்ணி கிண்ணி எடுத்துக் கொடுக்கக்கூடாது ?

(அவள் உள்ளே போகிருள்.)

லக்ஷ: டாக்டர் என்னதான் சொன்னரு ?

கிரு: நோவு முத்திப் போச்சுன்னரு. எந்த நிமிஷத்துலே என்ன ஆனலும் ஆகலாம். ஒன்னும் சொல்லறத்துக்கில்லேன்னரு.

லக்ஷ்: துட்டைப் பறிக்கறதுக்கு அவங்க அப்படித்தான் சொல்லு வாங்கப்பா!

கிரு: பாழும் பணத்துக்குச் சோம்பல் பட்டுத்தான் அவ உசிருக்கு ஒலெவெச்சீங்க.

லக்ஷ்: பணம், பணம் எங்கறீங்க! பணத்தை வாரி எறைச்சிட்டா, போவற உசிரு நின்றுடுமாடா? நம்ப சந்திரையா, பொண்சாதி யைப் பட்டணத்துக்குக்கூட அளச்சிட்டுப் போயி வைத்தியத் துக்கு அஞ்சாறு நூறு செலவழிச்சான். அவ பிழைக்கல்லியே! வேளேயும் அதிருஷ்டமும் சரியா இல்லாட்டி டாக்டர்கள் என்ன செய்யமுடியும். அது கெடக்கு! நோவு என்னன்னு சொன்னன்?

கிரு: (வருத்தத்துடன்) டைபாயிடு ஜுரமாம். டபிள் நிமோணியா வால் சுவாசக் குழாய் ரெண்டும் கெட்டுப் போச்சாம். மொதல் லேயே இவரைக் கூட்டி வந்திருந்தா, இத்தினி தூரத்துக்கு வந்திருக்காது. நீ, உன் கையாலேயே அவ வாழ்க்கையைக் கெடுத்திட்டே.

லக்ஷ்: ஆ! யார் என்ன செய்யமுடியும்? யார் தலையிலே எப்படி எழுதிருக்குதோ அப்படித்தான் நடக்கும்.

கிரு: போதும், போதும். இந்த வாய் வேதாந்தத்தாலேயே அவளைக் கொல்லுறே! அவ உடம்பெல்லாம் புழுத்துப் போச்சு, ஏன் தெரியுமா?

லக்ஷ்: ஓ! அதுவா! பித்தம் தலைக்கேறிடுச்சாம்.

கிரு: அவளுக்கல்ல. நமக்குத்தான்.

லக்ஷ்: பின்னே, அது எதனலேன்னு சொல்றே!

கிரு: அதுவா? உன் மருமகன் சரியான கோயில் காளை! அது உனக் கும் தெரிஞ்ச சங்கதிதானே! அவன் உடம்பெல்லாம் அழுகிக் கிடக்குது. அதுவும் உனக்குத் தெரிஞ்சதுதான். நான் அன்னிக் கே "இந்தப்பாழும் சம்பந்தம் நமக்கு வேண்டாம்னு" தலை தலையா அடிச்சிட்டேன். என் பேச்சைக் கேக்கல்லே! உன் கூடப் பிறந்த தங்கச்சி விடேறிவந்து பெண் கேக்குதுன்னும் வரதக்ஷி ணைச் செலவு குறையுதுன்னும் நெனச்சுத் தங்கமான பெண் ணுக்கும் அந்த அயோக்கியப் பயலுக்கும் முடிஞ்சு வச்சே!

லக்ஷ்: சின்ன வயசிலே கன்னு, பின்னுன்னு அலையறவங்ககூட ஒரு கல்யாணங் கட்டினப்புறம் ஒழுங்கா வாழறதில்லையாடா? நாராயணராவும் அப்படி ஆயிடுவான்னு நெனச்சேன். இருந்தாலும் நம்ப கையிலே ஒண்ணும் இல்லே. எல்லாம் போன ஜன்மத்து வினைப் பயன் தான்.

கிரு: நம்ப கையாலே மென்னியைப் பிடிக்கறது, அப்புறம் அது அவங்க வினைப் பயன்னு சொல்றது. என்ன அழகான சூத்திரம் கண்டு பிடிச்சிங்க? அவன் எழுத்து வாசனை இல்லாதவன் எங்கறது உனக்குத் தெரியும். அவனுடைய சொத்தைக் கண்டு அவனுக்குப் பெண்ணைக் கட்டிவச்சா...அது உன்னோட தப்பு இல்லே?

லக்ஷ்: ஆ! எல்லாம் அவங்கவங்க தலையெழுத்துப்படி தான் நடக்கும். நாம் எல்லாம் ஒப்புக்குத்தன் செய்யறது.

கிரு: மனசாரச் செய்த தப்புக்குக் கவலைப்படறதை விட்டிட்டே, 'அவ தலையெழுத்து, அவ செய்த பாவம்னு' சொல்றதுக்கு உனக்கு எப்பிடித்தான் வாய் எழும்புதோ, அப்பா! கல்யாணம் நிச்சயமான துக்கப்பறம் ஜானகி முகத்துலே கலையையோ, சந்தோஷத்தையோ நீ பார்த்ததுண்டா? இந்த அஞ்சாறு வருஷ காலத்துலே அவ குடித்தனமா செய்தா, நரகத்துலே அல்ல, புழுங்கினு!

லக்ஷ்: ஏதோ துட்டு உண்டானவனுக்குக் கொடுத்தாப் பொண்ணு சுகப்படும்னு நெனச்சேன். இப்படி நடக்கும்னு நான் கனவு கண்டேனு? எதுக்கும் அவ குடுத்து வைக்கல்லே!

கிரு: அவளைச் சுகமா வாழவைக்கணும்னு நெனச்சிருந்தா, நீ அவனுக்குக் கட்டியே வச்சிருக்க மாட்டே! அதுதான் போகட்டும்! கட்டிவச்சே, அவனுக்குச் சேரவேடிண்ய வரதக்ஷிணைப் பணத்தை விட்டெறியாமெ, இல்லாத பொல்லாத தகராறெல்லாம் செய்வாயா? அவன் ஜானகியைப் படாத பாடும் படுத்தவும், "இரண்டாம் கல்யாணங் கட்டிக்கிறேன்"னு அவளைச் சித்திரவதை செய்யவும் காரணம் நீ யல்லவா?

லக்ஷ்: எல்லாம் பிரம்ம லிபியே தவிர, அவள் என்ன, எனக்குச் சத்துருவா?

கிரு: ஓகோ! அதை மறந்தே போய்ட்டேன், நம்ம பாவத்தை எல்லாம் சுமத்த அந்தப் பிரம்மா ஒத்தர் அகப்பட்டுக் கிட்டார்!

நல்லா நடந்தது நம்ம திறமையாலே; கெட்டுப்போனு அது பிரம்மா எழுதின தலையெழுத்து.

மாணி: (கூந்தலை நுனிமுடி போட்டுக் கொண்டு கூடத்துக்குத் திரும்பிவருகிருள்) அவளுக்கு எப்படி இருக்குது தம்பீ!

கிரு: கொஞ்சம் பரவாயில்லே அம்மா!

மாணி: நீ போய்க் குளி, ராஜா! நான் அவளெப்பாத்துக்கிறேன்.

கிரு: குளிக்கலாம்; அவ்வளவு அவசரம் எதற்கம்மா?

மாணி: நேரமாவலையாடா! உனக்காக உங்கப்பாவும் கமலமும் காத்துட்டிருக் காங்களே!

கிரு: எனக்காக ஏன் காத்துட்டிருக்கணும்? முந்தி நீ சாப்பிடப்பா! நான் அப்பாலே சாப்பிடறேன்.

மாணி: ஏந்தம்பி! தொலை தூரத்துப் பயணம். நேத்திக்கி எப்பொச் சாப்பிட்டியோ, என்னமோ? தண்ணி ஊத்திக் குளிச்சிட்டு ஒரு பிடி சாப்பிடப்பா!

கிரு: ஆகட்டும், அம்மா!

மாணி: பசி மயக்கம் கண்ணை இருட்டி வரப்போகுதப்பா!

(என்று சொல்லிக் கொண்டே ஜானகி படுத்திருக்கும் அறைக்குப் போகிருள்.)

லக்ஷ்: (அரை நிமிஷம் பொறுத்துத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு) என்னமோ, போ! டாக்டர் பேரிலெ எனக்கு நம்பிக்கை......

கிரு: உனக்கொரு கும்பிடு, அந்தப் பேச்சே வேண்டாம். அம்மா காதுலே விழுந்தா உசிரையே விட்டிடுவா.

லக்ஷ்: சரிபோ! நடக்கறது நடத்துதான் தீரும்.

(கண்ணை மூடிக்கொண்டு) ஹரே, கிருஷ்ணு! ஹரே கிருஷ்ணு! பாஹி மாம்! பாஹிமாம்! பாஹி!

கமலம்: (சமையலறையிலிருந்து வந்து) அண்ணு குளிக்கத் தண்ணி, நிரப்பி வைக்கட்டுமா?

கிரு : கொஞ்சம் இரு ; நிரப்பலாம்.

கமலம் : குளிக்க நேரமாகும்னு சுடுதண்ணி வைக்கறேன், அண்ணு !

கிரு : என்னுத் துக்கம்மா, இந்த வெயில்லே, சுடு தண்ணி !

கமலம் : சுடு தண்ணி ஊத்திக் கிட்டா, ரயில்லே வந்த அலுப்புத் தீரும், அண்ணு !

கிரு : ஐயய ! வேண்டாம் ! குளிர்ந்த தண்ணியே போதும்.

கமலம் : அண்ணன் சாப்பிட நேரமாகுமாம் ; நீயாவது சாப்பிட வா, அப்பா !

லக்ஷ் : வேளை மீறிப் போயிடுச்சு ; பசி மந்திச்சுப் போச்சு ! இனி, எப்பொச் சாப்பிட்டாலும் ஒண்ணுதான். நானும் அப்பாலே சாப்பிடறேன்.

(ஏக்கத்துடன் கமலம் சமையலறைக்குப் போகிருள்)

லக்ஷ் : (கிருஷ்ண மூர்த்தியிடம்) எங்கே, இப்பிடிக் கிட்ட வா !

(கிருஷ்ணமூர்த்தி அருகே வருகிருன்)

இந்த டாக்டர் கீக்டர் எல்லாரையும் நம்பற வங்க யாரு ? அந்த சேஷாச்சாரியை ஒரு வாட்டி கூப்பிட்டு......

கிரு : போதும் ! அவர் இவ்வளவு காலமாப் பாத்த வைத்தியம் போதும், போ !

லக்ஷ் : அதுக்கில்லேடா ! அவரை மறுபடியும் யோசனை கேட்டால்

(அப்பொழுது, 'ஐயோ ! என்னம்மா !' என்று மாணிக் கம்மா மார்பில் அறைந்து கொள்ளும் சப்தம்.)

(ஒரே சமயத்தில்)

லக்ஷ் : என்னடீ அது ?

கிரு : என்னும்மா ?

மாணி : (அறையிலிருந்து) ஐயோ, என் கண்ணே ! ஐயோ, என்னம்மா !

(ஒரே சமயத்தில்)

லக்ஷ் : என்னடீ, என்ன ?

கிரு : என்னும்மா ; என்னும்மா ?

மாணி : (இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டு) இனிமே நான் இருந்தா என்ன ; போனு என்ன. பாழுந் தெய்வம் என்னைக் கொண்டு போகக் கூடாதா ?

[ மாணிக்கம்மாவின் அழுகையைக் கேட்டுவிட்டு லக்ஷ்மையாவும் கிருஷ்ணமூர்த்தியும் பாய்ந்து அறைக்குள் போகிருர்கள் ]

மாணி : ஐயோ ! ஐயோ ! நான் என்ன பாவம் பண்ணினேன். ஐயோ, என்னம்மா ! ஐயோ, என்தாயே !

லக்ஷ் : (வெளியில் வந்து கோபத்துடன்) உனக்கென்னடீ கேடு காலம் ? என்னுத்துக்கு இப்படி அழுவறே !

மாணி : என்னுத்துக்கா ? என் எழவுக்கு !

லக்ஷ் : சரிதான் ! உன் பைத்தியாரக் கூச்சலை எல்லாம் நிறுத்து ! அவ முன்னைவிட இப்பொத் தெளிவோட இருக்கா. இந்த அழுகையும் கூச்சலும் என்னுன்னு கேக்கறேன். வூட்டுக்குக் கேடு சுத்தணுமா ?

மாணி : என் கண்மணியின் வாழ்வை நீதான் கெடுத்தே ! அவளை நீ தான் பாழுங் கணத்துலே தள்ளினே ? ஒன் வேதாந்தத்துலே இடிவிழ !

லக்ஷ் : சீ ! வாயெ மூடு ! யார் பாவத்துக்கு யார் ஜவாப்தாரி ?

கிரு : (அறையிலிருந்து வெளியே வந்து) என்னம்மா நீ செய்யற தடபுடல் ! நானும் என்னமோ, ஏதோன்னு பயந்திட்டேன்.

மாணி : என்ன சொல்லட்டுமடா சாமி ! என் கண்மணிக்கு எத்தினி பெரிய கஷ்டம் வந்திடுச்சு ! ஐயோ ! ஐயோ !

கிரு : சங்கதியைச் சொல்லம்மா !

மாணி : “ இந்தப் பழியைச் சொமக்க முடியாது ! இந்தப் பழியைச் சொமக்க முடியாது !”ன்னு அது ஓயாம பேத்துதேன்னு பாத்தேன் ! அந்தப் பழிகேட்டுத் தாங்காமதான் அவ ஒரே படுக்கை போட்டிருக்கா !

கிரு : என்னம்மா உன்பேத்தல் ! என்ன பழி ? என்ன அபவாதம் ?

மாணி : என் வாயாலே நான் எப்படிச் சொல்லு வேண்டா, பையா ? உங்க மச்சான்—ஐயோ, ஐயையோ ! அவளைப் பிடிச்சுக்கிட்டு .........

(வாயைப் பொத்திக்கொள்கிருள்)

நீ இதை எங்கே சம்பாதிச்சியோ அவங்கிட்டவே போ' ன்னு சொல்லி வெரட்டிட் டானும் !

(ஒரே மூச்சில்)

கிரு : ஹா ! ராஸ்கல் ! ஸ்கௌண்ட்ரல் !

லக்ஷ் : அட அயோக்கியப் பயலே !

கிரு : (பல்லைக்கடித்து) அந்தக் கம்மனுட்டியை ரெண்டாக் கிழிச்சுப் போடணும் !

மாணி : ஐயோ, ஐயோ !

லக்ஷ் : (மூக்கில் விரலை வைத்து) என்ன அநியாயம் ! என்ன துணிச்சலாப் பழி சொல்லிப் புட்டான்.

(உடனே வழக்கம்போல் தன் வேதாந்தப் போக்கில் இறங்கி) சரி ! அவன் பாவத்துலே அவன் போருன் !

கிரு : (எரிச்சலோடு) அவன் பாவத்துலே அவன் போகட்டுமா ?

லக்ஷ் : ஆமா ! பின்னே ! பாவஞ்செய்தவன் இந்த ஜன்மத்துலே இல்லாட்டி அடுத்த ஜன்மத்துலே யாவது அதன் பலனை அநுபவிச்சுத்தான் தீரணும் !

கிரு : அடுத்த ஜன்மம் ! அதை யாருபாத்தவங்க ?

லக்ஷ் : அதெல்லாம் பெரிய விஷயம். எனக்கு அந்தத் தரும ரகசியங்கள்ளாம் தெரியாதப்பா ! வினைக்குத் தகுந்த மாதிரியாத்தான்

ஜன்மம் கெடைக்கும். போன ஜன்மத்துச் செயலுக்குத் தகுந்த படி இந்த ஜன்மம். இந்த ஜன்மத்துலே.........

மாணி: ஒன் வாய் வேதாந்தத்தை ஒடப்பிலே போடு! ஐயோ! ஐயோ! என் குழந்தை மேலே எப்படிப்பட்ட அபவாதத்தை ஏத்திப்புட்டான்!

கிரு: அந்தக் கம்மனாட்டி கண்ணுலே படட்டும், வெட்டிப் பொதெச்சிடறேன்.

மாணி: அவன் கையாலாகாத கம்மனாட்டி தான். ஆனா நம்ப கொழந்தையைக் குடுத்தப்பறம் என்ன சொல்லி என்ன பிரயோசனம்? நம்ப பொண்ணு மொகத்தைப் பாத்தாவது, அவன் காலுலே வுழுந்து கெஞ்சி.........

கிரு: சீ! சீ! அந்தக் கம்மனாட்டி பேரையே என் முன்னே எடுக்காதே!

மாணி: அப்படிச் சொல்லாதே, சாமி? சொல்லாதே? எம் பேச்சைக் கேளு! நாம வேண்டாம்னு அறுத்தாலும் விட்டுப் போற சம்பந்தமாடா இது! அவனை எப்படியாவது கெஞ்சி.........

கிரு: அவனையா? கெஞ்சறதா? அந்த மிருகத்தையா? போதும் அம்மா!

மாணி: அவனைப் பாக்காட்டி நம்ம பொண்ணு நமக்குத் தக்காதுடா, என் கண்மணி தலையிலே பெரிய இடியா விழுந்திருச்சு! அவன் வரணுமாம், அவ பாக்கணுமாம்! உன்மேலே தப்பு ஒண்ணும் இல்லேன்னு அவன் சொல்லணுமாம்! உனக்குப் புண்ணியமாப் போவுது! அவன் கிட்டப் போய்......

கிரு: என்ன ஆனாலும் சரி! நான் போக மாட்டேன்; மாட்டேன்!

லக்ஷ்: நமக்குத்தான் அக்கறை! போகாட்டி, விடுமா!

கிரு: அக்கறைன்னா மட்டும்! கழுதையின் காலைப் பிடிப்பாங்களா?

லக்ஷ்: ஏன், பிடிக்காமே! நாம பிடிக்கறது அதிசயம் அல்ல! அந்தக் காலத்துலே சாக்ஷாத் வசுதேவனே பிடிச்சாராம்!

கிரு: நான் அப்படிப்பட்ட மகானுபாவன் அல்ல; என் ஒடம்பிலே ரத்தமும் சதையும் இருக்குது. மானம் அவமானம் இருக்குது.

('அண்ணு' என்று அழைத்துக்கொண்டே வந்த கமலம் கூடத்தில் அவர்கள் மூவர் நிலையையும் பார்த்து மலைத்து வாசற்படியிலேயே நின்று விடுகிருள்.)

மாணி: நல்லவனே கெட்டவனே? அவனுக்குக் கட்டிக் கொடுத்தப் பறம் அவளுக்கு அவன் தானே கதி? அவ மொகத்துக்காகவா வது போய்ட்டு வாடாப்பா!

கிரு: உனக்குப் பைத்தியந்தான். இது வரைக்கும் அவன்கிட்டப் படாத சொகத்தை நம்ம ஜானகி இனிமே என்ன கண்டுடப் போரு. புத்தியில்லாத அந்தக் கம்மனுட்டியை வீணு எதுக்காக வேண்டணும்?

லக்ஷ்: குருடோ நொண்டியோ? ஏன், குஷ்டரோகியா இருந்தாக் கூட பொம்பளைக்குப் புருஷனே தெய்வம்.

கிரு: தெய்வம் அல்ல; பூதம்!

மாணி: என் பேச்சைக் கேளப்பா! இல்லாட்டி நம்ம பொண்ணு நமக்குத் தக்காது!

கிரு: என்னதான் ஆனுலும் நான் போமாட்டேன் அம்மா!

லக்ஷ்: அப்படியானு எனக்கு விடாது. நானே போறேன்.

கிரு: நீயும் போகக் கூடாது.

மாணி: இதென்னடா, பையா! நீதான் போகாட்டியும் அவரை யானும் போக விடு.

கிரு: முடியாதம்மா?

மாணி: ஆ! அவன் பேச்சுக்கு என்னங்க? நின்ன நெலைலே இப்படி யே கெளம்புங்க!

கிரு: வேண்டாம் அப்பா! போக வேண்டாம்.

மாணி: நீ அறியாப் பையன். ஒனக்குத் தெரியாதப்பா! என் பேச்சைக் கேளு.

லக்ஷ்: (அதிகார தோரணையில்) இதுவரைக்கும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். பத்துப் பிள்ளைப் பெத்தவளுக்குத் தலைச்சன்

பிள்ளைக்காரி புத்தி சொன்னப்பலே நீ என்னடா எங்களைக் கட்டுக்காவல் செய்யறது? சமயத்துக்குத் தகுந்தாப்பலே விட்டுக் குடுத்துக்கிட்டுப் போகணுமே தவிர வெறச்சுக்கிட்டா வேலே நடக்குமா?

கிரு: சரி; அவனே வெத்தல பாக்கு வச்சு அழைச்சுக்கிட்டு வந்து தலேலே தூக்கி வச்சுக்கிட்டுப் பூஜை பண்ணுங்க! என் பாட்டுக்கு நான் பேறேன்.

மாணி: என்னே நட்டாத்திலே விட்டுட்டுப் போறயாடா! வேண் டாண்டா பையா, போகாதே!

கிரு: இல்லேயம்மா! இந்தப் பாழும் வீட்டிலே ஒரு நிமிஷங்கூட என்னலே இருக்க முடியாது.

மாணி: (வழியை மறித்துக்கொண்டு) நீ போன என்னேக் கொன்னு தின்னப்பலே; மகனே!

(கண் கலங்கக் கமலம் புடைவைத் தலேப்பால் கண்ணைத் துடைத்துக்கொள்கிருள்.)

லக்ஷ்: போறவனே ஏண்டி தடுக்கிறே? யாரை மெரட்டருன் இந்த வறட்டு அதிகாரத்தாலே!

(இந்தப் பேச்சால் கிருஷ்ணமூர்த்திக்குக் கோபம் இன் னும் அதிகமாகிறது. மாணிக்கம்மாவை விலக்கிக்கொண்டு தெருப்பக்கமாக அவன் இரண்டடி எடுத்து வைக்கிருன்.)

(ஒரே சமயத்தில்)

மாணி: ஐயோ, ஐயோ மகனே!

கமலம்: அண்ணு! அண்ணு!

(கிருஷ்ணமூர்த்தி டக்கென்று நின்று கமலத்தைப் பார்க்கிருன்.)

கமலம்: என்னே நிர்க்கதி ஆக்கிட்டுப் போறியே அண்ணு!

கிரு: ஒன்னெ மறந்தே போய்ட்டேன் அம்மா! ஒன்னே இங்கே விட்டுட்டுப் போன ஒங்கக்கா கழுத்தை அறுத்தாப்பலே இவங்க ஒன் கழுத்தையும் அறுத்துடுவாங்க. வா என்னேடே! போலாம்.

(கமலம் கண்ணீர் பெருக அவனை விழித்துப் பார்த்த படியே வாயடைத்து நிற்கிருள்.)

கிரு : உனக்கு நல்லது பொல்லாது தெரியாதம்மா! இவுங்க கிராத கங்க. நான் ஒன் அண்ணன் இல்லையா? என் பேச்சைக் கேளு. வா, போலாம்.

கமலம் ; (நெஞ்சடைக்க) நாம போய்ட்டா அக்கா கதி என்ன ?

கிரு : (சட்டென்று குன்றிப்போய்) ஆமாம், அம்மா! கோப வெறியிலே நான் அதெ அடியோட மறந்துட்டேன். (பெருமூச்சு விட்டு) ஆமாம், அவளை இந்த நெலேலே விட்டுட்டு நாம்ப எங்க போறது ?

மாணி : அப்பாடா ! போகட்டும். அவ மொகத்தைப் பார்த்தாவது நின்னயே ! எனக்கு அதுவே பதினுயிரம் ! ஒண்டியா இந்தப் பாரத்தெ என்னுலே தாங்க முடியுமாடா ?

கிரு : சரிம்மா ! (கைக்கடிகாரத்தைப் பார்த்து) மிக்சர் குடுத்து அரை மணி ஆச்சு ; பௌடரைக் குடு.

மாணி : (பெருமூச்சு விட்டு) எனக்குக் கை காலே ஓடல்லெ அப்பா ! நீயே சித்தெக் கொடுத்துடு.

(கிருஷ்ணமூர்த்தி அறைக்குள் புகுகிருன்.)

மாணி : (லக்ஷ்மையாவிடம்) இன்னும் என்ன பாக்குறீங்க? நீங்க போய்வாங்க.

லக்ஷ் : ரெண்டு ஜாமம் ஆயிடுச்சு. வேளையத்த வேளை. இப்ப எப்படிப் போறது? கொஞ்சம் வெய்யத் தாழட்டும். போய்ட்டு வர்றேன்.

மாணி : இது பெரிய தூரமாப் போயிடுச்சா. சரியா ரெண்டு மைல் கூட இல்லே. எம் பேச்சைக் கேட்டு இப்படியே கௌம்புங்க.

லக்ஷ் : சரிதாண்டி ! ரெண்டு பருக்கை சோத்தையாவது அள்ளிப் போட்டுக்கறேன். அதுக்குள்ளே ஒண்ணும் முளுகிப் போய்டாது. கமலா ! எனக்குப் பரிமாறம்மா ?

கமலம் : (இன்னும் கசிந்துகொண்டிருக்கும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே) வாப்பா !

மாணி : சாப்பாடு எங்கெ போவுது! தெனம் திங்கிற சோறுதானே ! முதல்லெ போய்வாங்களேன். நேரமானா எங்கே குடிமுழுகிப் போயிடுமோன்னு எனக்கு நெஞ்சு அடிச்சுக்குது.

லக்ஷ் : எதுக்குடி இந்தப் பாழாப்போன பயம்? அவனன்றி ஓரணுவும் அசையாது.

மாணி : அப்பப்பா ! போய் வாங்களேன் !

லக்ஷ் : சரி, நாசமாப்போ !

(விடு விடு என்று இரண்டடி எடுத்து வைக்கிறான்.)

(கிருஷ்ணமூர்த்தி பொங்கி வரும் துக்கத்தை வெகு கஷ்டத்துடன் அடக்கிக்கொண்டு அறையிலிருந்து வருகிறான்.)

கிரு : அப்பா !

(லக்ஷ்சுமையா திரும்பிப் பார்க்கிறான்)

கிரு : இனி நீ போகவேண்டிய அவசியமே இல்லை.

(அர்த்தம் புரியாமல் மாணிக்கம்மாவும், கமலாவும் திரு திருவென்று விழிக்கிறார்கள்.)

லக்ஷ் : என்ன செய்யறது ? தலையெழுத்து !

(சொல்ல வாய் எழும்பாத பயத்துடனும் சந்தேகத்துடனும் மாணிக்கம்மாவும் கமலமும் பைத்தியக்காரர்களைப் போல் கிருஷ்ணமூர்த்தியையும் லக்ஷ்சுமையாவையும் மாறி மாறிப் பார்க்கிறார்கள். பார்வையில் கேள்விக்குறி தோன்றுகிறது.)

(திரை விழுகிறது)

# 3. சிவம்

★

ஆசிரியர்:

ஸ்ரீ குடிபாடி வெங்கடாசலம்

(1895-ல் பிறந்தவர். தற்காலம் ரமணு சிரமத்தில் வசிக்கிறுர்.

இலக்கியத்தில் 'ஸெக்'ஸுக்கு உரிய ஸ்தானத்தைக் கற்பனை செய்வதும், நாடகத்தில் புராண, இதிகாசங்களைப் புரட்சி முறையில் அமைப்பதும் இவருடைய தனிச் சிறப்பு.

"சித்திராங்கி; ஹரிச்சந்திரா;" முதலிய நாடகங்கள், நாவல்கள், சிறு கதைகள், சிந்தனைக் கட்டுரைகள் முதலியவற்றை எழுதி இருக்கிறுர்.

**சிவம்** 1923-ல் ரஜிதா பிரெஸ், தெனுலி மூலம் பிரசுரமாயிற்று.

1932-ல் பெஜவாடா டிரெயினிங் பள்ளி நாடக சமிதியாரால் நடிக்கப் பெற்றது.)

# பாத்திரங்கள்

★

| | | |
|---|---|---|
| வெங்கடேசுவர்லு | — | வக்கீல், சேர்மன் |
| மகாலக்ஷ்மி அம்மாள் | — | அவர் தாய் |
| சுந்தரம்மாள் | — | அவர் மனைவி |
| ஹனுமந்த ராவ் | — | அவர் மைத்துனன் |
| பந்துலு | — | அவர் மகன் |
| சுசீலா | — | அவர் பெண் ; விதவை |
| சிவம் | — | சுசீலாவின் நண்பன் |
| நாராயணராவ்-நாயுடு | — | கண்டிராக்டர் |
| காந்தம்மாள் | — | நாயுடுவின் மகள் |
| வண்டிக்காரன் | — | |
| வண்ணான் | — | |

(பகல் மணி நாலு. வெங்கடேசுவர்லுவின் வீட்டில் முன்புறத்துப் பெரிய ஹால். வெளி வராந்தாவிலிருந்து கதவு. அதன் எதிரில் உள்ளே போக வழி. ஒரு கோடியில் வெங்கடேசுவர்லுவின் ஆபீஸ் மேஜை. பீரோக்கள்; மேஜையின்மேல் காகிதங்கள், பீரோ நிறையப் புஸ்தகங்கள். சுவர்களில் கருடன்மேல் அமர்ந்த விஷ்ணு, விக்டோரியா ராணி, ஸரஸ்வதி, யாரோ ஒரு துரை, லா காலேஜ் குரூப், நூலால் போட்ட கிளி முதலிய படங்கள். அமிருதாஞ்ஜன் காலண்டர். பெரிய கடிகாரம், மேஜையின் ஒரு புறத்தில் வெங்கடேசுவர்லுவின் பெரிய நாற்காலி, மற்றொரு புறத்தில் மூன்று சிறிய நாற்காலிகள். அவற்றுக்குப் பக்கத்தில் பெஞ்சி ஒன்று.

வீட்டுக்குள்ளே போகும் நிலைப்படிக்கருகே, உட்புறத்தில் மகாலக்ஷ்மி அம்மாள் பருத்தியை வைத்துக்கொண்டு திரி திரிக்கிறாள். வாயிலுக்கு, இந்தப் பக்கத்தில்—ஹாலில்—சுந்தரம்மாள் உட்கார்ந்திருக்கிறாள். அவளுக்கு முப்பத்தைந்து வயது இருக்கும். மாநிறம். பல் முன்னுக்கு வந்திருக்கிறது. தலைபின்னிப் பிச்சோடா போட்டிருக்கிறாள். தலை கலைந்திருக்கிறது. லேசாக வழுக்கை விழுந்திருக்கிறது.

பெஞ்சின்மேல் ஹனுமந்த ராவ் உட்கார்ந்திருக்கிறார். வயது முப்பதுக்குமேல் இருக்கும். ஒல்லியாய்க் கறுப்பாய் இருக்கிறார். குடுமியையும் மீசையையும் எடுத்துவிட்டு உச்சிக் குடுமி வைத்திருக்கிறார். முகத்தில் சந்தனப் பொட்டும் அட்சதையும் அழிந்து காணப்படுகிறது. தோளில் உத்தரீயம், தொடைவரையில் ஏறிய வேஷ்டி. உடலில் வேர்வை இல்லை. ஆனாலும் விசிறிக்கொண்டிருக்கிறார்.

மேஜைமேல் காகிதங்களை அடுக்கி வைத்துக்கொண்டு வெங்கடேசுவர்லு எழுதியபடி நாற்காலியில் உட்கார்ந்திருக்கிருர். அவருக்கு நாற்பது வயது இருக்கும். குட்டையாகக் கத்தரித்து விட்ட தலை. பின்னல், இருக்கிறதோ, இல்லையோ என்று தெரியும் உச்சிக் குடுமி. உருண்டையாகப் பருத்த உடல். நெற்றியில் பொட்டு. கத்தரித்து விட்ட மீசை. சாய வேட்டி. சொக்காய் போடவில்லை. உடலெல்லாம் வேர்வை, பொட்டுப் பொட்டாய்த் தெரிகிறது.)

ஹனுமந்தராவ்: அத்தான்! இந்த வருஷம் வால்டேர் பிரயாணம் உண்டா?

சுந்தரம்மாள்: சரிப்படும்னு தோணல்லை.

ஹனு: ஏன்? போன வருஷம் எவ்வளவு உற்சாகமாக இருந்தது? அத்தான் இந்த வெயிலைத் தாங்கமாட்டார்.

சுந்த: ஒனக்கென்னப்பா! சொல்லுவே. போன வருஷம் முந்நூறு ரூபா செலவு. யாருக்கு உபயோகம்?

ஹனு: அது அத்தானுக்கு வரவா, செலவா?

மகாலக்ஷ்மி அம்மாள்: போனுல் அவன் மட்டும் போய் வரட்டும். வேலை யில்லாமெ நாம்பள்ளாம் எதுக்கு?

ஹனு: நான் இல்லாட்டா அத்தானுக்குப் போது போகாது. பொம்மனுட்டிகள் நீங்கள் எல்லாம் இங்கே இருங்கோ. ஊறுகாய், கீறுகாய் போடணும்!

சுந்த: சரி! உன் உத்தியோகம் என்னவாச்சு? வால்டேர் போறேங்கிறையே!

மகா: ரெண்டு வருஷமா உத்தியோகம் சம்பாதிச்சாச்சு! இப்பவும் சம்பாதிக்கப் போருன். ஒனக்கும் அவனுக்கும் அதுதான் கொறச்சல்! நாளெக்கிப் பொண்டாட்டி வரப்போரு; அப்பொ, மகராஜன் என்ன பண்ண போருனே?

ஹனு: அதெல்லாம் அத்தான் பாத்துக்கறேன்னு சொல்லியிருக்காராக்கும்! அத்தான் இருக்கச்சே எனக்கென்ன கஷ்டம்?

(இரண்டு நிமிஷ நேரம் மௌனம். வெங்கடேசுவர்லு பேனாவை வைத்துவிட்டு ஒரு பெருமூச்சு விட்டுச் சோம்பல் முறித்துக் கொள்ளுகிறார்)

வெங்கடேசுவர்லு : சனியன் பிடிச்ச வேலை! சம்பளமா, பேட்டாவா? என்ன செய்தாலும் யார் வாழ்த்தப் போறா?

ஹனு : அப்படிச் சொல்லாதே, அத்தான்! எல்லாரும் இவ்வளவு நல்ல சேர்மனைப் பாத்ததே இல்லேன்னு சொல்லிக்கறா.

வெங்க : எல்லாம் இச்சகந்தான், போயேன்! எனக்கா தெரியாது? யாரடா, அங்கே! (பதிலே இல்லை) பார்! ஒரு கம்மனாட்டியாவது இருக்கானா! இவங்கள்லே ஒருத்தனை டிஸ்மிஸ் செய்தாலொழிய, புத்தி வராது.

ஹனு : நீ காத்துக் கிடக்கச் சொன்னால், சானிடரி இன்ஸ்பெக்டர் லேருந்து எல்லாரும் கிடக்க வேண்டியது தானே! அபராதம் போட்டாலும்!

வெங்க : யாருக்காக? சானிடரி இன்ஸ்பெக்டரானா என்ன; மானேஜ ரானா என்ன? வாயை மூடிண்டு கடக்கணும்!

ஹனு : பேஷான வேலை, அத்தான்! எப்பிடித்தான் சம்பாதிச் சயோ! இவ்வளவு செல்வாக்கு யாருக்கும் இல்லை.

வெங்க : போப்பா! பிரமாதச் செல்வாக்கு! யாருக்கு வேணும்? வர எலெக்ஷனுக்கு நான் நிக்கப்போறதில்லே!

ஹனு : என்ன அத்தான் அப்பிடிச் சொல்லிட்டே! நீ தான் சேர்மனா வரணும். ஒன்னைப்போலெ சாமர்த்தியசாலி இந்த ஊரில் மட்டும் அன்று—ஜில்லாவிலேயே இல்லை. ஒன்னைவிட ஜாஸ்தியா யாருக்கு ஓட்டு வரும்? ஒனக்கு இருக்கிற கௌரவம் ஊரிலே யாருக்குமே இல்லே.

சுந்த : இத்தனை நாளா அப்பிடித்தான் இருந்துதுடா! இப்பொ, அதெல்லாம் போச்சு. முதலில் சுசீலாவைப் பள்ளிக்கூடத் துக்கு அனுப்பியபோதே பாதிப் பேருக்குக் கோபம் வந்துது. பட்டணத்துலெ ஹாஸ்டல்லே தங்கி அவளைப் படிக்க அனுப்பிச் சப்பறம் யாரும் நம்ப மூஞ்சியில் முழிப்பதுகூட இல்லை. வேண் டாம்னு சொல்லச் சொல்லக் கேட்டாரா இவர். இந்த தடவை

எலெக்ஷன் எப்படி முடியப் போறதோ! அவள் படிக்காட்டாத் தான் என்ன முழுகிப் போயிடும்?

ஹனு: (சுந்தரம்மாவிடம்) இப்பவும் ஒண்ணும் கெட்டுப் போகல்லே!

வெங்க: (சுந்தரம்மாவிடம்) எத்தனை தடவை உனக்குச் சொல்லட்டும்? இவா எல்லாரும் கோபிச்சுப்பாளேன்னு நான் சுசீலாவை வீட்டிலே மூலையில் உட்கார வச்சுச் சமைக்கச் சொல்லுவேனா? இந்த வேலை இல்லையேன்னு யார் அழுதா? 'பிரின்சிபிள்' தான் முக்கியம். எல்லாரையும்போலே நானும் பயந்தாங்கொள்ளியா? பெண்களை ஏன் படிக்க வைக்கக் கூடாது? இங்கிலீஷ்க்காரிகள் ஒவ்வொருத்தியும் எவ்வளவு தூரம் படிக்கிரு? லேடி டாக்டர்களா வர்ற இங்கிலீஷ்க்காரிகளை, நம்பளவனுகள் வெட்கம், மானம் இல்லாம தூஷிக்கறது. உடம்புக்கு வியாதி வந்துட்டா, அவா காலையே பிடிச்சுக்கறது! நம்ப பொம்மனுட்டிகளே டாக்டர்களா வந்தா, ஐயோ, அந்தப் பறங்கிக்காரி குடுத்த தண்ணியைக் குடிச்சோமேன்னு ஒடம்பு சரியானப்பறம் அழ வேண்டியதில்லை யல்லவா? உலகமே தலை கீழானுலும் என்னை ஊரிலிருந்து விரட்டி விட்டாலும் நான் நினைத்ததைச் செய்தே முடிப்பேன். நாலுபேர் என்ன நினைப்பார்கள் என்கிறதைத் தவிர வேறெ யோசனையே இல்லைப் போல் இருக்கு? இந்த மரியாதை, நல்ல பேருங்கிற வார்த்தைகளைக் கேட்டாலே எனக்கு எரிச்சலா...வரது.

ஹனு: கொஞ்சம் சந்து கிடைச்சாப் போதும் இந்த மனுஷாளுக்கு. எப்படியாவது குத்தஞ் சொல்லணும். பெண்ணை படிக்க வைக்கறதுகூடப் பாவந்தான்.

வெங்க: வயசு வந்த பெண் படித்தால் அவளுக்கு எல்லாத் துர்க்குணங்களும் வந்து விட்டதாக நினைப்பு! 'டாம்'ஞ'டூம்' என்கிற படிதாண்டப் பத்தினிகள்ளாம் அறையிலே செய்கிற மோசங்கள் தெரியாது.

மகா: அவாளுக்கு வயத்தெரிச்சல்! பெறத்தியார் முன்னுக்கு வந்துடுருளேன்னு; தங்களைப் போலவே, முட்டாக்குப் போட்டுண்டு மூலையிலே உட்காரல்லையேன்னு. தங்கமான பெண். அவளுக்கென்ன கொறஞ்சு போச்சு! என்னிக்காவது எதிர்த்துப் பேசியிருப்பளா? படிப்பை விட்டுட்டு வீட்டிலேயே இருந்துடுன்னு

சொன்னபோது தனக்கு எத்தனை கஷ்டமா இருந்தாலும் சரின்னு ஒப்புக்கலே?

ஹனு: சுசீலாவைச் சொன்னவா நாக்குப் புழுத்துப் போகும்.

(வெளியே செருப்போசை கேட்கிறது. சுந்தரம்மா சட்டென்று எழுந்திருந்து உள்ளே போகிருள். நாராயண ராவ் நாயுடு வருகிருர். அட்டைக் கரி. உருட்டி விட்டாற் போன்ற பருமன். சிறு தொந்தி. கழுத்து மட்டும் தொங் கும். ஜில்பாக்கிராப். சற்று நரைத்த மீசை. கீழுதடு எண் ணெய் வழிகிறது. நெற்றியில் நாமம். ஷர்ட்டும், மல்லும், ஜரிகை அங்கவஸ்திரமும் அணிந்திருக்கிருர். வெளியில் செருப்பை விட்டு விட்டுக் கைத்தடியையும் சார்த்திவிட்டு உள்ளே வருகிருர். வெங்கடேசுவர்லுவுக்கு நமஸ்காரம் செய்கிருர். அவர் தலையை அசைத்து நாற்காலியைக் காண்பிக்கிருர்.)

நாராயண. ராவ்: உங்களோடெ கொஞ்சம் தனியாப் பேசணும்.

(வெங்கடேசுவர்லு ஹனுமந்த ராவை ஜாடையாகப் பார்க்கிருர். அவர் எழுந்திருந்து போகிருர்.)

நாரா: அப்பறம் என்ன யோசனை பண்ணினீங்க?

வெங்க: யோசிக்கறத்துக்கு என்ன இருக்கு? அவனைக் கூப்பிட்டு அன்னைக்கி ரொம்பக் கண்டிச்சேன்.

நாரா: ஒண்ணும் மாறினதாகத் தெரியல்லே. இன்னிக்கு மறுபடியும் வந்திருந்தான். நாளைக்கும் எங்க வூட்டுக்கு......

வெங்க: இதை விட என்ன செய்யறது, சொல்லுங்கோ? பச்சைக் கொழந்தையா? விவரம் தெரியாதவனு? அடிக்கமுடியுமா? அவனுக்கே புத்தி இருக்கணுமே தவிர நான் என்ன செய்ய முடியும்? நீங்க சொல்லுங்க. வீட்டிலே வச்சுப் பூட்ட முடியா தல்லவா?

நாரா: என் நிலைமையை யோசியுங்க. நாளைக்கி என் சித்தப்பார் மகனும் அவன் பெண்டாட்டியும் வர்ருங்க. இந்த மாதிரியா, உங்க மகன் கோஷாக்கள் வீட்டிலே புகுந்தா, என் மானம் மரியாதை, குலம், கோத்திரம் எல்லாம் பறந்து விடாதா? எத்தினி நாளைக்கிச் சும்மாயிருக்க முடியும்?

வெங்க : நீங்க மட்டுமா ; அவன் மேலே பலபேர் புகார் செய்திருக் காங்க. சுத்த ரௌடியாயிட்டான். அவனாலே நான் ஊருக் குள்ளே தலை நிமிர்ந்து நடக்க முடியல்லே. அவமானம் பிடுங் கித்தின்கிறது. கொஞ்சங் கூட அவன் எனக்கு அடங்க மாட் டான். என்ன செய்யட்டும் சொல்லுங்க.

நாரா : அப்பிடிச் சொன்னா எப்பிடிங்க? ஒங்க மகன்......னு...

வெங்க : சரி நீங்க ஏன் அவனை உள்ளே விடறீங்க? நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன். என் பிள்ளைன்னு தாட்சணியமே பார்க்க வேண்டாம். இந்த மாதிரி விஷயங்களிலேயா பாக்கறது? வீட்டுப்படி யேறினாக் கழுத்தைப் பிடிச்சுத் தள்ளுங்க.

நாரா : அப்பிடி இந்த ஊரிலேயே யாரும் செய்ய முடியாது. அந்தக் கூட்டம் வந்து புகுந்துட்டால்......மத்த பொம்பளைங்க மரியாதை யும் கெட்டுப் போயிடும். போலிசாருக்கே அவங்களை......

வெங்க : பின்னே, என்னாலே மாத்திரம் என்ன செய்ய முடியும். உங்க பெண்ணைக் கட்டுப் படுத்திப் பாருங்களேன்?

நாரா : என் மக நல்ல பொண்ணுதான். ஒருநாளும் இதுமாதிரி விஷயங்கள் தெரியாது அவளுக்கு. கோஷாவிலிருந்து வெளியே வராத பொண்ணு ; அவளுக்கு என்ன தெரியும்? எப்படித்தான் கண் போட்டானோ? எப்போதும் அவளை வெளியே எட்டிப் பாக்காதேன்னு சொல்லிக்கிட்டே இருப்பேன். பொம்பளை உள்ளே இருக்கற மட்டுந்தான் கௌரவம்; வெளியே வந்தா அப்பறம் என்ன இருக்குது?

வெங்க : ஆமாம். வெளியே வந்தும் மானத்தைக் காப்பாத்திக்கிறத் துக்கு அந்த துரைசானிகளாலேதான் முடியும். நம்பளவங்களுக்கு அது முடியாது. வெளியே வந்தா மட்டும் பதிவிரதை அல்லவா?

நாரா : ஆம்பிளை இருக்க விட்டாத்தானே! மீட்டிங்குகள்லே மட்டும், ‘அவுங்க தாயாருக்குச் சமானம்; மகாலட்சுமி அவதாரம்’ன்னு எல்லாம் சொல்றுங்க. வெளிலே வந்தா, வழியிலே போறவங்க மேலே எல்லாந்தான் கண்ணு. இதுதான் இந்தத் தேசத்துலே பொம்பளைங்களுக்கு மரியாதை! கோஷாக்கள் வீட்டுக் குள்ளே யே இப்படிப் புகுந்தா......?

வெங்க : உங்க பொண்ணு அவனைப் போகச் சொல்லக் கூடாதா?

நாரா: சொல்றதில்லே ; ஒண்ணுமே சொல்றதில்லே.

வெங்க: இனிமே எனக்குத் தெரியாது. ஒங்க இஷ்டம், என்ன வேணுமானலும் செஞ்சுக்கங்க. ஆன ஒன்னு, ஊருக்குத் தெரியருப்பலே ரகளே பண்ணின ஒங்க பொண்ணுக்குத்தான் கஷ்டம். 'கப்சிப்' பின்னு இருந்தூட்டா நல்லது.

நாரா: நீங்க யார் கிட்டெயும் ஒண்ணும் சொல்லாதீங்க. எதுக்கும் நீங்க இன்னெரு வாட்டி......

வெங்க: இன்னிக்கி ரொம்பப் பலமாக் கண்டிக்கறேன்.

நாரா: சரி; உத்தரவு.

(தெருவிலே வண்டி ஓசை)

வெங்க: நல்லது ; நல்லது.

(நாயுடு போகிருர் ; ரேழியிலிருந்து சுந்தரம்மாள் வருகிருள். வாசலிருந்து வண்டிக்காரன் பெட்டிகளேயும் கூடைகளேயும் கொண்டு வருகிருன். சுந்தரம்மாள் அவனே உள்ளே அனுப்புகிருள்.)

சுந்த: இதென்ன இது? இந்தப் பெட்டி அவளோடதில்லேயே. இந்தத் தொப்பி ஏது? இதெல்லாம் யாரோட சாமான்?

வண்டிக்காரன்: அம்மாவுது தானுங்க.

சுந்த: சரி; உள்ளே வை.

(வெளியே பூட்ஸ் சத்தம். சுசீலாவும் அவள் பின்னே சிவப்பிரகாசமும் நுழைகிருர்கள். சுசீலாவுக்கு இருபத்திரண்டு வயது, ஆனல் பதினெட்டு வயதுக்குள்ளாகவே மதிக்கலாம். குள்ளம்; ஒல்லி; அழகிய நெற்றி; கூந்தலே அழகாக முடிபோட்டிருக்கிருள்; தலேயில் சீப்பும் ஊசிகளும் செருகியிருக்கிருள்; நகை ஒன்றும் அணியவில்லே. பார்ஸி முறையில் அழகிய சரிகை போட்ட பட்டுப் புடைவை கட்டியிருக்கிருள். கழுத்துத் தெரியும்படி கத்தரித்த ஜாக்கெட். காலில் பூட்ஸ்.

சிவம் சூட்டும் பூட்சும் அணிந்திருந்தான். ஜேபியிலிருந்து ஸ்டெதஸ்கோப் தெரிகிறது. உயரம். மாநிறம். அரும்பு

மீசை. சுருட்டைமயிர். கிராப்புத்தலை. சற்றுக் கூனல். மெது வாகப் பேசுகிறான். சுசீலா, முதலில் சுந்தரம்மாளுக்கு ஷேக் ஹாண்ட் கொடுத்து, சிவத்தைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வெங்கடேசுவர்லுவிடம் போகிறாள். கை குலுக்குகிறாள். அப்பாவும் அம்மாவும் அர்த்த புஷ்டியுடன் பார்த்துக் கொள்ளுகிறார்கள்.)

சுசீ : இவர் எங்க காலேஜில் ஃபைனல் இயர் ஸ்டூடென்ட். மெடிஸினில் மெடலிஸ்ட். இந்த வழியாகப் போனார். நான் வற்புறுத்தி ஒரு வாரம் நம்மோடு தங்கும்படி கேட்டு அழைத்து வந்தேன்.

வெங்க : இப்படி வாங்கோ.

(சிவப்பிரகாசம் உட்காருகிறான். சுவருக்குப் பக்கத்தில் இருந்த நாற்காலியை மேஜைக்கருகே இழுத்துப் போட்டுக் கொள்ளுகிறான். சுசீலா அவனுடைய நாற்காலியின்மேல் கையைப் போட்டுக்கொண்டு நிற்கிறாள்.)

சிவம் : நீங்கள் இந்த ஊரின் சேர்மன் அல்லவா?

வெங்க : ஆமாம்.

சுசீ : நிறைய விசேஷம் இருக்கு அப்பா!... சிவத்தின் மூளையிலே! ஸானிடேஷன், எபிடிமிக்ஸ் இவைகளைப்பற்றி... நீங்க கத்துக்க வேண்டியதெல்லாம்... ரொம்ப உபயோகப்படும்.

(சிவம் ஜேபியில் தேடி, வெறும் சிகரெட் பெட்டியை எடுத்துப் பார்த்துவிட்டுக் கீழே எறிகிறான்.)

சுசீ : சிகரெட் இல்லையா?

சிவம் : ஆயிடுத்து. கடைசிச் சிகரெட்டைச் சித்தெ முன்னாலே நீ தானே எடுத்துண்டே!

சுசீ : பெட்டியில் இருக்கே! சாவியைக் கொண்டா. எடுத்துண்டு வறேன்.

சிவம் : பரவாயில்லை! வேண்டாம்.

(சுசீலா நாற்காலிக்குப் பின்புறமாகப் போய், சாவிக்காகச் சிவத்தின்மேல் குனிந்து கோட் ஜேபியில் தேடுகிறாள். சாவியை எடுத்துக்கொண்டு உள்ளே ஓடுகிறாள்.)

சிவம் : மெடிகல் டிபார்ட்மென்டில் ஸ்மோக் செய்யாமல் வழியில்லே ஸார் !

வெங்க : அப்படியா ?

சுந்த : ஸ்மோக்னு என்ன ?

வெங்க : அது ஒன்னு. அதெல்லாம் உனக்கென்ன ? பேசாதிரு. (சிவத்திடம்) நீங்கள்..., பிராம்மணரா ?

சிவம் : டாக்டரானபின் இதெல்லாம் என்னத்துக்காக ? எல்லாம் ஒன்னுதான். கத்திவச்சு அறுத்தால் எல்லாருடைய உடம்புக் குள்ளேயும் தெரியறது ஒண்ணேதான். பறையனுடை ரத்தத் தைவிட பிராம்மணனுடைய, ரத்தம் செவப்பாய் இருக்கும்னு நினைச்சேளா ?

வெங்க : நாங்கள் டாக்டர் அல்லவே !

சிவம் : யாரானுல் என்ன ? 'நாங்க படிச்சிருக்கோம்'னு சொல்லிக் கிறீக. நீங்க உயர்ந்த பிராம்மணர். என்னிக்கும் மாமிசமே சாப்பிடறதில்லே. நீங்க செத்தபின் ?

சுந்த : சீச்சீ ! இதென்ன பேச்சு ! அப்பிடியெல்லாம் சொல்லக் கூடாது.

சிவம் : ஏன் இவர் சாகவே மாட்டாரா ? இப்பொ ப்ரஸ்ஸிக் ஆஸிட் கொடுத்தால் இன்னும் கொஞ்ச நேரத்திலெ ஒண்ணுமே இருக் காது.

சுந்த : இதென்ன அமங்களமான பேச்சு !

வெங்க : உனக்கென்ன ; பேசாதிரு !

சிவம் : என்ன சொன்னேன் ! ஆம். நறுக்கரேம்னு வச்சுக் கோங்கோ. மாமிசம் சாப்பிடறதில்லேயே ! உள்ளே கத்திரிக் காயும் வடையும் இருக்கும்னு நெனச்சேளா ? மாமிசம் தின்னு லும் கறிகாயைச் சாப்பிட்டாலும்... எல்லாம் மாமிசந்தான். இதெல்லாம் புத்தியில்லாதெ சொல்றது. வேருெண்ணுமில்லே.

வெங்க : போனுப் போறது. எங்களுக்குப் புத்தியில்லாட்டாலும்...

சிவம் : எதுக்கு ? சாப்பாட்டுச் சங்கதிதானே ! உங்க அழுக்குக் சமை யலறையிலே, அந்த ஜெர்ம்ஸ்லே போடறதைவிட இந்த

மேஜை மேலெ வெச்சா ரொம்ப சந்தோஷப்படுவேன். இல்லேன்னு ரெப்ரெஷ்மென்ட் ரூமுக்குப் போறேன். உங்களுக்கு இடைஞ்சல் பண்ணமாட்டேன்.

(சுசீலா வந்து சிவத்தின் கையில் சிகரெட் பெட்டியைக் கொடுக்கிருள். சிவம் பற்ற வைத்துக் கொள்ளுகிருன் அவளுக்கும் ஒன்று. கொடுக்கிருன். அவள் மறுக்கிருள்.)

சிவம் : சித்தே இப்படியே வெளியில் போய்ட்டு வறேன். சாய்ந்தரமாச்சு.

சுசீ : இரு. நானும் வறேன். இந்த ஊர்லெ அழகான கொளம் இருக்கு. நீ பார்த்தே ஆகணும். முதல்லே இந்த உடுப்பை மாத்தி மூஞ்சியை அலம்பிக்க வேண்டாம்? இப்படி வா உள்ளே!

சுந்த : சுசீ ! நீ எங்கேடி கிளம்பறே !

சுசீ : கொஞ்ச தூரம் நடந்து போய்ட்டுவறேன்.

சுந்த: மறுபடியும் எப்பொ வருவே ?

சுசீ: நம்மாத்துலே எட்டரைக்குத்தானே சாப்பாடு. அப்பொ வந்துடுவேன்.

(சிவமும் சுசீலாவும் உள்ளே போகிருர்கள். சுந்தரம் மாளும் வெங்கடேசுவர்லுவும் முகம் வெளுக்க ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளுகிருர்கள்)

வெங்க : என்ன இது ?

சுந்த : இதென்ன ?

வெங்க : சுசீலாதானே !

சுந்த : சொன்னுக் கேட்டேளா ?

வெங்க : அவன் யாரு ?

சுந்த : யாரோ ?

வெங்க : வீட்டுக்குள்ளே என்ன நடந்தாலும் தொலையறது ! இவாளை வெளியே போக விடக்கூடாது. அரைமணியிலே ஊர் கொல்லென்று கிளம்பிவிடும்.

சுந்த. ஆமாமா. அதை எப்படித் தடுக்கறது?

வெங்க: சொல்லு; அவளோடே.

சுந்த: சொன்னுக் காதுலே வாங்குவளா?

வெங்க: இந்தண்டை கூப்பிட்டுக் கண்டிப்பாச் சொல்லு?

சுந்த: எனக்குத் தெரியாது; நீங்களே சொல்லுங்கோ.

வெங்க: நான் கூப்பிட்டதாக வரச்சொல்லு.

சுந்த: அவனும் கூடவே வருவான்!

வெங்க: வரட்டுமே, பயமா? வரச்சொல்லு—அப்பிடி இல்லே; அவளைத் தனியா வரச் சொன்னேன்னு சொல்லு.

சுந்த: அவன் எதிரிலேயா?

வெங்க: ஆமாம்; போ!

(சுந்தரம்மாள் போகிருள். வெங்கடேசுவர்லு சிந்தனையில் மூழ்கிவிடுகிருர். ஐந்து நிமிஷத்துக்கப்புறம் சுசீலாவும் சுந்தரம்மாளும் வருகிருர்கள். சுசீலா தலைவாரி, முகத்தை அலம்பிப் பௌடர் போட்டிருக்கிருள். வெங்கடேசுவர்லு கோபத்துடனும் ஆச்சரியத்துடனும் சுசீலாவை உறுத்துப் பார்க்கிருர். கண்ணைக் கொட்டுவதே இல்லை. தன் பார்வையால் சுசீலா நடுங்கிப் போய் விடுவாள் என்பது அவர் எண்ணம். சுசீலாவோ பயமே இல்லாமல் புன்னகையுடன் நின்ருள். ஒரு நிமிஷம் காத்திருந்தபின் வெங்கடேசுவர்லு பேசாமல் அப்படியே பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டு அங்கே பெஞ்சின்மேல் இருந்த லா புஸ்தகம் ஒன்றை எடுத்துப் பார்க்கிருள்.)

சுசீ: இந்தக் கிரிமினல் கோடைப்பற்றிச் சிவத்துக்குக் கூடக் கொஞ்சம் தெரியும். டாக்டர்கள் இதைப் படிக்கணும்.

(சற்று நேரம் பேசாமல் இருக்கிருள்.)

சுசீ: ஆகட்டும். போகணுமே!

வெங்க: என்ன இது?

சுசீ: எது?

வெங்க: மொதல்லே அவன் யார் சொல்லு!

சுசீ : யாரு ?

வெங்க : போதும். வாயை மூடு. ஒங்கூட வந்தவன்தான் !

சுசீ : வண்டிக்காரனா ?

சுந்த : சக்தியா, சிவமா ? அவன்தான் !

சுசீ : (உரக்கச் சிரித்து) சிவப்பிரகாசமா ? ஏன் ? அவன்...

சுந்த : அவன் எதுக்கு வந்திருக்கான் ?

சுசீ : நான் வரச்சொன்னேன்.

சுந்த : எதுக்காக வரச்சொன்னே ?

சுசீ : சிநேகிதாளை எதுக்காக வரச்சொல்லுவா ? ஒங்க சிநேகிதன்—ஜகந்நாதம் பந்துலு—ஏன் இங்கே வந்தான், பண்டிகையின் போது ? அது போலெ.

வெங்க : இவனை யார் அழச்சிண்டு வரச்சொன்னது ?

சுசீ : இப்பொ என்ன சொல்றேள் ? அவன் வீட்டிலெ இருக்கப் பிடாது எங்கிறேளா ?

வெங்க : இன்னும் என்ன மெதுவாக் கேக்கறே ? யாரோ வழியிலே போற கிருஸ்தவத் தடியனை வீட்டுக்குள்ளே இழுத்துண்டு வந்து...

சுசீ : மெதுவாப் பேசு ! போன லீவுலெ நீங்க அழச்சிண்டு வந்து டிபன் கொடுத்தேளே; அந்த டேனியல் ? 'கிறிஸ்தவத்தடியன்' என்னு நீங்க சொல்றதைக் கேட்டா, உங்களுக்கு ஓட்டுப் போட மாட்டார்.

வெங்க : இவன் அவனையும் விட மட்டம். அவனுக்கு ஒரு மதம், நீதி எல்லாம் இருக்கு.

சுசீ : இவன் பிராம்மணன் தான். பூணல் கூடப்போட்டுக்கறேன்னு சொன்னான். போனாப் போறது. ஒங்களுக்கு இஷ்டம் இல் லாட்டா, இந்த ரெண்டு நாளும் டிராவலர்ஸ் பங்களாவிலே இருப்பான்.

வெங்க : ரெண்டுநாள் என்ன ?

சுசீ : அவனுக்கு நான் ஊரைச் சுத்திக் காட்டறவரைக்கும்.

வெங்க : நீ என்ன சுத்திக் காட்றது, அவனுக்குத் தெரியாதா ?

சுசீ : நானும் அவன் கூட இருந்து ஊரைக் காமிக்கறேன்னு ஒப்புண்டதனலெதான் அவன் இங்கே எறங்கினுன். வாக்குக் கொடுத்தப்பறம் இப்பொ 'டிஸப்பாயின்ட்மென்ட்' செய்தா நன்னருக்குமா? எங்க காலேஜ் மூஞ்சீலே நான் முழிக்க வாண்டாமா?

வெங்க : வாழ்ந்தாப்பலே இருக்கு. ஒனக்குப் புருஷாளோடே என்ன சிநேகம் வேண்டிக் கிடக்கு?

சுசீ : ஒங்களுக்கும் 'ஹால்' தொரசானிக்கும் சிநேகம் இல்லேயா? அம்மாவும் தர்மா ராவும் சிநேகமா இல்லேயா?

சுந்த : சிநேகமா? தூரத்திலே இருந்து புருஷனோடே பேசின அது சிநேகமாயிடுமா?

வெங்க : சிநேகமான, மேலே விழுந்துதான் ஜேபியைச் சோதிப்பார்களா? அதுவும் சிகரெட்டுக்காக! நீயும் சுருட்டுக் குடிச்சியா, இல்லேயா, ஒருதடவை யாவது?

சுசீ : எப்போதும் குடிப்பேன். அப்போத் தலேவலி இருந்ததாலே வேண்டான்னு சொன்னேன்.

வெங்க: ஐயோ, ஐயோ! எவ்வளவு தூரத்துக்குப் போய்ட்டே! பொம்மனாட்டிக்கிச் சிகரெட் என்னடி கேடு?

சுசீ : ஸ்ரீ புரத்துப் பாட்டிக்கு அபினி வழக்கம் இல்லேயா? அந்தப் பாட்டியை யாரும் திட்டலேயே. வைத்திய முறையிலே, அபினியை விட சிகரெட் ரொம்பத் தேவலே. ஆயிரம் மடங்கு!

வெங்க : ஒனக்கு யார் பதில் சொல்ல முடியும்? அவன் மேலெ ஏன் அப்பிடி விழறெ?

சுசீ : தப்பா?

சுந்த : தப்பா, தப்பா! கரண்டியைக் காயவச்சு......

சுசீ : இரு, இரு; பத்து வயசுப் பெண்ணே, அந்த நாற்பது வயசுக்காரனோடெ, அகமுடையான்னு சொல்லி அன்னிக்கி மத்தியானம் உள்ளே தள்ளிக் கதவைச் சங்கிலி போட்டேளே! கத்தினலும் அழுதாலும் கதவைத் திறக்காதே!........அந்தக் கை செஞ்சது நியாயம்! இவனுடைய கோட்டைத் தொட்டது குத்தமா? அவன் செத்துத் தொலேஞ்சான். இல்லாட்டா; அவனே

யும் ஒங்களையும் சேர்த்துப் பிராஸிகியூட் செய்யலாமாம். சிவம் சொன்னான்.

சுந்த : சிவசிவா !

(சிவம் வருகிறான்.)

சிவம் : என்னையா ?

(நாராயணராவ் வந்து நாற்காலியில் உட்காருகிறார். சுந்தரம்மாள் உள்ளே போகிறாள்.)

சுசீ : (தலை நிமிர்ந்து) சிவம் ! நாம் போகலாமா ?

வெங்க : கொழந்தே ! ஒருவார்த்தை ! கொஞ்சம் இரு !

சுசீ : அப்பறம் வந்து பார்க்கறேன் ! சிவம் ! வா.

(இருவரும் தெருப்பக்கம் போகிறார்கள். வெங்கடேசுவர்லு சட்டென்று எழுந்திருந்து வாயிற் படிக்கருகே போகிறார்)

வெங்க : அம்மா, சுசீலா ! கொஞ்சம் இரு. அவரை அனுப்பிட்டு.

சுசீ : வேண்டியதில்லை. சுருக்கா வந்துடறேன்.

வெங்க : என் பேச்சைக் கேட்டு, இருக்க மாட்டையா ?

(நாராயண ராவிடம்) சுசீலாவை உங்களுக்குத் தெரிகிறதா ?

நாரா : சுசீலம்மாவா ? எவ்வளவு மாறிப் போயிட்டா ? வேறையாரோ, கிறிஸ்தவ.........ரொம்ப மாறிப்போயிட்டா. அந்த ஊர்த் தண்ணியாலே இருக்குமோ என்னமோ !

வெங்க : இவர் எங்க பெண்ணோட காலேஜில் புரொபசர் ! ரொம்பப் பெரிய டாக்டர், எங்க உறவுதான். இந்த ஊர் டாக்டருக்குத் தெரிஞ்சவர்.

சிவம் : நான் இன்னும் படிச்சிண்டிருக்கேன். சுசீலா இறங்கச் சொல்லி உயிரை வாங்கினதாலே இங்கே இறங்கினேன். இந்த ஊர் டாக்டரை எனக்குத் தெரியாது. நான் அப்பிடியெல்லாம் சொல்லலையே !

வெங்க : ஒங்க வேலையை ஆரம்பிக்கலாம். நம்ப மனுஷாதான். பரவாயில்லை.

நாரா : எம் மகளைக் கொண்டு போயிட்டாங்க என்ன செய்வேன். இனி என்ன செய்வேன்?

வெங்க : நிஜமா, நிஜமாவா? எப்பொ?

நாரா : நிஜம்மாத்தான், ஒரு மணி நேர மாச்சு, நான் வீட்டுக்குப் போன போது பொண்ணு இல்லே. இப்படி ஏதாவது நடக்கும்னு நான் நெனச்சேன்.

வெங்க : இன்னும் எனக்கு நம்பிக்கை இல்லே. பந்துலு தானா? என்னமோ! கவனிச்சுப் பாருங்கோ! அவன் இப்படிப்பட்ட வேலே செய்வானா? அவனுக்கு அவ்வளவு தைரியம் இல்லேயே!

நாரா : அதுலே சந்தேகம் இல்லே.

வெங்க : என்பாபம் இப்படி வெடிஞ்சுது. நீங்க இங்கே வந்து என்ன பிரயோஜனம்? நான் என்ன செய்யமுடியும்?

நாரா : வேறே எங்கே பேறதுங்க? என்ன செய்யட்டும்? இந்த மாதிரி பெத்த மகளே இழந்துட்டேன்!

வெங்க : எனக்கும் அப்படித் தான் இருக்கு. எம்பிள்ளே செய்தா எனக்குத் துக்கம் இல்லேயா? எத்தனே அபகீர்த்தி? ஊரார் வாயை எப்படி மூட முடியும்? என்பேர் கெட்டுப் போச்சு! இந்த மாதிரிப் பிள்ளே ஏன் பிறந்தானோ?

நாரா : என் கதி! என் கதி! எங்க சொந்தக் காரங்க நடுவுலே எனக்கு மரியாதை ஏது? பொம்பளே ஓடிப்போயிடுச்சுன்னா, அந்தக் குடும்பத்துக்கு ஆயிரம் ஜன்மம் எடுத்தாலும் கௌரவம் வருமா? இனிமே, நான் தலேயிலே முக்காடிட்டுத்தான் தெருவுலே நடக்கணும்.

சிவம் : எக்ஸ் கியூஸ் மி! உங்க ரெண்டு பேர்லெ ஒத்தராவது, பாவம்! அந்தப் பொண்ணேப் பத்திக் கவலேயே படலேயே! உங்க ரெண்டு பேரையும் விடக் கஷ்டம் அவளுக்குத்தானே.

சுசீ : நான்ஸென்ஸ்! கஷ்டப்படவேண்டியதுதான். ஓடிப் போனவளுக்கு, சௌக்கியம் கூடவா?

(சிவம் சுசீலாவை ஆச்சரியத்துடன் பார்க்கிருன்.)

வெங்க : (நாயுடுவிடம்) அவன் இன்னும் வீட்டுக்கு வரல்லே. வந்ததும் விசாரிக்கிறேன். ஆளனுப்பி அவனேத் தேடிப் பிடிக்கிறேன்.

நாரா : எப்படியாவது நாலுபேருக்குத் தெரியாதபடி, இன்னிக்கி ராத்திரியே அவளை எங்க வீட்டுக்குக் கொணுந்து சேக்கற வழியெப் பாருங்க.

(போகிறார்.)

வெங்க : பாத்தையா, உங்க அண்ணன் நடத்தையை! இப்பொ நீ ஆரம்புச்சுட்டே!

(கதவைத்திறந்து கொண்டு வந்த சுந்தரம்மாளிடம்)

கேட்டையா! உன் அழகான பிள்ளை செய்த வேலையை!

சுந்த : எல்லாம் கேட்டுண்டுதான் இருக்கேன்! அவர் ‘லொட்டு’ன்னு மொதல்லெ நம்பகிட்ட ஏன் வரார்?

வெங்க : வேறெ என்ன செய்வார், பாவம்?

சுந்த : ஒண்ணும் செய்ய முடியாட்டா, போய் முட்டிக்கச் சொல்லுங்கோ. இங்கே வந்து ஏன் எழவெடுக்கரார்?

வெங்க : இந்த மட்டும் அவர் நல்ல மனுஷனா இருக்கறதனாலே சரியாப் போச்சு. இல்லேன்னா?

சுந்த : என்ன செய்துடு வான்? இப்படிப்பட்டவா எத்தனையோ பேரைப் பாத்துருக்கான் அவன்? இவன் ஒரு கணக்கா, என்ன?

வெங்க : ஆமாம்! எல்லாத்துக்கும் துணிஞ்சவனுக்கு.........

சுந்த : துணிஞ்சது இவன் பொண்தான். எப்பொவாவது சம்சாரிகள் ஜோலிக்குப் போனதுண்டா, அவன்? இந்தக் கறுப்பு நாயுடுவோட பெண்தான் அவனுக்கு வேண்டியிருந்ததாக்கும்? அவனைத் தேடிண்டு அன்னிக்கி ஒரு தேவடியா வந்தாளே, நீங்க பார்க்கலையா? யாரோன்னு நெனச்சு நீங்க நாற்காலி கூடக் குடுத்து உக்காரச் சொன்னேளே......அவளோட அழகுக்கு முன்னாலெ ............

வெங்க : சீச்சீ! கொஞ்சங்கூட வெட்கமில்லாமெ.........அவனுக்குப் பரிஞ்சுண்டு வறயே!

(ஹனுமந்த ராவ் வருகிறார்.)

ஹனு : கேட்டேளா சேதி?

வெங்க : ஆகா! எங்கே அந்தக் கம்மனாட்டி!

ஹனு : தெரியாது. நாயுடுக்கள் எல்லாரும் சேர்ந்துண்டு 'இன்னிக்கிப் பந்துலுவைக் கொல்றேம், இல்லாட்டாச் சாகிறேம்' என்று கொக்கரிக்கரு.

சுந்த : கிழிச்சா! அவனை என்ன செய்ய முடியும்? அவன் விசில் அடிச்சான்னு......

வெங்க : சரிதான்; வாயைமூடு! மானம் போறது!

ஹனு : நீங்க வாயைத் தெறக்காதே பேசாமெ இருக்கறதுதான் இதுக்கெல்லாம் காரணம்!

வெங்க : எல்லாருக்கும் தெரிஞ்சுபோச்சா? இனிமே எனக்கு என்ன கௌரவம் வச்சு வாழறது? என்ன செய்வேன்? எங்கே அவன்?

ஹனு : இத்தறுவாய்க்கி ஊர் தாண்டியிருப்பா! வீட்டிலே பணம் ஏதாவது போச்சோ என்னமோ பாருங்கோ.

(மகாலக்ஷ்மி அம்மாள் வந்து பின்புறம் நிற்கிருள்.)

வெங்க : ரெண்டுபேரையும் புடிச்சு முதுகுத்தோலை...

மகா : பாவம்! அந்தப் பொண் கதி!......

சுந்த : அவளுக்கென்னவாம். ஆசைப்பட்டவன் கெடச்சுட்டா னேல்லியோ? கைக்குள்ளே போட்டுண்டுட்டா. இனிமே விடுவளா? ஆம்பளே ராஜாமாதிரி. மனம் போனபடி திரிவான். பொம்மனாட்டிக்கிக் கொஞ்சம் ஒடம்புலெ நெனவு இருக்க வேண்டாம்? அவனுக்கு எத்தனை அவமானத்தைக் கொண்டு வந்து வச்சுட்டா! அவளுக்கு இந்தத் தண்டனை வேணும்!

(பந்துலு வருகிருன். வயது இருபதுக்குமேல் இருக்கும். உயரமும் பருமனுமாக நல்ல நிறமாக இருக்கிருன். வேஷ்டி, பக்கவாட்டில் பித்தான் வைத்த சட்டை, தோளில் மடித்துப் போட்ட அங்கவஸ்திரம், கையில் கனத்த தடி. வாயில் அடக்கிய வெற்றிலை பாக்கு.)

பந்துலு : (சிரித்த முகத்துடன்) என்னவோ தடபுடல் செய்யறேளே! (சுசீலாவைப் பார்த்து) இதோ டாக்டரம்மாள்!

(சுசீலா முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்ளுகிருள். பேசுகிறதில்லை. யாருமே அவனோடு பேசுவதில்லை. பந்துலு எல்லோர் முகத்தையும் பார்க்கிருன்.)

பந் : ஏன் இப்படி இருக்கேள் ? வீட்டிலே யாரோ செத்துப் போயிட்டாப்பலே !

(யாரும் பேசவில்லை.)

சிவம் : நான் சொல்லட்டுமா ?

(பந்துலு திகைப்புடன் சிவத்தைப் பார்க்கிருன். ஹனுமந்த ராவ் பல்லை இளிக்கிருர்.)

சிவம் : நான் மிஸ் சுசீலாவின் பிரெண்டு. நீங்கதான்போலிருக்கு; யாரோ ஒரு பெண்ணைக் கடத்திண்டு போயிட்டேளாம். அதுக் காகத்தான் இவாள்ளாம் பேசாதிருக்காப்போலெ இருக்கு !

பந் : பெண்ணைக் கடத்திண்டா ? எந்தப் பெண்ணை ?

சிவம் : என்னமோ கேளுங்கோ. அந்தத் தொந்திக்காரர் பெண்ணைன்னு நினைக்கறேன் !

ஹனு : ஒண்ணுமே தெரியாதவன்போலெ எப்படி நடிக்கருன் பாருங்கோ. ஊரெல்லாம் மொழங்கறது. இவருக்கு மட்டும் ஒண்ணுந் தெரியாதாம் !

பந் : (ஹனுமந்த ராவிடம்) இப்பிடி மூக்கைச் சுத்தி வளைக்காமெ, சொல்றத்தைச் சட்டுன்னு சொல்லி அழேன் !

ஹனு : அப்பனே ! அந்த நாராயணராவோட பொண்ணை நீ கடத்திண்டு போனதாக இப்பொத்தான் சொல்லிட்டுப் போனர், பாவம் !

பந் : சீச்சீ ! எனக்கொண்ணுந் தெரியாதே ! என்ன ஆச்சு ! அந்தப் பொண்ணு வீட்டிலே இல்லையா ?

ஹனு : என்ன பாசாங்கு ! ஐயாவுக்கு ஒண்ணும் தெரியாது ! என்ன பித்தலாட்டம் !

வெங்க : (ஒரே பாய்ச்சலில் பந்துலுவின்மேல் பாய்ந்துவந்து) தெரி யாது ? உனக்குத் தெரியாட்டா, வேறெ யாருக்குத் தெரியும் ? எனக்கு எங்கேடா, வந்து பொறந்தே ! என்னை ஏன் இப்படி அழவைக்கிறே ! போய்த் தொலையறதுதானே எங்கேயானும் ? பீடை ஒழியுமே ! எவ்வளவுதான் பொறுக்கறது ? நான் தலை தூக்கி நடக்க விடுவையா, மாட்டையா ?

பந்: என்னை ஏன் இப்படித் திட்டறேள்? எனக்கு ஒண்ணுந் தெரியாது! எப்படிச் சத்தியம் பண்ணச் சொன்னாலும் பண்ணறேன்.

வெங்: நீ பொய் சொல்றது எனக்குப் பத்திண்டு வறது! தெரியாதுன்னு வேறெ சொல்றே! உனக்குத் தெரியலில்லன்னா அந்தப் பொண்ணு என்ன ஆச்சு?

பந்: அதென்னமோ?

ஹனு: என்னமோவாம்! இப்பத்தான் பொறந்த பச்சைக் கொழந்தை?

வெங்: உனக்கு அந்தப் பொண் கிட்ட என்ன ஜோலி? ஏன் அவா வீட்டுக்கு நீ போனே?

பந்: அத்தச் சங்கதி உங்களுக்கென்னத்துக்கு? அது என் பிஸினெஸ்.

ஹனு: பிரமாத பிஸினெஸ்!

வெங்க: எனக்கு என்னத்துக்கா? எனக்கு என்னத்துக்கா? ஊரெல்லாம் சிரிக்கறபோது எனக்குச் சம்பந்தமில்லையா?

பந்: அந்தப் பொண்ணை நீங்க தூக்கிண்டு வல்லையே; உங்களுக்கென்ன?

வெங்க: அவமானம் யாருக்கு? நாராயணராவ் யார் வீட்டுக்கு வந்தான். உனக்கு வெட்கமா, மானமா, ஒரெழவும் இல்லே!

சிவம்: கடைசியிலே நீங்க கவலைப்படறதெல்லாம் உங்க பேர் கெட்டுப் போறதேன்னுதான்!

வெங்க: இன்னும் இதைவிட என்ன வேணும்? (ஹனுமந்தராவிடம்) நாராயணராவை அழைச்சிண்டுவா! இப்ப ரெண்டிலே ஒண்ணு தெரிஞ்சு போறது.

ஹனு: (போய்க்கொண்டே) இவருக்கு இன்னும் சந்தேகந்தான்! (போகிறார்)

மகா: பந்துலு! ஏண்டாப்பா! நீ இன்னும் இப்படிக் கெட்ட காரியங்களை விடமாட்டேங்கறையே!

வெங்க: அவன் நாசமாப் போனான்! அவன் ஏன் விடுவான்?

சுந்த: தேவடியாக் கூட்டத்தோடெ நீ இருந்த காலத்துலே நாங்க ஏதாவது சொன்னோமா? இப்படி சம்சாரிகள் குடியைக் கெடுத்தா அவா சும்மா விடுவாளாடா, அப்பா?

வெங்க: அதிலேயும் நாராயணராவ் நாயுடு! அந்த வார்டு பூராவும் அவர் சொன்னபடிதான் நடக்கும்! வளர்த்துப் பெரியவனாக்கி னத்துக்கு இந்தப் பிரகஸ்பதி செய்த உபகாரம் இது.

சிவம்: குழந்தைகளை வளர்ப்பது யாருக்காக?

வெங்க: எதற்காக வளர்க்கவேண்டும்?

சிவம்: அவாளை எதுக்காக உலகத்துக்குத் தருவிக்கணும்? தருவிச்சப் புறம் வளத்தறது உங்க கடமையல்லவா?

வெங்க: எங்க வயித்துலே பிறக்காட்டா, இவ்வளவு அவதூறும் பாழாய்ப் போகுமேன்னு, இவனை வெற்றிலை பாக்கு வெச்சு அழைச்சோமா? நாங்க என்ன தருவிக்கறது?

சிவம்: இல்லையா, பின்னே?

வெங்க: குழந்தைகள் பிறந்தா இப்படி எங்களை அழவைக்கணுமா?

சிவம்: அவரை ஏன் அப்படி வளர்த்து விட்டீங்க?

வெங்க: நாங்க வளர்க்கறதென்ன? அப்படி வளந்திருக்கான்.

சிவம்: தாயார் தகப்பனாருக்கு இல்லாத புத்தி குழந்தைகளுக்கு வரவே வராது. உங்க மூக்குச் சப்பையானால், அதுக்கும் சப்பை யாகும். ஏன் இப்படி இருக்குன்னு, அதோடெ சண்டை போட்டா என்ன லாபம்? உங்க குணமேதான் இவருக்கு வந் திருக்கு! நீங்க இப்போ கௌரவமும் சேர்மன் பதவியும் உள்ள வர். இந்தக் கௌரவமே போயிடும் என்கிற பயமே இல்லைன்னு வச்சுக்கோங்கோ. நாலுபேர் உங்களைக் கேவலமா நினைப்பாளே என்கிற தீர்மானம் இல்லாட்டா, நீங்களும் இப்படியேதான் இருப்பேள்!

வெங்க: போதும்; நீங்க மேலே பேசவேண்டாம்.

சுசீ: அப்படி இல்லேப்பா! சிவம் வைத்திய முறையிலே பேசறான். அது உனக்குத் தெரியாது.

வெங்க: கடைசியிலே கொழந்தைக பேசற பேச்சு இதுதான்.

மகா: நிஜந்தாண்டா, அவர் சொல்றது! உன்னோட சிறு வயசிலே நீ இருந்தத்தை நெனச்சுப் பாத்துக்கோ!

வெங்க: நான் எங்க அப்பா பேரைக் கெடுத்தேனு?

மகா: ரகசியமாத் திருட்டுத்தனமாச் செய்வே; பந்துலு பகிரங்கமாச் செய்யருன். பந்துலுவைப் பாக்கறபோது, நீ சின்ன வயசுலே இருந்ததுதான் ஞாபகம் வறது.

வெங்க: போதும் பேசாமெ இரு!

(தெருக்கதவுக்கு வெளியே இருந்து காந்தம்மாள் மெதுவாக-மெல்லிய குரலில்,

"பந்துலுகாரு இருக்கிருரா?"

என்று கேட்கிருள். யாரும் பதில் சொல்லவில்லை. எல்லோரும் திகைத்து நிற்கிருர்கள். பந்துலுவுக்குச் சற்றுப் பயங்கூட உண்டாய்விட்டது. மறுபடியும் அவள் கூப்பிட்டாள்; பதில் இல்லை.)

சிவம்: இருக்காரம்மா! இப்பத்தான் வந்தார்.

காந்தம்: ஒருவாட்டி அவரை இப்படி வரச்சொல்லுங்களேன்.

சிவம்: (பந்துலுவிடம்) அந்தம்மா ஒங்களைத் தேடிண்டு வந்திருக்கா.

பந்: நீங்க யாரோ! நீங்க ஏன் இதிலே தலையிடறேள்?

சிவம்: அவர் வறதாகத் தோணல்லே! இங்கே இருக்கார். இப்படி உள்ளே வாங்கோ!

காந்: பந்துலு காரு! சாயங்காலத்துலேருந்து உங்களைத் தேடிட்டே இருக்கேன். அவசியம்! ஒரு சங்கதி சொல்லணும். வரமாட்டீங்களா?

பந்: இங்கே ஏன் வந்தே? வீட்டுக்குப்போ. வந்து பேசறேன். இங்கேயா?

காந்: சித்தேக் கேட்டுட்டுப் போங்க. எனக்காக வரமாட்டீங்களா?

பந்: மொதல்லெ நீ போ!

மகா: போடா! எதுக்காக அந்தப்பொண் வந்திருக்கோ!

வெங்க: போ! போ.

(மறுபடி செருப்புச் சத்தம். ஹனுமந்தராவும் நாராயண ராவும் வருகிருர்கள். சுந்தரம்மாள் உள்ளே போகிருள்.)

நாரா: எங்கேயாவது இருக்காரா ஐயா!... இதோ! ஏண்டி! மானங் கெட்ட மூதேவி! வந்துட்டியா? இனி விடுவேனு! உயிரோடே போவியா?

(தடியைத் தூக்குகிருர்.)

காந்: அம்மாடி, ஐயையோ! அப்பா!

(சிவமும் மகாலட்சுமி அம்மாளும் குறுக்கிடுகிருர்கள். அவர்களுக்கும் அடி விழுகிறது. சிவம், நாராயணராவின் தொந்தியில் உதைத்துக் கீழே தள்ளுகிருன்.)

நாரா: (எழுந்திருந்து) நீ யாரையா? யாரையா, நீ!

சிவம்: உனக்குப் புத்தி இல்லே?

நாரா: எம் மகளை நான் அடிப்பேன்; உனக்கென்னவாம்?

சிவம்: அப்பறம் நான் கட்டுக் கட்ட வேண்டாமா? நான் பஞ்சையும் லின்டையும் ஊர் சுத்தறபோது கூடச் சொமந்துண்டு திரி வேன்னு நெனக்கிறீங்களா?

நாரா: என்னுது இது? போ... எட்ட! எ...எங்கே அவ! எங்கே அந்தச் சிறுக்கி?

சிவம்: அடி; சொல்றேன்! என்ன இது? 'பார் பாரிக் ஏஜ்'ன்னு நெனச்சுட்டையா? மாடுதான் முட்டிக்கும், மனுஷா முட்டிக்க மாட்டா!

நாரா: நீ என்ன நடுவிலே, ரகளை!

சிவம்: மாடுகள், மனுஷா இருக்கற எடத்துக்கு வரக்கூடாது. எலும்பு நொறுங்கினு...?

மகா: பொம்மனுட்டிப் பொண்ணு; சிறுசு! அதனுலே அடிக்கிரு. வாய் இல்லே. கேட்பார் இல்லே. ஆம் ஆண் புள்ளையா இருந்து பலசாலியாவும் இருந்தா இப்படி அடிப்பியா, ஐயா? சொந்தக் குழந்தையானுலும் கொல்லுவாங்களா, என்ன?

சிவம் : (பந்துலுவைக் காண்பித்து) இவர் மேலே கையை வச்சுப்பாரு, தெரியும்! உன் தடியும் நீயும் பறந்து போயிட வேண்டியது தான். 'கவ்வர்டு!' பொம்பளையை அடிக்க வந்துட்டான்!

நாரா : அவ செஞ்ச வேலையை...

சிவம் : அந்தப் பொண்ணு மனுஷா செய்யற வேலைதான் செய் திருக்கு! நீ மிருகம் செய்யற வேலையைச் செய்யறே! இந்த மாதிரி மிருகத்தின் வீட்டைவிடடு, அந்தப் பொண்ணு வந்தது தப்பா? வந்தது சந்தோஷமா இருக்கு!

வெங்க : நாயுடு! இங்கே இந்த ரகளை எல்லாம் வேண்டாம்! உங்க மகளை நீங்க ஒரு நாழிகை முன்னாலே அழைச்சிண்டு போங்கோ! அப்புறம் நடக்கற சங்கதியைப் பார்ப்போம்.

சிவம் : முடியாது; அவர் அழைச்சிண்டு போகக்கூடாது! இன்னி ராவுலேயே கொன்னுடுவான்.

(ஹனுமந்த ராவ் சிரிக்கிறார்.)

வெங்க : கொன்னாலும் சரி; என்ன செஞ்சாலும் செஞ்சுக்கட்டும்! உனக்கென்னையா அக்கறை!

சிவம் : எனக்கா? நான் டாக்டர்! எனக்குத்தான் அக்கறை. முடியாது. அழைச்சிண்டு போகச்சொல்லு; பாத்துடறேன்!

நாரா : நீ என்னத்தைச் செய்யமுடியும்?

காந் : நான் போகமாட்டேன். இங்கிருந்து அசைய மாட்டேன்!

சிவம் : ஆஹா! அதுதான் சரி!

(ஷேக்ஹாண்டு கொடுக்கப் போகிறான்.)

நாரா : (பந்துலுவைக் காண்பித்து) இவர் இங்கே இருக்கற மட்டும் அவ ஏன் நகருவா?

வெங்க : நாயுடு! இவன் உங்க பெண்ணை அழைச்சிண்டு வல்லை யாம்!

நாரா : வேறெ யாரு? சொல்லட்டும் அவரே அதை!

பந் : எனக்கு ஒண்ணும் தெரியாது! நான் அவளை அழைச்சிண் வரல்லை. காந்தம்மாவையே கேளுங்கோ.

ஹனு : எல்லாம் பொய் ! திருட்டுத்தனம் !

நாரா : என்னடி ! சொல்லேன் !

காந் : அவர் வரச்சொல்லல்லே. நாலு நாளைக்கு முன்னே, எனக்கு ஏதாவது கஷ்டம் வந்துச்சுன்னு, அவர் என்னைக் காப்பாத்த றேன்னு சொன்னரு !

நாரா : உனக்கு என்ன பாழும் புத்தி ! எவ்வளவு துணிஞ்சு போயிட் டேடீ ! குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பாப் பொறந் தியே பாவி !

மகா : பின்னே எதுக்காக அம்மா வந்தே ?

காந் : (விக்கி விக்கி அழுது கொண்டே) பந்துலு ஐயாவுடன் பேசிட் டிருந்ததுக்காக இன்னிக்கிச் சாயங்காலம் ரூமிலே தள்ளி அடிச் சுட்டார் எங்க நயினு ! செத்து போயிட்டேன்னு நெனச்சேன். 'இன்னொருவாட்டி பந்துலு வந்தப்பொப் பேசிட்டிருந்தே, கழுத்தைத் திருகிடுவேன்' இன்னரு. 'பேசாட்டிக் கொன்னுடு வேன்'னு இவர் சொன்னரு. பயமா இருந்திச்சு. பந்துலு ஐயாவிடம் தங்கிப் பூடலாம்னு வந்தேனுங்க.

சிவம் : டிரனீ ! டிரனீ ! பெத்த கொழந்தைகளைத் தகப்பன்மார் படுத் தற பாட்டைப்போலக் கசாப்புக் கடைக்காரன்கூட மிருகங்களைப் படுத்தமாட்டான். குழந்தைக மேலே ஆசையாம் !

வெங்க : குழந்தைக, பெத்தவாளைப் படுத்தறபாடு ?

சிவம் : என்ன படுத்திப் பிட்டா ?

வெங்க : என்னவா ? பாருங்கோ ! நாயுடுவாலே நாளைமொதலாத் தலை நிமிர்ந்து நடக்க முடியுமா ?

சிவம் : அந்தப் பொண்ணே வந்துட்டா... இவருக்கு என்ன வெட்கம் ?

வெங்க : அவர் பொண்ணுனத்துனலே !

சிவம் : பெத்தவா தலையை நிமிர்த்தி வைக்கறத்துக்காகத்தான் பிள்ளை குட்டி ; இல்லையா ? அவர், தலை எங்கே தாழ்ந்து விடு மோன்னு தடியெடுத்து அடிக்கிறர்.

நாரா: பொண்ணு, கட்டுக்குமீறி அசல் மனுஷனோடே பேசினுப் பேசாம இருப்பாங்களா?

காந்: மூணுமாசம் பேசாமதான் இருந்தாங்க; பத்துலு காரு ரகசியமா வந்த வரைக்கும்! நயினுவுக்கு வேண்டிய காயிதங்களை அவர் கொணுந்து குடுக்கறமட்டும், ஏதோ சின்னப் பசங்கன்னு விட்டுட்டாங்க! எங்க சின்ன நயினு மகன் வறேன்னு காயிதம் போட்டப்பறம் இவரை வரக்கூடாதுன்னு சண்டைப் பிடிக் கருங்க.

சிவம்: இவ்வளவு மாசமாத் தப்பாகாத வேலை இன்னிக்கி ஒரு நாளுலே தப்பாயிடுத்து, அல்லவா?

நாரா: ஆமா! பின்னே, நாலுபேர் என்னு பேசுவாங்க?

சிவம்: சரிதான்; தெரிஞ்சுது!

வெங்க: சரி; இன்னும் என்ன தாமசம்? நாயுடுகாரு! உங்க பொண்ணை நீங்க அழைச்சிண்டு போங்கோ. இதோடெயாவது இந்த ரகளை முடியும்.

நாரா: நான் இட்டுட்டுப்போய் என்ன செய்யட்டும்?

வெங்க: ஏதோ அடிபட்ட ரோசத்தாலே...

சிவம்: பாதை பொறுக்க முடியாமெ...

வெங்க: ஏதோ தெரியாத்தனத்தாலே அத்தப் பொண்ணு வெளியே வந்துட்டான்னு, பெத்த பொண்ணை விடமுடியுமா, ஐயா?

நாரா: விடாமெ...?

வெங்க: ஆனல்... எங்க வீட்டுக்கு என்னத்துக்கு இதெல்லாம்?

நாரா: வேறெ யார் வூட்டுலெ (பந்துலுவைப் பார்த்து) இவர் இங்கே இருக்கிறப்போ?...

வெங்க: இப்பொ அவன் தான் என்ன செய்வான்? நடந்ததென் னமோ நடந்து போச்சு!...

நாரா: உங்களுக்கென்னங்க? உங்க பையன் சந்தோஷமாத்தான் இருக்கான். வந்த கேடு எம்மகளுக்குத்தானே?

வெங்க: என்னையா, வந்துடுத்து, உங்க பொண்ணுக்குமட்டும் அழைச்சிண்டுபோயி ரெண்டாம் பேர் அறியாமெ வீட்டிலெ!

வச்சுக்குங்கோ. யார் என்ன சொல்லுவா, பார்ப்போம்! யாரையா சொல்றது? அவாளை வரச்சொல்லுங்கோ, இங்கே! இந்த மாதிரி விவகாரம் இல்லாத வீடு எது சொல்லுங்கோ. இவா ரெண்டு பேருக்கும் பார்க்கப் போனா, சின்ன வயசு. வெளியிலே சொன்னா வெட்கக் கேடு. எல்லா எடங்களிலேயும் எல்லாரும் பெரிய மனுஷா தான். எல்லாருடைய பெண்டாட்டி களும் பத்தினிகள் தான். நிறைய, சரிகை போட்ட புடைவை கட்டிண்டு, பெரிய பொட்டு வச்சுண்டு, வெட்கப்பட்டுண்டு தரையைப் பார்த்து நடந்தாப் போரும்.

சிவம்: அப்படியானா, உங்களுக்கு ஏன் இந்த அவமானம், கஷ்டம் எல்லாம்? எல்லாருடைய வீட்டிலேயும் சாதாரணமா, நடக்கிற விஷயந்தானே இது!

வெங்க: எங்க வீட்டுலே என்னிக்கும் இதுமாதிரி...

சிவம்: ஒங்க வீட்டுச் சங்கதி இன்னொத்தருக்குத் தெரியும். அவா சங்கதி ஒங்களுக்குத் தெரியும்! அவாளுக்குத் தெரியுங்கறதும் ஒங்களுக்குத் தெரியும்; ஒங்களுக்குத் தெரியுங்கறதும் அவா ளுக்குத் தெரியும். ஒத்தர் விஷயம் மற்றவருக்குத் தெரியாது போலெ நடிக்கணும். பிறத்தியாருக்குத் தெரியாமல், உள்ளே எவ்வளவு அழுகிப் போனாலும் சரி; வெளிக்குமட்டும் கௌரவம் உள்ளவர்களாகக் காட்டிக்கணும். இதுதான் வாழ்க்கைக்கு ஆதாரமான சூத்திரம்.

வெங்க: ஏதோ ரகசியம் இருக்கு. வாங்கோ நாயுடு...

நாரா: அவ்வளவுதான்! நான் அவளை அடிச்சுது எதுக்காக? உங்களுக்கு 'நாயுடு'ப் பேரனோ, பேத்தியோ...

வெங்க: மெதுவா, மெதுவா, வேண்டாம்; வேண்டாம். தெரிஞ்சுது. அம்மாடியோ!

(நாற்காலியில் தொப்பென்று விழுந்து பெருமூச்சு விடுகிறார்.)

சிவம்: கங்ராசுலேஷன்ஸ்.

(பந்துலுவுக்கு ஷேக்ஹாண்டு கொடுக்கிறான். பந்துலு திகைப்புடன் பயந்து போய்த் 'திருதிரு' வென்று விழிக்கிறான்.

ஹனுமந்தராவ் சிரிக்கிருர்.

சுந்தரம்மாள் உள்ளேயிருந்து, "அந்த முண்டை இந்த வீட்டுலே ஒரு நிமிஷங்கூட இருக்கமுடியாது. வெளியே தள்ளுங்கோ. கழிசடை!" என்கிருள்.)

வெங்க: என்ன செய்யறது?...

(பந்துலுவிடம்) அடே! எனக்கு எங்கிருந்து வந்து வாச்சேடா! ஒன்னைப் பெத்த வயத்துலே பெரண்டையைத் தான் வச்சுக் கட்டிக்கணும்? நீ செத்தொழிஞ்சாலும் இதை விட நன்ளுருக்கும்!

நாரா: நான் வறேனுங்க.

(உள்ளேயிருந்து சுந்தரம்மாள், "அவளை, அந்தக் கழிசடையைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுங்கோ! மொதல்லே, அனுப்புங்கோ" என்கிருள்.)

சிவம்: நானும் போறேன்! பசிக்க ஆரம்பிச்சுடுத்து.

(எழுந்திருக்கிருன்.)

சுசீ: உனக்கு, பங்களாவுக்குப் போக வழி தெரியாது. நான் வந்து காண்பிக்கிறேன், இரு.

வெங்க: தப்பு! மன்னிக்கணும். ஏதோ இந்தத் தகராறுலே என் புத்தியையே இழந்துட்டேன். இதோ, சாப்பிடப் போவோம். இது ஒரு வழியா முடியட்டும். (நாயுடுவிடம்) நாயுடுகாரு! எனக்குத் தலை சுத்தறது. என்ன செய்யச் சொல்றேள்? சொல்லுங்கோ.

நாரா: எனக்குத் தெரியாது; உங்க இஷ்டம்; உங்க மருமக!...

மகா: இந்த நிலையிலே பெத்த பெண்ணை எங்கே ஐயா, போகச் சொல்லறே!

நாரா: எனக்கென்ன? இந்த நிலைக்கு நான் வரச் சொன்னேனு? என்னக்கு இன்னும் பசங்க இருக்காங்க. நாளைக்கி ஜாதிக் கட்டுப் பாடு...

சிவம்: (பந்துலுவிடம்) இதுக்கெல்லாம் நீங்கதான் காரணம். ஒரு வார்த்தைகூட வாயைத் தெறந்து பேசமாட்டேங்கறேளே?

(உள்ளேயிருந்து சுந்தரம்மாள், "அவளு காரணம்? அவளு? அவதான். அவனைப் பாழாக்கி, பலவந்தப் படுத்திப்பிட்டா. அவளா, அவளு? என்னிக்கும் அவனுக்கு ஒண்ணுமே தெரியாது!" என்கிருள்.)

(ஹனுமந்த ராவ் சிரிக்கிருர்.)

வெங்க: போதும்; பேசாமல் இரு.

சிவம்: (பந்துலுவிடம்) என்ன, ஐயா! நீங்க என்ன சொல்லறேள்?

ஹனு: என்ன சொல்லுவான்? இன்னும் எங்கேயாவது இன்னெரு பொண் இருந்தா......

பந்: (ஹனுமந்த ராவைப் பார்த்து) வெட்கம் இல்லாமே நீ கூட என்னைக் கேலி செய்யறையா? அன்னிக்கித்தானே நாக ரத்தினத்தை விட்டுக் காலாலே ஒதைக்கச் சொன்னேன்?

சிவம்: அவரைப்பத்தி என்ன? பாவம்! அந்தப் பொண்ணை அந்தக் குண்டு மனுஷ்யன் அடிக்க இழுத்துண்டு போளு, நீங்க பார்த்துண்டு இருக்கப் போறேளா?

பந்: எனக்குத் தெரியாது. நான் என்ன செய்வேன்? நான் வரச் சொன்னேளு? அவ்வளவு அக்கறையா இருந்தா நீங்க காப்பாத்துங்கோ. எனக்கென்ன வந்துது?

நாரா: (கோபத்தோடு) இது பத்தாதா? இன்னும் பேச வெட்கமா இல்லே? மூணுமாசமா—உல்லாசமா—காலே கணக்கா...

மகா: பெத்த தகப்பளுரான உங்களுக்கே கரிசனம் இல்லாட்டா. அவனுக்கா...

நாரா: (காந்தத்திடம்) நான் போறேன். இவரைத் தானே தேடிட்டு வந்தே. இவரோடவே இருந்துக்க. திரும்பி என் வீட்டுப்படி மிதிச்சேன்ளு... செத்தே...

(நாயுடு வெளியே செருப்புப் போட்டுக் கொள்கிருர்.)

வெங்க: நாயுடு! ஓய் நாயுடு! போகாதேங்கோ, ஒரு வார்த்தை!

காந்தம்: பந்துலுகாரு! நீங்கதான் எனக்குக்கதி! என்னைப் போகச் சொல்லாதீங்க, அநாதை!

(நாராயணராவ் நாயுடு போகிருர்.

கதவைத் 'தடால்' என்று திறந்துகொண்டு சுந்தரம் மாள் நுழைகிருள். 'விடு, விடு' என்று வந்து காந்தம் மாளின் ரவிக்கையைக் கழுத்துப்பக்கம் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு போகிருள்.)

சுநத: ஃபோ! மறுபடியும் இந்த வீட்டு வாசலை மிதி! சொல்றேன்.

(காந்தம்மாள் "அப்பா! அப்பா!" என்று அழுகிருள். குரல் எட்டப் போகிறது. சுந்தரம்மாள் வந்து விட்டாள்.)

சிவம்: சீச்சீ! ஒருத்தருக்காவது நெஞ்சில் ஈரம் இல்லை. எல்லாரு டைய நெஞ்சும் வறண்டு போச்சு. சுசீலா! போய் அந்தப் பொண்ணை அழைச்சிண்டு வா! உனக்குக்கூட இரக்கம் இல்லையா?

சுசீ: எனக்குத் தெரியாது. இறக்கம் வேறெயா?

சிவம்: ஷேம் ஃபுல்! நான் போய் அழைச்சுண்டு வறேன்.

சுந்த: இங்கே அழைச்சுண்டு வரக்கூடாது!

சிவம்: மாட்டேன். மாட்டேன். சுசீலா! என் சாமானைக் கொண்டா!

சுசீ: நானும் உன்னோடேவறேன். ஆனால் நீ அந்தப் பொண்ணை அழைச்சிண்டு வரவேண்டாம்.

வெங்க: உங்களுக்கென்ன, ஐயா?

சிவம்: எனக்கென்னவா? ஒங்க பிள்ளைக்கு வேண்டிய தில்லேன்னு...

வெங்க: வீட்டுக்குப் போனதும் அவா சமாதானமாப் போயிடுவா. பெத்த பொண்ணை விட்டுடுவானு, என்ன? நடுவிலே நீங்க போய்க் காரியத்தைக் குட்டிச் சொவராக்கி விடாதேங்கோ.

சிவம்: அந்த ராஸ்கலோட வீட்டுக்குப் போக விடுவேனு? அவன்— கொன்னு போட்டுடுவான். ஒங்க மானம் அவமானங்களை யோசிச்சுண்டிருக்க இதுவா சமயம்? அவளை எப்படிச் சந்தோஷமா, ஆரோக்கியமா வைக்கணும்? பிறக்கப் போற கொழந்தை நோய் நொடி இல்லாமெ பிறக்க வழி யென்ன? இதெல்லாம் யோசிக்க ணும். அந்த வீட்டிலே இவள் வாழ்க்கை நரகமாக அல்லவா இருக்கும்? பிள்ளைத் தாய்ச்சியை எவ்வளவு சந்தோஷமா, ஜாக்கிரதையாக் காப்பாத்தணும்! பிறக்கப் போற கொழந்தை நஷ்டமாயிட்டா நீங்க யாராவது பொறுப்பாளி ஆவேளா. இதெல்

லாம் உங்களுக்குக் கவலே இல்லே. இதே குழந்தை கல்யாணம் ஆனபின் பிறந்தால் சந்தோஷம் கொண்டாடிச் சந்தோஷப் பட வைக்கறதில்லேயா ?'இப்பவும் அதே மாதிரி தானே பிள்ளேபெறப் போரு ? ஏளனமும் அடியுந்தான் கெடச்ச லாபம் ?

சுந்த : ஒருவேளே இவனே தான்......? முன்னுடியே அவளே இவனுக்குத் தெரிஞ்சிருக்குமோ !

சுசீ : சே, சே ! சிவத்துக்கு இந்த ஊரே புதிசு.

சுந்த : ஒருவேளே அவளே இழுத்துண்டு வந்து இங்கேயே விடருனே, என்னமோ ?

மகா : அடேயப்பா, பந்துலூ ! உனக்குச் சம்பந்தம் இல்லாதது போலெ இருக்கயேடா ? அந்தப் பொண்ணுடை கதி என்ன ?

(பந்துலு பதிலே சொல்லுவதில்லே.)

வெங்க : அவன் ஏன் பேசருன். அவனுக்கு வேண்டியது இது வரைக்குந்தான், அசல் கோவில் காளே !

சுந்த : ஆண் பிள்ளே ; அவனுக் கென்னவாம் ?

மகா : போனது போகட்டும். பந்துலுவுக்கு ஏதாவது வேலே பண்ணி வச்சு, அந்தப் பெண்ணேயும் அவனேயும் குடித்தனம் வச்சுப்பிடு.

ஹனு : (கேலியாய்) ரொம்......ப நன்னுருக்கு !

பந் : (ஹனுமந்த ராவைப் பார்த்து) உனக்கென்ன சம்பந்தம். நீ தலேயிடாதே. இனிமேல் என் பேச்சுக்கு வந்தையானு ஒதை ! ஜாக்கிரதை ?

சுந்த : அவளேயா ! அவளேயா ! கன்னியிலே கருத்தரிச் சவளேயா ! என் பிள்ளேக்கா ?

பந் : அவளோடேயா ? அந்த ஜாதி கெட்டவளோடெயா ?

மகா : ஐயோ ! அந்த ஜாதி கெட்டவள் இது வரைக்கும் எப்படி......

வெங் : எனக்குக் கௌரவமும் பேரும் இருக்கணுமா, வேண்டாமா ? எனக்கு மறுபடியும் எவனுவது ஓட்டுக் கொடுக்க வேண்டாமா ?

மகா : சித்தெ முன்னே தானே, இந்தச் சேர்மன் வேலே வேண்டாம்னு சொன்னே !

வெங்க: அதுக்குச் சட்டமே இடங்கொடுக்காது.

மகா: இது வரைக்கும் நடந்தத்துக்குச் சட்டம் இடந்தருமா ?

வெங்க: அதுக்கும் இடந்தராது! 'லா'வுக்கும் இதுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லே.

மகா: எனக்கு ஒண்ணுமேதெரியதா? அப்பாவியான அந்தப் பொண்ணே இவன் அநியாயம் செய்யறது; அப்பன் அவளேக் கொலே பண்றது; இந்தப் பெரிய மனுஷன் தனக்குச் சம்பந்தம் இல்லாதது போல் விட்டுடறது; பொறக்கப் போற கொழந்தை பொறக்கறச்சேயே அநாதையாப் பொறக்கறது, இதுக்கெல்லாம் சட்டம் இடங் குடுக்கறதா? ரெண்டு பேருக்கும் மரியாதையாக் கல்யாணம் பண்றேன்னு, சம்மதிக்காதா? கல்யாணத்துக்கு இதைவிட வேறெ என்ன வேணும்? 'லா' அந்தப் பொண்ணே இவன் கல்யாணம் பண்ணிக்கும்படி செய்ய முடியல்லே—இத்தனே அநியாயம் நடந்தப்பறம்!

வெங்க: ஒனக்கு வர வரப் புத்தி எங்கெயோ போயிடுத்தம்மா!

(சிவம் காந்தத்தைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிறுன். அவள் பின் தங்கி வருகிறுள்.)

சிவம்: பின்னே? ஒங்க வீட்டுக்குப் போகாமல் என்ன செய்யறதாக உத்தேசம்?

காந்: எவ்வளவோ கெணறுகளும் குட்டைகளும் இல்லேயா?

சிவம்: நன்ஞத்தான் இருக்கு. விழுந்து செத்தப்புறம் பிணத்தை அறுக்கறது, விசாரணே, சாட்சி இதுக்கெல்லாம் யார் தயாரா இருக்கா? சாகறவா இந்தத் தொல்லேகளே யெல்லாம் பத்தி யோசிக்கறதே இல்லே.

காந்: என்னேச் சாகக் கூட விடாதபோனு என்ன செய்யட்டும்?

சுந்த: சுசீலா! அவருடைய சாமான்களே யெல்லாம் வண்ணுனேக் கொண்டுவரச் சொல்லு!

சுசீ: அவரை அனுப்பவேண்டாம். அவர் போனுல் நானும் போயிடுவேன்!

சுந்த: அவர் போனு நீ போறதாவது?

சுசீ : ஆமாம்! அவரை வீட்டுக்கு அழைச்சுண்டு வந்து பாதி ராத்திரி யிலே வீட்டை விட்டுத் துரத்தறேளா? மறுபடியும் நான் காலேஜில் முகத்தைக் காண்பிக்க வேண்டாமா?

சுந்த : அதுக்காக அந்தப் பொண்ணை வீட்டிலெ வச்சுக்கச் சொல் றையா?

சுசீ : சிவம்: அந்த 'ரெச்' சோடெ ஒனக்கென்ன? போகச் சொல்லு!

சிவம் : இவ்வளவு படிச்சிருக்கே! மெடிகல் லயன்லே புகுந் திருக்கே!...

பந் : அந்த நாயுடுப் பொண் இருக்கிற வீட்டிலெ நான் இருக்க மாட்டேன்!

சிவம் : ஸ்கௌண்ட்ரல்!

ஹனு : அந்தப் பொண்ணு கிட்டே அவசியம் தீர்ந்து போச்சலவா?

பந் : என் பேரெடுத்தா ஒதைச்சுடுவேன்னு சொல்லலே! நீ வேறே ஏன் என் பிராணனை வாங்கறே!

சுந்த : அக்கிரமமா அவனை ஏன் திட்டறே? அப்பவே பிடிச்சு ஒன்னை வாயில் வந்தபடியெல்லாம் திட்டினவா எல்லாரையும் விட்டுட்டு? ஒன் ஆண்மை எங்கே போச்சு?

(பந்துலு கோபத்துடன் சிவத்தைப் பார்க்கிறன்.)

சுசீ : அண்ணு! உன் திமிரும் கர்வமும் உன்னோடெ இருக்கட்டும். அவர் மேலே காட்டாதே! மாமாவைப் போலே சோத்துக்குக் கதி இல்லாதெ வந்திருக்கார்னு நெனைச்சுக் காதே! உங்கிட்டப் பேச்சுக் கேட்க!

பந் : என்ன செய்துடுவான். இன்னொருதரம் என்னை ஏதாவது சொல்லச் சொல்லு!

சுசீ : (வெங்கடேசுவர்லுவிடம்) அப்பா! இங்கே என் கெஸ்டுக்குக் கொடுமை நடப்பதா இருந்தா......ரெண்டு பேரும் இப்பவே புறப்பட்டுப் போரேம்.........

வெங்க : (பந்துலுவிடம்) போதும், வாயை மூடு. தலையிலே துணி யைப் போட்டுண்டு ஓடாமெ, இன்னும் வெட்கம் இல்லாமல் பேசவந்துட்டான்! போ தூர! போ, போ!

(நாராயணராவ் நாயுடு வருகிறுர்.)

நாரா : என்ன ஸார். வீணு மனஸ்தாபப் பட்டுக் கறத்துலே பிரயோசனம் என்ன ? நீங்களும் நானும் ஒதுக்கினுல் அந்தக் கொழந்தையின் கதி என்ன ?

வெங்க : அதுக்காகத்தான் நான் சொன்னேனே, பாவம், அந்தக் கொழந்தையை அழைச்சிண்டு போங்கோ.

நாரா : ஆறு மாசத்துலே அந்தப் பெரிய கண்டம், எப்படியாவது வெளிக்கு வராதபடி நடந்து பூட்டா......

வெங்க : எங்கேயாவது அனுப்பிவையுங்கோ. அந்த மட்டும் உதவி செய்யற சொந்தக்காரா ஒத்தரும் இல்லையா ?

நாரா : நாசமாப் போன ஜாதி ! எங்க ஜாதியைப் போலெ சண்டாள ஜாதி எங்கேயும் கிடையாதுங்க ! யாராவது மரியாதை கெட்டுச் சந்தியிலே நின்னுச் சிரிப்பாங்களே தவிர......

வெங்க : ஏதோ ஒரு வழி பார்க்கலாம்...இப்போதைக்கி...

நாரா : அம்மா ! அம்மா ! நீங்க பார்த்து ஏதாவது......

வெங்க : பிராம்மணு நாங்க. உங்க பெண்ணை நாங்க என்ன செய்யறது ?

சுசீ : (சிவத்தினிடம்) நீ ஏதாவது ' ஹெல்ப் ' செய்ய முடியாதா ?

சிவம் : நான் என்ன செய்ய முடியும்.

சுசீ : அப்பா ! சிவம் மெடிகல் மேன். மனசு வச்சா உதவி செய்யலாம்.

வெங்க : எனக் கொண்ணும் தெரியாது.

சுந்த : அந்த மட்டும் உதவி செய்யக் கூடாதா ?

நாரா : ஐயா ! ஸ்வாமி ! என்பேரையும் என்மானத்தையும் என் பொண்ணோட மானத்தையும் ஒங்ககையிலெ ஒப்படைச்சுட்டேன் தெய்வம் மாதிரி வந்திருக்கீங்க. இங்கே இந்தச் சின்ன உதவி செய்தீங்கன்னு...உசிருள்ள மட்டும்...

சிவம் : எனக்குப் புரியவில்லை. நான் என்ன செய்யட்டும் ?

நாரா : தெரியாமெ என்னங்க ? ஏதோ மருந்து கொடுத்து இந்தக் கண்டம் தப்பவைச்சா......

சிவம் : நீங்க பயந்தாங் கொள்ளியா இருந்தா எனக்கென்ன ? 'இம் மாரல்.' பாவம். அந்தப் பெண்ணோட 'மெட்டர்னல் ஃபீலிங்கை' நசுக்கறேளா ? என்னைக் கேக்காதேங்கோ !

நாரா : அப்படிச் சொல்லாதீங்க ! ஒண்ணுக்கும் ஒதவாமே அவ பொழைப்புப் பாழாய்ப்பூடும்.

சிவம் : ஒண்ணும் ஆகாது. ஒங்க பொழைப்புப் பாழாயிடுமேன்னு ஒங்களுக்குப் பயம். அந்தப் பொண்ணுமேலே இரக்கமா இதெல்லாம் ! பொறக்க இருக்கற கொழந்தை கிட்ட அன்பா இதெல்லாம் ? அதுனாலே தான் பிள்ளைத் தாய்ச்சிப் பொண்ணை அப்பிடிக் கொலை பண்ணினேங்க. எனக்குக் கண் இல்லையா ?

நாரா : அவ கதி என்ன ஆறதுங்க ? அவளை எவன் கல்யாணம் கட்டுவான் ?

சிவம் : ஒண்ணும் ஆகாது ! கல்யாணம் ஆகாட்டாப் போறது ! ஆறு மாசத்துலே கிருஷ்ண விக்கிரகம் மாதிரி, கொழந்தையைச் சிரிச்சுண்டு எடுத்துக்கிரு. அது வரைக்கும் நீங்க அடிக்காமல் இருந்தாப் போதும்.

நாரா : பின்னே, அந்தக் கொழந்தையின் கதி !

சிவம் : எங்கிட்டக் குடுங்கோ. ஒங்களுக்கு அவமானமா இருந்தா...... நான் வளர்க்கறேன்.

நாரா : நல்லாத்தான் இருக்குது. கொஞ்சம் கூட உங்களுக்கு இரக்கம் இல்லையே ! எங்களுக் கெல்லாம் இரக்கமே இல்லேன்னு திட்டினீங்களே !

சிவம் : இனிமே, இந்த விஷயத்தைப் பத்திப் பேசினா...போலீஸ்லே ரிப்போர்ட் செய்வேன்.

வெங்க : உங்களுக்குக் கஷ்டமா இருந்தா விட்டுடுங்கோ. நான் ஒண்ணும் உங்களைக் கேக்கல்லே. ஸ்வாமி ! எனக் கொண்ணும் சம்பந்தம் இல்லை.

நாரா : (காந்தம்மாவிடம்) போகட்டும். வாடீ ! யாரோட உதவியும் வேண்டாம்.

சிவம் : எப்படியாவது அந்த வேலையைச் செய்துடலாம்னு தீர்மானம் பண்ணிட்டேக. எப்பொவானாலும் எனக்குத் தெரிஞ்சுதுன்னா...

நாரா : போய்யா! ரொம்பத்தான் கத்தாதே! (காந்தம் மாளிடம்) ஏன்? வர்றியா, இல்லையா?

காந்தம் : என்னை என்ன செய்தாலும் நான் வர மாட்டேன்.

சிவம் : (கையைக் குலுக்கி) க்ளோரி க்ளோரி!

சுசீ : சிவம்! உன்னைப் பாத்தா......எனக்கு எரிச்சலா...வரது.

மகா : அம்மா! உங்கப்பாவைத் தவிர உன்னை அக்கறையாப் பார்க்கறவங்க யாரம்மா? போ! என் பேச்சைக் கேட்டுப் போ!

காந்தம் : என்னைக் கொன்னுடுவாரு. நான் போக மாட்டேன்.

மகா : அவளை ஒண்ணும் பண்ணுதீங்க.

நாரா : இவளையா விடுவேன்! இவளையா!

(தடியைத் தூக்குகிருர்)

சிவம் : ஸ்டெடீ, ஸ்டெடீ!

நாரா : நீ எங்கய்யா வந்து சேர்ந்தே! (காந்தம் மாளிடம்) வாடீ!

காந்தம் : வரமாட்டேன்.

நாரர : ஒன் கர்மம்! செத்துத் தொலை. யாருக்கென்ன? பீடை விட்டுது.

(போகிருர்.

சுந்தரம்மாள் உள்ளேயிருந்து வேகமாய்க் காந்தம் மாளை நோக்கி வருகிருள்.)

சுந்த : ஏண்டீ! இன்னுமா போகலை நீ! சண்டிப் பொணம்! எங்க வீட்டுக்கு எங்கேடி வத்து சேர்ந்தே! போ! போ!

சிவம் : (வெங்கடேசுவர்லுவிடம்) டெவிலிஷ்!

சுந்த : (காந்தத்திடம்) முதல்லே வெளியே போ!

காந்த : எங்கே போவேன்? எங்கே?

(அழுகிருள்.

சுந்தரம்மாள் காந்தத்தின் கழுத்தைப் பிடித்துக் கல் தாக்கொடுக்கிருள்.

சிவம் கோபத்துடன் சுந்தரம்மாள் மேல் பாய்ந்து பிடித்துத் தள்ளுகிருன்.)

சிவம் : என் கெஸ்ட். அவளை நான் அழைச்சிண்டு வந்தேன். ஒண்ணும் செய்யாதீக.

ஹனு : யாரடா நீ ? பொம்மனுட்டி மேலே கை வைக்கறே !

சிவம் : அது யாரு ? மனுஷிதானு ? ராட்சஸி மாதிரி இப்படி மனுஷாளைப் பிடுங்கருளே !

சுசீ : ஆனுல்...சிவம் ! என்ன செய்யச் சொல்றே ! அந்தப் பொண்ணை அனுப்பிவிடு. அவ இங்கே இருக்க முடியாது.

சிவம்: சீச்சி! நீ ரொம்ப 'நோபில் கர்ல்' என்று நெனச்சேன். உனக்கே இந்த நிலைமை வந்திருந்தா எப்படி இருக்கும் ?

சுந்த : சீச்சீ ! இதென்ன பேச்சு ! வரவர மோசமாப் போறது.

சிவம் : ஏன் ? உங்க பெண் பொம்மனுட்டி அல்லவா ? நீங்க பொம்மனுட்டி அல்ல ? பொம்மனுட்டின்னு யாராலும்......

சுந்த : (வெங்கடேசுவர்லுவிடம்) இது என்னன்னு !

சிவம் : (சுசீலாவிடம்) உனக்கே இந்தக் கதி வந்தா. இவா யாரும் உம்மேலே கடுகளவு இரக்கங் மாட்ட மாட்டா. இந்த அப்பா அவரைப் போலவே அடிப்பார். இந்த அம்மா இப்படித்தான் தள்ளுவாள். இந்த அண்ணு இதே மாதிரி விட்டுவிட்டுப் போயிடுவான்.

சுசீ : என்னையும் அவளையும் ஈடு கட்டறையா ? என் சங்கதி ஒனக்குத் தெரியாது ? அவ்வளவு தான். நானும் அவமாதிரி 'ஃபூல்' என்பதா உன் எண்ணம் ?

சிவம்: நீ ரொம்ப 'வைஸ்' அல்லவா? ஒரு அபாயமும் இல்லாம தப்பிச்சுப்பே ! இந்தப் பொண்ணுக்குப் பாவம் தயா தாட்சிணியம் இருக்கு. அவர்கிட்டே ஏமாந்துட்டா.

வெங்க : சரி, போதும். (காந்தத்திடம்) அம்மா, போ !

சிவம் : நானும் போறேன். (காந்தத்திடம்) வா, போவோம்.

காந்தம் : நான் வர்மாட்டேன்.

சுசீ : சிவம், சிவம் ! உனக்கென்ன 'ஸென்ஸ்' இல்லையா ? என்னது?

பாதிராத்திரியிலே அவளை அழைச்சிண்டு போறே. அவளை ?...

சிவம்: ஏன் ?

சுசீ: எல்லாரும் என்ன நெனச்சுப்பா ?

சிவம்: இவா எல்லாரையும் போலெ, ஊரார் என்ன நினைப்பாளோன்னு நானும் பயப்படுவேன்னு நெனச்சியா? (சிரித்து) நாம்ப ரெண்டு பேரும் தனியா வந்தப்போ என்ன நினைச்சிருப்பா ?

சுசீ: என்ன நினைச்சிருப்பா? எனக்கென்ன? நான் 'இன்னஸன்ட்டா' இருக்கச்சே!

சிவம்: நானும் இந்தப் பொண்ணும் இன்னஸன்ட் இல்லையா? உன்னத்தனை புத்தி இருந்தா... ஏன் இப்படி ஆறது? உன் அண்ணாவின் சொரூபத்தை உடனே தெரிஞ்சுண்டிருப்பாள். (காந்தத்திடம்) வா அம்மா! இங்கே இவா நடுவிலே எப்பிடி நீ இருப்பே ?

காந்தம்: நீங்கள் முன்பின் தெரியாத புது ஆளு. உங்களை எனக்குத் தெரியாது. எங்கே இட்டுண்டு போவிங்க ?

சிவம்: அது எனக்கும் தெரியாது, இன்னும் யாராவது இருந்தா நல்லது. சுசீலா! அவளுக்குப் பயமா இருக்கு. இன்னிக்கி ராத்திரி மட்டும் நீயும் எங்களோடெ வா. நாளைக் காலையிலெ வந்துடலாம்.

சுசீ: சீ! அவ உன்னோடெ இருக்கறப்பொ நான் உன்னோடே பேசக் கூடமாட்டேன்.

சிவம்: சரி. நான் என்ன செய்வேன்? (காந்தத்திடம்) என்னை நம்பு. வா! இங்கே இருப்பதை விட......

காந்தம்: மாட்டேன்.

சிவம்: நான் போறேன். இந்த 'ஹார்ட்லெஸ் பிபீள்' வீட்டிலெ ஒரு நிமிஷங்கூடத் தங்க மாட்டேன். சுசீலா! சாமான்களை, பங்களாவுக்குக் காலையிலே அனுப்பி வை.

சுசீ: நானும் வறேன்.

சிவம்: வேண்டாம். நான் எப்படியும் நாளைக்குப் போயிடுவேன். என் மனசு கொஞ்சங்கூடச் சமாதானமா இல்லை. இந்த

நடுராத்திரியிலே வந்தா... எல்லாரும் என்ன நினைப்பா? நீ கூட 'பூலிஷா' செய்வையா? என் மேலே அன்பு இருந்தா, உன் அன்புள்ள தாயார், பாவம், அந்தப் பெண்ணை இம்சிக்காமெ பார்த்துக்கோ. என் மேலே இருக்கிற அன்பை அவ மேலே காட்டு.

சுசீ : மறுபடியும் எப்போ ?

சிவம் : தெரியாது! நீ ரொம்ப 'டிஸப்பாயின்ட்' செய்துட்டே. உங்கப் பாவைப்போல், அண்ணுவைப்போல், நீயும் ரொம்ப 'ஸெல்ஃபிஷ்' காந்தம்மாளைப்போலெ ஏமாருததால் உன்னை நீ மிகப்பெரிய மனுஷியாக நினைச்சுண்டிருக்கே. இந்த இதயம் இல்லாத— கௌரவம் மரியாதைகளை விரும்பற சுய நலத்தைவிடக் காந்தம் மாளைப்போல் ஆயிரம் தடவை ஏமாந்து போவது மேல். குட் பை! (காந்தத்திடம்) எப்படியும் உன்னைத் துரத்தி விடுவா. இவா, உலகமெல்லாம் பத்தி எரிஞ்சாலும் பிறருக்காகத் துளி கூட 'ஸாக்ரிஃபைஸ்' செய்யமாட்டா. அப்படி இருக்காட்டா உலகத்துலே பெரிய மனுஷாளா இருக்கிறதெப்படி? நான் போனவுடனே உன்னைத் துரத்தி விடுவா. (சுந்தரம்மாளைப் பார்த்து) இவள் மேலே விழுந்து டெவில் மாதிரி! (வெங்கடேசு வர்லுவிடம்) வறேன் சார்? தாங்க்யூ!

(போகிருன்.)

வெங்க : அம்மாடி; விட்டொழிஞ்சான்.

சுந்த : (காந்தத்திடம்) இனிமே நீயும் நட.

காந் : பந்துலுகாரு! உங்க காலைப்பிடிச்சுக்கறேன். ஒங்க வூட்டுலே வேலைக்காரியா இருக்கேன். என்னைத் தொரத்தாதீங்க. என் கிட்டச் சொன்ன பேச்சை நெனச்சுப் பாருங்க! கேக்க மாட்டீங் களா?...

சுந்த : (பந்துலுவிடம்) அவ மேலே தயவு காட்டினே, நீயும் வீட்டிலேருந்து போயிடணும். முன்னுடி இவளை வெளியிலெ தள்ளணும். பேர் கெட்டுப் போகும்.

மகா : நான் அனுப்பிச்சுடறேன். பொண்ணு! நீ என்னம்மா செய்வே? அவன் ஒன்னை வேண்டாம் எங்கிருன். அவனைக் கெஞ்சி என்ன பிரயோஜனம். இங்கிருந்து போ.

காந்தம்: எங்கே போகட்டும்?

மகா: உன் வீட்டுக்குப் போக மாட்டையாக்கும்?

காந்தம்: மாட்டேன்.

மகா: சிவம் கூடப் போகக்கூடாது? இவன் மேலே ஆசை இப்ப வாவது ஒழிஞ்சுதா?

காந்தம்; அவர் யாரோ; என்னுத்துக்குக் கூப்பிட்டாரோ?

மகா: அசட்டுப் பெண்ணே! இவனை நம்பிட்டே. அவனை நம்ப மாட்டேங்கறையே! இந்த உலகத்துலே எப்படிப் பொழைக்கப் போறே?

காந்தம்: நான் இனியாரையும் நம்ப மாட்டேன். யார் கிட்டேயும் தனியாப் போக மாட்டேன். எல்லாம் மேலுக்கு நல்லவங்களா இருப்பாங்க. அவ்வளவுதான்.

மகா: என்ன கதி வந்துடுத்தம்மா!—உன்னைப் போலெ பச்சைக் கொழைந்தெக்கி! என்ன தப்புச் செய்தேன்னு ஒனக்கு இந்தக் கஷ்டம்! நான் என்னம்மா செய்ய முடியும்?

(காந்தம் அழுகிருள்)

மகா: அழாதே. பயமில்லை. அநாதைக்கு அநாதைதான் துணை. அம்மா! நான் உம்மனுஷி. நீ என் பொண்ணு. பதினைஞ்சு வருஷத்துக்கு முன்னே செத்துப் போயிட்டா என் பொண்ணு. உன் ஈடுதான். ஸ்வாமி உன்னை அனுப்பி இருக்கார். என் கிட்டயே இரு. உனக்குப் பயம் இல்லை.

(காந்தம் மகாலட்சுமி அம்மாளைக் கட்டிக் கொண்டு அழுகருள். அந்த அம்மாளுக்குக் கண்ணீர் பெருகுகிறது.)

வெங்க: அம்மா, அம்மா? உனக்குப் பைத்தியமா?

மகா: ஆமாம் அப்பா! கிழவி. இன்னும் எத்தனை நாளைக்கு நான் புத்தியொடெ இருக்கப் போறேன்!

வெங்க: இந்த நாயுடுப் பொண்ணை நம்ப வீட்டிலெ சேர்க்கப் போறியா?

மகா : ஏன் ?

சுந்த : இந்த வீட்டிலெ இருக்கமுடியாது.

வெங்க : முடியாது.

மகா : எனக்குத் தெரியும் அப்பா! நீங்கள் புண்ணியாத்மாக்கள். இந்த அநாதைப் பொண்ணை இருக்க விடமாட்டேள். என் பணத்தை இப்பிடி எறி. வேறெ வீடு வாடகைக்கு எடுத்துண்டு இந்தப் பொண்ணோடெ குடியிருக்கேன்.

வெங்க : என் பேர் சிரிச்சுத்தான் போகும்!

மகா : வேண்டாம். வேறெங்கேயாவது போறேன்!

வெங்க : எங்கே போவே ? நான் ஒரு சல்லிகூடக் குடுக்க மாட்டேன். எப்படிப் பொழைக்கப்போறே ?

மகா : ஏதோ ஒருவழி. அவர், பாவம்! சிவம் இருக்காரே! அங்கே போரேம்.

வெங்க : சே, சே! அவன்கூடவா ? அந்த நாஸ்திகனோடயா ? அவனுக்கு ஜாதியே இல்லே. நீ...

சுந்த : போகட்டுமே! உங்களுக்கென்ன ?

மகா : இந்த நாயுடுப் பெண்ணைக் கட்டிக் கொண்டு அழுகிற எனக்கு ஜாதி ஏதப்பா? வயிற்றில் குழந்தையோடெ வந்த கன்னியைச் சேர்த்துண்ட எனக்கு மரியாதை ஏது ? போறேன்.

வெங்க : அம்மா! நீ போக முடியாது. என் மரியாதை என்ன ஆகும் ? என் தாயார் அந்தச் சிவத்தினிடம் இந்தப் பெண்ணோடெ போய்ச் சேர்ந்தா, அப்புறம் என்ன இருக்கு ?

மகா : விடியற்கால ரயிலிலேயே போயிடரேம்... எல்லா ரோடெயும் நான் காசிக்குப் போயிருக்கேன்னு சொல்லிக்கோ.

வெங்க : ஐயோ ! என்னைவிட, இந்தக் குடித்தனத்தைவிட, அந்த அநாதைப் பெண் ஒசத்தியாப் போயிட்டாளா ?

மகா : மறுபடியும் வருவேன். நீங்க இடங்குடுத்தால்... நான் இல்லாத போனத்தான் என்ன ? உங்களுக்கெல்லாம் குறை யாய்த் தெரியாது.

(காந்தம்மாளும் மகாலட்சுமி அம்மாளும் போகிறார்கள்.)

சுந்த: அம்மாடி! ஒரு வழியா விட்டுது பிசாசு. தன்னோடெ இந்தக் கிழவியையும் தூக்கிண்டு போயிடுத்து.

வெங்க: பந்துலூ! என்னவாச்சந்தியிலே இழுத்து விட்டுட்டேடா! இனிமேலாவது புத்தியோடெ பொழெப்பெயா?

பந்: இப்படி ஓடி வருவாள்னு கண்டேனா?

சுசீ: இனிமேல் பரவாயில்லே. அண்ணா என்ன சங்கடத்திலெ மாட்டி வச்சாலும் சிவத்துக்கிட்டெ அனுப்பிச்சுடலாம். பாட்டி கூட அங்கே இருக்கா.

சுந்த: சரிதான்! இவளுக்கு அந்தப் புருஷனோடெ சிநேகம் ஒழிஞ்சுது! எவ்வளவு கெட்ட பேர்!

பந்: சுசீலாவைப் படிக்க வச்சதாலெ வந்த வம்பு இது.

சுந்த: இந்தப் படிப்புப் போதும். இனிமே வீட்டிலேயே கெட.

சுசீ: நானா விடுவேன் படிப்பை?

சுந்த: பணம் யார் குடுப்பா?

சுசீ: சிவம்.

சுந்த: உனக்கும் அவனுக்கும் சிநேகம் ஆயிடுத்தல்லவா?

சுசீ: என்ன சிநேகம். அவன் கிட்ட வருஷம் பூராவும் 'அநாட்டமி' பாடம் சொல்லிண்டிருக்கேன். எனக்குப் பாடம் சொன்னத்துலே தன் பரீட்சையைக்கூடக் கோட்டை விட்டுடுவான் போலெ இருக்கு. ஆனாலும் காந்தத்தைப்போல் நான் அசடா, பைத்தியமா? எவ்வவவு தூரத்திலெ வைக்கணுமோ அவ்வளவு தூரத்துலெ வச்சிருக்கேன்.

சுந்த: பின்னே, அவன்மேலே விழுந்தே?

சுசீ: நான் விழுவேன். அவனெ அழவைக்க. அவன் என்னைத் தொட்டா ஒதை! என் மரியாதையையும் மானத்தையும் கெடுத்துப்பேனா?

சுந்த: அவன் வந்தபோது ஒயாத அரட்டை அடிச்சையே, அதென்ன?

சுசீ : உங்களுக்கெல்லாம் என் மேலே ரொம்ப அதிகாரம் இல்லேன்னும் ; அடங்கிக் கிடக்கும் பழைய சுசீலா நான் இல்லேன்னும் உங்களுக்குத் தெரிவிக்கத்தான் அதெல்லாம். அவ்வளவே தவிர, என் பேரைக் கெடுத்துப்பேனா ? நான் அவன் கிட்டே மோசம் போவேனா ?

பந் : கம்மனாட்டி! அவனோடெ எப்படித்தான் சிநேகம் புடிச்சியோ! அந்த எச்சிக்கலெ முண்டையைத் தட்டிண்டு போகத் தான் அவன் அவ்வளவு தந்திரம் செஞ்சான். ஆனால்... காந்தம் அப்பொக்கூட என்னை விடவில்லே. பொம்மனாட்டிக முன்னே அவன் எதுக்கு உபயோகம் ? நானா ஒதைச்சுத் தள்ளற மட்டும் காந்தம் அசைஞ்சாளா ? அவன் கெஞ்சினானே ? பலன் இருந்துதா ? இப்பக்கூட, நான் கூப்பிட்டேன்னா...

வெங்க : போதும். பிரதாபம். நல்ல வேளை ! ரொம்பத் தகராறு இல்லாமெ, முடிஞ்சுபோச்சு. நாயுடுகிட்ட, காந்தத்தையும் அம்மாவையும் ஏதோ ஊருக்கு அனுப்பி வச்சிருக்கிறதாகச் சொல்லலாம். அந்த நன்றியோடெ, நாய் மாதிரி சொன்னபடியெல்லாம் கேட்பான். அந்த வார்டு ஓட்டுக்கள் எல்லாம் எனக்கேதான்.

பந் : சுசீலா சிவத்தை அழைச்சிண்டு வந்தது நல்லதாப்போச்சு !

சுசீ : என்ன சொன்னாலும், சிவம் தங்கமான மனுஷன் ; அப்பா ! அவன் கிட்டப் பல விஷயங்கள் கத்துக்க வேண்டி இருக்கு.

(திரை விழுகிறது.)

# 4. அனார்க்கலி

★

ஆசிரியர் :

ஸ்ரீ முத்து கிருஷ்ண

(1899-ல் பிறந்தவர். 'ஜ்வாலா' என்னும் தெலுங்குப் பத்திரிகையை நடத்தியவர்.

"வைதாளிகுலு; நவ்ய கவிதா ஸங்கலனம்;" என்பவை இவருடைய இலக்கிய ரத்தினங்கள்.

"டீக் கப்பில் புயல்; பீமா விலாசத்தில் பாமா கலாபம்;" முதலியவை சிறந்த நாடகங்கள்.

அனார்க்கலி 1934-ல் 'ஸ்வாலா' பத்திரிகையில் பிரசுரமானது. 1938-ல் அகில இந்திய வானொலியின் சென்னை நிலையத்தால் ஒலிபரப்பப் பெற்றது.)

# பாத்திரங்கள்

★

ஸலீம்

அக்பர்

அபுல்பஜல் (மந்திரி)

வேலைக்காரன்

அனார்க்கலி

குல் நாரா

## காட்சி—1

(காலை வேளை. ஸலீம் இளவரசனுடைய அறை, சோபாவின் மேல் சுவர்ப்புறம் திரும்பிப் படுத்திருக்கும் ஸலீம் பெருமூச்சு விட்டு மெதுவாக இந்தப் புறம் திரும்புகிறான். கண்ணீர் வழியக் கனவுலகத்தில் சஞ்சரிக்கும் அவன் கண்கள் சிறிய மேஜைப் பக்கம் பார்க்கின்றன. உடனே துள்ளிக் குதித்து எழுந்திருக்கிறான். மேஜைக்கருகே போய்ப் பரபரப்புடன் ....)

ஸலீம் : யார் அங்கே ?

(வேலைக்காரன் உள்ளே வந்து, பயந்துடன்)

வேலைக்காரன் : குதாவந்த் !

ஸலீம் : இந்த அறைக்குள் யாரடா வந்தார்கள் ?

வேலைக் : தெரியாது மகாப்பிரபுவே !

(வேலைக்காரன் மேல் பாய்ந்து)

ஸலீம் : ஏன் தெரியாது ?

வேலைக் : ஆமாங்க !

ஸலீம் : என்னடா ஆமாங்க ?

(வேலைக்காரன் கைகளைப் பிசைந்து கொண்டு பின்னால் நகரப் போய்க் காலையே மிதித்துக் கொள்கிறான்.)

என்ன, பதிலே இல்லை ?

வேலைக் : நான் இப்பத்தான் வந்தேன் பிரபுவே !

ஸலீம் : போய், குல் நாராவைக் கூப்பிடு !

(இந்தச் சமயத்தில் குல் நாராவே தயக்கத்துடன் வருகிருள்.)

குலன்! இங்கே இருந்த மாதுளம் மொட்டுக்களை யார் எடுத்தது?

குல் நாரா : தெரியாது பிரபுவே !

(ஸலீம் கண் சிவக்க)

ஸலீம் : நிஜத்தைச் சொல்லு !

(குல் நாரா பயத்துடன்)

குல் நாரா : அப்படியே ?

(ஸலீம் திகிலுடன்)

ஸலீம் : என்ன அப்படியே ?

(குல் நாரா தயக்கத்துடன் வேலைக்காரனையும் ஸலீமையும் பார்க்கிருள்)

( ஸலீம், வேலைக் காரனிடம்)

ஸலீம் : நீ போய் முன் புறத்துக் கதவுக்கருகே காவல் இரு?

(வேலைக்காரன் போகிருன்)

குலன் ! உள்ளே வா, உனக் கொன்றும் பயம் இல்லை...இப்பொழுது சொல்லு......

குல் நாரா : குதா வந்த், ரொம்பப் பயமாய் இருக்கிறது.

ஸலீம் : பரவாயில்லை.

(குல் நாரா தயங்கித் தயங்கி அடிக்கடி கதவுப் பக்கம் பார்த்துக்கொண்டே)

குல் நாரா : பிரபுவே ! சக்கர வர்த்தி......வேலைக்காரர்களுக்கு விசித்திரமான ஒரு கட்டளை பிறப்பித்திருக்கிருர்...தோட்டத்தில் இருக்கும் மாதுளை மொக்குகள் எல்லாவற்றையும் பறிக்கச் சொல்லி நெருப்பில் போடச் சொல்லி விட்டார். இன்று முதல் விடும் மொக்குகள் எல்லாவற்றையும் பிய்த்து எறியச் சொல்லி

விட்டார்...அநேகமாய் அரண்மனையிலே இருக்கிற எல்லா மாதுளை மரங்களையும் வெட்டி விடுவார்கள் என்கிற வதந்தி உலாவுகிறது.

(ஸலீம் மோவாய்க் கட்டையின் கீழ், கையை வைத்து, யோசனையுடன்)

ஸலீம் : ஆனால்...குலன்! இது வெறும் மாதுளை மொட்டுக்களின் மேல் படை யெடுப்பு அன்று. புயலுக்குத் தயாராக இருக்கும்படி, தூவானத்தால் என்னைப் பயமுறுத்தத் தொடங்கியிருப்பதாகப் பொருள்.

குல் நாரா : பிரபுவே! அரண்மனையில் வதந்திகள்...

ஸலீம் : என்ன வென்று ?

குல் நாரா : தாங்கள்...அனார்க்கலியிடம்...

ஸலீம் : சரிதான்...நீ போ...

குல் நாரா : பிரபுவே! ஆபத்து...

ஸலீம் : ஒரு பயமும் இல்லை. நீ போ.

(குல் நாரா தயங்கி விட்டுப் போகிறாள். ஸலீம் சலிப்புடன் உலாவுகிறான்.

வேலைக்காரன் வந்து)

வேலைக் : மகாப் பிரபுவே! வஜீர்ஜீ!

ஸலீம் : நல்லது. வரச் சொல்லு!

('ஓகோ' என்ற மாதிரியில் தலையை ஆட்டி விட்டு ஸலீம் ஸோபாவில் உட்காருகிறான்.

(அபுல் பஜல் பிரவேசித்து வேலைக்காரனைப் போகச் சொல்லி விட்டுச் சலாம் செய்து)

அபுல் பஜல் : யுவராஜா! சௌக்கியமா ?

ஸலீம் : தன் மேஜையின் மேல் வைத்திருந்த மாதுளம் மொக்குகளைக் கூடக் காப்பாற்றிக் கொள்ள முடியாத யுவ ராஜா சௌக்கிய மாக இருப்பதாக அர்த்தமா! வஜீர்ஜீ!

அபுல் பஜல் : கூரிய புத்தியுள்ள தங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லே.

(ஸலீம் கடுமையாக)

ஸலீம் : இப்பொழுது கூரியபுத்தி அல்ல; வேண்டியது. லாபமும் அதிகார முந்தான் வேண்டும்!

அபுல் பஜல் : ராஜ குமார்! விண்ணப்பம் செய்கிறேன்!

ஸலீம் : நல்லது.

அபுல் பஜல் : சக்கரவர்த்திக்கு மாதுளம் மொக்குகளின் மேல் கோபம் வந்திருக்கிறது.

ஸலீம் : குற்றமற்ற—பலமற்ற—ஏழை மாதுளம் மொக்குகளின் மேல் தாஞ சக்கரவர்த்திக்குக் கோபம் வர வேண்டும்? இது நியாயம் இல்லே வஜீர்ஜீ! அந்த மொக்குகளே நாசமாக்க முனேந்திருப் பது, சக்கரவர்த்திக்கு மரியாதை அன்று. அந்தக் கோபத்துக்குக் காரணமானதை வெற்றி கொள்வதுதான் சரியான வழி.

அபுல் : விண்ணப்பம் செய்கிறேன்.

ஸலீம் : நல்லது.

அபுல் : ரோஜா, இந்த நாட்டுப் பூ அல்ல. அவற்றை மொகல் சக்கர வர்த்திகள் தம் உத்தியான வனத்தில் விசேஷமாகப் பயிராக்கு வதற்காகப் பாரசீகத்திலிருந்து கொண்டு வந்தார்கள்.

ஸலீம் : ஆம்.

அபுல் ; அவைகளுள், 'பஹ்லவீ'க் கன்றை அக்பர் சக்கரவர்த்தி தாமே கொண்டு வந்தார். ரோஜா வகைகளுள் பஹ்லவீயை விடச் சிறந்த வகையே இல்லே. அது சக்கரவர்த்திக்கு மிகப் பிரிய மானது... தங்களுக்கும் கூடத்தான். (ஸலீம் தலேயை அசைக்கிருன்). பஹ்லவீப் பதியன்களேக் கொண்டு தனியாக ஓர் உத்தியான வனத்தைத் தாங்கள் தயாரித்த போது சக்கர வர்த்தி அளவில்லாத ஆனந்தம் கொண்டார்.

ஸலீம் : ஆம்.

அபுல் : அதனுல் பஹ்லவீ ரோஜாவை மொகல் வமிசத்து ராஜ சின்ன மாகக் கருத வேண்டியிருக்கிறது.

ஸலீம் : உம்...

அபுல் : தாங்கள் அவ்வளவு உயர்ந்த பஹ்லவீயை மேஜை மேல் கவிழ்த்துப் போட்டு, அதன் இதழ்கள் மேல், காம்பு மறையும் மட்டும் மாதுளம் மொக்குகளேப் போட்டு மூடி விடுகிறீர்களாம்.

ஸலீம் : அதனுலே!

(ஸலீம் யோசனேயோடு ஒரு புறமாகத் திரும்பிக் கொண் டிருக்கிருன். அபுல் பஜல் தயங்கித் தயங்கிப் பேசிக் கொண் டே ஸலீமைக் கவனித்துக் கொள்ளுகிருர்.)

அபுல் : பஹ்லவீ ரோஜாவின் மதிப்பு எவ்வளவு அதிகமோ, மாதுளம் மொக்குகளின் மதிப்பு அவ்வளவு குறைவு. மாதுளே எங்கு வேண்டு மாஞலும் கிடைக்கும்...அது மட்டுமல்ல. சாதாரண மான பூக்களிடையே கூட அதற்கு மதிப்பே இல்லே...பஹ்லவீ ராஜ சின்னமாஞல்...மாதுளே அடிமைச் சின்ன மாகிறது.

ஸலீம் : (திடீரென்று திரும்பி) வஜீர்ஜீ! இந்த மூக்கைச் சுற்றித், தொடும் பேச்சை விட்டு விட்டு, நேருக்கு நேர் பேசுவோம். நான் அஞர்க்கலியை மனமாரக் காதலிக்கிறேன். அவள் அடிமை. நான் சக்கரவர்த்தி மகன். ஆஞலும் சரி. நான் என் காதலின் பெருமையைத் தெரிவிக்க, என் ராஜ சின்னமான பஹ்லவீயை அஞர்க்கலிகளோடு சேர்த்துக் கௌரவிக்கிறேன். இதை நான் திறுத்த மாட்டேன். என்ன ஆஞலும் சரியே. அஞர்க்கலீ அடிமை அல்ல. ஸலீமின் உயிருக்கு உயிர். ஸலீம் எந்த நிலேயில் இருந்தாலும் சரி, ஸலீமின் பாதியை—அன்று ஸலீமைப் பூராவும் எடுத்துக் கொள்ள வேண்டியவள் அஞர்க்கலி. இது என் முடிவு. இதன் பயன் என்ன வாஞலும சரி. நான் தயார்.

அபுல் : இளவரசே! தாங்கள் கல்யாணம் என்று யோசிப்பது...

ஸலீம் : வஜீர்ஜீ! தாங்கள் கவிஞர். அற்பமான ராஜ தந்திரத்தை விட்டு விட்டு, நிர்மலமான கவியுள்ளத்தோடு சொல்லுங்கள். காதலின் புனிதத் தன்மையைக் கீழ்த்தரமாக நினைப்பது எவ்வ ளவு பாவம்! புனிதமான காதலே உணர்ந்து கொண்டு, அந்தத்

தீவிரமான ஆவேசத்துக்கு ஈடு கொடுக்க முடியாத உள்ளம் அழிவது மேல்...காதல் இல்லாவிட்டால், வானம் இல்லே, பூமி இல்லே, சிருஷ்டியே இல்லேயே! இந்த உடம்பே பஞ்ச பூதங்களின் அன்புக் கூட்டுறவால் உண்டான தல்லவா?...இப்படிப் பட்ட புனிதக் கூட்டுறவை அறுத்தெறியும் மனிதனைக் கௌரவிக்கக் கூடாது. அவன் சிருஷ்டியில், மிகத்தாழ்ந்த ஐந்துவை விடத் தாழ்ந்தவன். இத்தனை சுடர் விடும் என் புனிதக்காதலை நிர்த்தாட்சணியமாய் நான் அறுத்தெரியமாட்டேன். என் உயர்ந்த காதலைக் கீழ் நோக்குடன் நான் காணமாட்டேன். அனுர்க்கலி—ஸலீம் இருவருடைய புனிதக் காதல் வெள்ளத்துக்கு எதுவும் தடையாக இருக்க முடியாது. கரைகளை உடைத்துக் கொண்டு இந்த ஆறு ஓடும். இல்லேயா, கரையைத்தாண்டி வழியும். எந்தச் சமுத்திரத்தின் முடிவுவரைக்குப் போனுலும் சரி! அப்படித் தான் பெருகுமே யன்றி இந்தக்காதல் தேங்கிப் போய் பாலேவனத்தில் பாய்ந்து வற்றிவிடாது. இதை எதிர்ப்பவர்கள் தான் தங்கள் முடிவைப் பற்றிக் கவலேப்பட வேண்டிவரும்...... என் தீர்மானம் அசைக்க முடியாதது......

(கண்ணே மூடிக்கொள்கிருன்)

(அபுல் பஜல் சற்றுப் பொறுத்து)

அபுல்: இளவரசே! பாரசீக, சமஸ்கிருத இலக்கியங்களில் காதலேப் பற்றிக் காணப்படும் கவிதையைத் தாங்கள் ஆசு கவியாகப் பாடினீர்கள்.

(ஸலீம் திடீரென்று எழுந்திருந்து, அவர் பக்கத்தில் போய், அன்புடன்)

ஸலீம்: வஜீர்ஜீ! நீங்கள் கவிஞர், புரிந்து கொள்வீர்கள், இப்படி வாருங்கள். (அவர் கையைப் பிடித்துக்கொண்டு, அறையின் நடுப்பகுதிக்கு அழைத்து வந்து, கதவுப் பக்கம் கை காண்பித்து ஒவ்வொரு வாக்கியத்தையும் ரசித்துக்கொண்டே) முதல் முதலாக அனுர்க்கலி இந்த வாழ்க்கையில்—இந்த வழியாக நுழைந்தாள். திடுக்கிட்ட ஸலீம் கண்ட அந்த லாவண்யம்! அந்தக் கபடற்ற எளிமை! அவளுடைய அபூர்வமான ஒய்யாரம்! அந்த ஒசியும் கொடிபோன்ற உடலமைப்பு! மார்பின் எடுப்பான வளேவு, அந்த இடையின் ஒசிவு, முகத்தின் மௌன பாவத்தில்,

வைரத்தில் நீரோட்டம்போல் அசைந்தாடும் ஜொலிப்பு; அந்த அமிர்த கடிகை...வஜீர்ஜீ! என்னை இப்பொழுது தூண்டிவிடாத கலை இல்லை! எவ்வளவு கவிதைகள்! எவ்வளவு பாட்டுக்கள்? பல பங்கியில் அவளுடைய சிலைகள்! வஜீர்ஜீ! இதற்கு முடிவே இல்லை! நான் எவ்வளவுதான் வர்ணிப்பேன்!...

(கண்ணை மூடிக்கொள்கிருன்; சோபாவில் பொத்தென்று விழுகிருன்)

(அபுல் பஜல் நிதானமாய்)

அபுல்: காதல், கிளப்பிய—தங்கள் புனித உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து வெளிவந்த—இந்த அரிய வாக்குகளைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்ட—கவியான அபுல் பஜல்......

(ஸலீம் அசைந்து, கண்ணைத் திறந்து புருவங்களை நெரித்து)

ஸலீம்: ஓகோ! இனிமேல், ராஜதந்திர நிபுணரான வஜீர்ஜீ பேசுவார்போல் இருக்கிறது. இனிமேல்?

(அபுல் பஜல் கீழ் நோக்கியபடி)

அபுல்: உத்தரவு!

ஸலீம்: காதல் இல்லாத சாம்ராஜ்யமே எனக்குத் தேவையில்லை.

அபுல்: அதுசரி! அடிமையை அரசகுமாரன் மணப்பதைக் குடிகள் அங்கீகரிக்காவிட்டால்......

ஸலீம்: என்ன? குடிகளுக்கு இதில் என்ன தொடர்பு? என் வாழ்க்கை வழியை, என் சுகதுக்கத்தை, என் மனப்போக்கை வகுப்பவர்கள் குடிகளா? நான் குடிகளுக்கு அடிமையா? இளவரசனுடைய மார்பிலும் வெது வெதுப்பான ரத்தம் ஓடும இதயந்தானே இருக்கிறது? ஜீவனற்ற வயிரக்கல் அல்லவே! இதைக் குடிகள் உணர்ந்துகொள்ளமாட்டார்களா?

அபுல்: தாங்கள் யோசித்துப் புரிந்துகொள்ளவேண்டும். இந்து—முஸ்லிம் பகை ஒழிந்து, சாம்ராஜ்யம் சுபிட்சம் அடைவதற்காக,

துணிந்து சக்கரவர்த்தி அம்பர் ராஜகுமாரியை மனைவியாக ஏற்றார். அதனால் மொகலாயர்களிலும் ராஜபுத்திரர்களிலும் சில பகுதியினர் இன்னும் ஆத்திரம் தணியாமல் இருக்கிறார்கள். இந்த நிலையில் தாங்கள் அடிமையையே மணக்க முன்வந்தால்...

ஸலீம் : வஜீர்ஜீ! நான் யோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்தேன். தாம் முகம்மதியர் என்ற முரட்டுப் பிடியை விட்டு ஹிந்து மனைவியை மணந்து, வருங்கால பாரதத்துக்கு ராஜபாட்டையைக் காண்பித்து, புதிய சகோதரத்துவத்தை நிலை நாட்டினார் என் தகப்பனார். ஹிந்துப் பெண்களுக்கு உள்ள மதப்பற்றை உதறிவிட்டு, மொகலாயக் கணவனை ஏற்றுக்கொண்டு, ஹிந்துப் பெண்களுக்கு இயற்கையான கபடற்ற உள்ளத்துடன் அன்பு செலுத்திக் காதலுக்கு மத வித்தியாசம் இல்லை என்பதைத் தெளிவாக்கினாள் என் தாயார். இந்து முஸ்லிம் சேர்க்கை, அக்பர்—அம்பர் ராணிகளின் அன்புப் பயனான ஸலீம். நான் நிலைநாட்டும் அபூர்வக் காதல் சாம்ராஜ்யத்தில், சக்கரவர்த்தி—அடிமை என்ற ஏற்றத் தாழ்வைத் தொலைத்துவிட்டு எல்லா மனிதர்களிடையிலும், சமத்துவத்தையும் சகோதரத்துவத்தையும் விளம்பரப்படுத்தப் போகிறேன்...வஜீர்ஜீ! என் தந்தையிடம் விண்ணப்பம் செய்யுங்கள்! நான் பகிரங்கமாக அனார்கலியை விவாகம் செய்துகொள்ள உறுதி கொண்டுவிட்டேன். இதற்குத் தடை விதிக்க முடியாது. முடிவு என்ன ஆனாலும் சரி.

(அமைதியாய்த் தாழ்ந்த குரலில்)

வஜீர்ஜீ! இப்படி நீங்கள் விண்ணப்பித்துக் கொள்ளுங்கள். உங்கள் கவியுள்ளத்தை நான் கௌரவிக்கிறேன்.

அபுல் : யுவராஜா! அபுல் பஜலைத் தாங்கள் இரண்டு பகுதியாக்கி விட்டீர்கள்! எனக்குள் இருக்கும்,—“நியாயத்தையும் கபடற்ற தன்மையையும்” கௌரவிக்கும் கவிஞனுக்கும்—விழிப்புடன் சாம்ராஜ்ய நலனைக் கவனித்துச் சக்கரவர்த்திக்கு யோசனை சொல்லும் ராஜ தந்திரிக்கும்—போட்டி வைத்துவிட்டீர்கள். நான் இதை ஆராய்ந்து தீர்ப்புச் செய்யமுடியாது. சக்கரவர்த்தியிடமே விண்ணப்பித்துக்கொள்ளுகிறேன்.

ஸலீம் : சரி. ஆனால் என் முடிவுக்கு மாறுதல் வராது. அது மட்டும் உறுதி. இனி உத்தரவு!

(மேஜைக்கருகே போய், கீழே உதிர்ந்து கிடக்கும் மாதுளம் இதழை ஆசையுடன் எடுத்துச் சுவர்ப்பக்கம் திரும்பி நீர் ததும்பும் கண்களால் அந்த இதழைப் பார்க்கிருன் ஸலீம்.

அபுல் பஜல் இதைக் கவனித்து விட்டு மெதுவாகப் போகிருர்.)

(சந்தேகத்துடன் நின்று நின்று திரை விழுகிறது)

## காட்சி—2

(நடுப்பகல்.

ஆலோசனை மண்டபம்.

அக்பர் அங்கும் இங்கும் உலாவுகிறார்.

அபுல் பஜல் நின்றுகொண்டிருக்கிறார்.)

அக்பர் : அபுல் !

அபுல் : ஜஹாம்பனா !

அக்பர் : சாதாரணமான மனிதத் தன்மையை ஓட்டிவிடும் இந்த ராஜ நீதி எந்த நியாயத்தைச் சேர்ந்தது ?

அபுல் : இதைப்பற்றி முடிவு சொல்வது கஷ்டம்.

அக்பர் : அபுல் ! அம்பர் இளவரசியைக் கல்யாணம் செய்துகொள்ள நிச்சயித்த காலத்தில்கூட, நான் இவ்வளவு தடுமாறவில்லை... எப்படி முடிவு செய்வது ? இந்தச் சக்கரவர்த்திப் பதவி மிகக் மிகக் கொடுமையானது !... இயற்கையான மனிதத் தன்மையை வெளிப் படுத்திக்கொண்டு வாழும் கூலிக்காரர் வாழ்க்கை இதைவிடப் பயனுள்ளதாகும் !

அபுல் : ஸலீம்—அனார்க்கலி கலியாணத்துக்குச் சம்மதங் கொடுக்க முயற்சிக்கலாமா ?

அக்பர் : எப்படி நடக்கும் ? நான் ராஜபுத்திரப் பெண்ணை மணந்ததற்கே, இன்னும் மொகலாயர் என்னைத் தூற்றிக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் இதுவும் ஒரு ராஜ தந்திரம் என்ற சந்தேகத்தால் எதிர்க்க முடியாமல் வாயை மூடிக்கொண்டிருக்கிறார்கள். மொகலாயர்கள் இப்படிக் குமைகிறார்கள்......

ஒப்பற்ற ராஜ புத்திர வமிசத்துக் கன்னிகையை மொகலாய னுக்குக் கொடுத்துக் கல்யாணம் செய்து விட்டானென்று ஆண்மை மிகுந்த ராஜ புத்திரர்களும் ஸகர வந்தர்களும் இன்றைக்கும் பிஹாரீமல்லே மன்னிக்காமல் இருக்கிருர்கள்... ராஜ புத்திரர்கள் அப்படி உறுமுகிருர்கள்.

நான் செய்த சீர்திருத்தமே ராஜ்யத்தைக் கலவரப் படுத்திக் கொண்டிருக்கும் இந்த நிலேயில், ஸலீம் அடிமையை மணந்து, நான் அதை ஒப்புக் கொண்டால் ராஜ்யம் எத்தனே அல்லோல கல்லோலங்களுக்கு உள்ளாகும்! யோசியுங்கள்.

எவ்வளவுதான் அன்பு உடையவள் ஆனுலும், என்னதான் கபட மற்றவள் ஆனுலும், அடிமையை மணந்த இளவரசனே நாட்டில் யாரும் ஏற்க மாட்டார்கள்.

அது மட்டுமா? அக்பர் தொடங்கிய சீர்திருத்தம், இப்படி விஷ மான பலனேக் கொடுத்திருக்கிறது என்பார்கள்.

மொகலாய—ராஜபுத்திர சம்பந்தத்தில் கீழான ஜாதி உண்டா யிற்றென்று பழியை உண்டாக்குவார்கள். ஸலீம்—அனர்க்கலி மணத்தை, உள்ளம் அங்கீகரித்தாலும் மூளே ஒப்ப மாட்டே னென்கிறது.

அபுல்: ஜஹாம்பனு? மனித வாழ்க்கைக்குப் புகழ் கொடுத்தவை இரண்டு விதமான அறிவுகள். ஒன்று இதயத்துக்குச் சம்பந்தப் பட்டது; இரண்டாவது மூளேக்குச் சம்பந்தப்பட்டது. இவ் விரண்டுக்கும் ஒற்றுமை ஏற்படும்போது மனிதத்தன்மையின் உயர்வு வெளிப்படுகிறது. இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று மாறுபடும்போது மிருகத்தைக் கண்டு மனிதன் பொருமைப் படும் நிலே வந்து விடுகிறது.

அக்பர்: இந்தக் கடினமான பிரச்னேயை அழகாக விடுவித்து விட்டீர் கள். அமுதத்துக்கு ஒப்பான தூய காதலே ருசி பார்த்த அக்பரின் உள்ளம், அனர்—ஸலீம் தூய காதலேப் பூஜ்ய பாவத் துடன் ஒப்புக்கொள்ளுகிறது. ராஜ தந்திர அறிவை அநுபவத் தால் புரிந்துகொண்ட அக்பரின் மூளே, அவர்களுடைய திருமணத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது.

அபுல்: ஆம். சரியான அறிவு மூளேக்குச் சம்பந்தப்பட்டதா, இதயத் துக்குச் சம்பந்தப்பட்டதா? இதயத்தைக் காலிசெய்து விட்டு,

மேதா சக்தியை வளரவிட்ட சங்கரனு, மானிட அறிவுச் செல்வத்துக்கு உள்ளத்தையே இருப்பிடமாகச் செய்துகொண்ட புத்தனு? யாருமே இந்தப் பிரச்னேக்கு அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. அகப்பட்டுக் கொண்டால் ஏதேனும் ஓர் அழிவுக்கு உட்பட்டுத்தான் ஆகவேண்டும். இது பிரச்னேயாக நிற்பதே மனித வாழ்க்கையின் பொறுக்க முடியாத கொடுமைகளுக்குக் காரணம்.

அக்பர்: அபுல்! எந்த வழியிலும் தீர்மானிக்க முடியாமல் தவிக்கிறேன்.

(வேலேக்காரன் பிரவேசித்து)

வேலேக்: ஜஹாம்பனு? அனர்க்கலி...

அக்பர்: வேறு யாரையும் உள்ளே விடாதே. அவளே மட்டும் அனுப்பு.

(அனர்க்கலி நுழைந்து, சோகத்துடன் சலாம் செய்து தலே குனிந்து நிற்கிருள்.

அக்பர் பேச முடியாமல் அங்கும் இங்கும் உலாவுகிருர்.)

அபுல்: அனர்க்கலி! உன்னே எதற்காக வரவழைத்தோம் தெரியுமா?

அனர்க்கலி: தெரியாது, வஜீர்ஜீ!

அக்பர்: அனர்க்கலீ!

(அவள் பக்கத்தில் வந்து பார்த்துவிட்டுப் பின்னே போய்ப் பெருமூச்சுடன் மறுபடியும் அவள் கிட்ட வந்து)

அனர்க்கலீ! சக்கரவர்த்திப் பதவி கொடியது! அரச பதவி சில சமயங்களில் மனிதத் தன்மைக்கே எதிரிடை...

அனர்: குதாவந்த்!

அக்பர்: (நடந்து கொண்டும் நின்றும்) அனர்க்கலீ! அக்பருடைய சக்கரவர்த்தி அதிகாரம் எங்கே தெரியுமா? ராஜாக்களின் முன்னிலேயில். என் ஆட்சிக்கு உட்பட்ட குடிகளின் பார்வையில்... இந்தப் பதவி வைரம் போன்றது. கண்ணேச் சிதற அடிக்கும் பளபளப்பு வாய்ந்தது. அது மட்டும் அல்ல, வைரத்தைப்போல்

மிகக் கொடுமையான உறுதி வாய்ந்தது. ஆனால், அக்பர் வைரம் போன்ற சக்கரவர்த்தி மட்டுமே அல்ல; மனிதனும்தான். தலையில் கிரீடம் இல்லாத அக்பர், உங்கள் காதலை ஒப்புக் கொள்ளுகிறான். ஆனால்... (நின்று) ஏதோ ஒன்று... என் தீர்மானத்தைச் சொல்லி விடுகிறேன். ஸலீமிடம் வளர்ந்து கொண்டிருக்கும் உன் சிநேகத்தை நான் கடுமையாகத் தடுக்காமல் இருக்க வழி இல்லை. நீ இனி ஸலீமைப் பார்க்க முடியாது. உன் அன்பனுடைய தரிசனம் உன் உயிருக்கே ஆபத்தைத் தரும் என்பதை நான் சொல்லித் தீர வேண்டும்.

(போய் சோபாவில் உட்காருகிறார்.)

அபுல்: அனார்க்கலீ! இந்த உலகத்தில் நியாயம் இல்லை. சமூகம் தீர்த்துக்கட்டிய ஏற்றத் தாழ்வுகளுக்கு அடங்கி நடந்து கொள்ளாவிட்டால், சமூகம் எந்த மனிதனையும் மன்னிக்காது. அரசனானாலும் சரி, ஆண்டியானாலும் சரி!

அனார்: வஜீர்ஜீ! எனக்கு ஒன்றும் புரியவில்லை.

அக்பர்: (கட்டளை இடுவதுபோல்) நீ ஸலீமைக் காதலிக்க முடியாது.

அனார்: குதாவந்த்! தங்கள் ஆணைக்கு எதிர்த்துப் பேசத் துணிய மாட்டேன். நான் ஸலீம் இளவரசரைக் காதலிக்க மாட்டேன்... அது என்னால் முடிந்தால்... நான் தெரிந்து செய்யவில்லை மகாப்பிரபுவே!... எனக்கு ரொம்ப பயமாய் இருக்கிறது. ராஜ குமாரர் எங்கே? திக்கற்ற அடிமையான நான் எங்கே?... சக்கரவர்த்தீ! என்னைக் காப்பாற்றுங்கள். என்னதான் தடுத்தாலும் என் மனசு நிற்க மாட்டேனென்கிறது. பிறந்தது முதலாய் அடிமையாகி, பிறர் வசப்பட்டதாலோ என்னமோ நானே என் வசம் இல்லாமல் நிற்கிறேன்.

அபுல்: ஆஹா! போகிறது. முயன்று பார்க்கிறாயா?

அனார்: வஜீர்ஜீ! நான் அதிகம் படிக்கவில்லை. தங்களிடம் சரியாய்ச் சொல்ல முடியாமல் தவிக்கிறேன். மன்னியுங்கள். இமாலய மலைகளைத் தாண்டி வரும்போது ஒரு மலையின் உச்சியிலிருந்து பெரிய பள்ளத்தாக்கு ஒன்றைப் பார்த்தேன். அது பயங்கரமானது. நடுக்கம் எடுத்தது. பயத்தால் நடுங்கிய என்னை அது இழுத்தது. அந்த ஆழத்தில் விழுந்து விடவேண்டு

மென்று மனசு துடித்தது. அந்த இழுப்புக்கு வசப்பட்டு விடும் உடம்பைத் தடுத்துக் கொள்ளவும் முடியாமல், குதிக்கவும் முடியாமல், ஒரு வெறியில், 'குதிக்கிறேன், குதிக்கிறேன்' என்று கூச்சலிட்டேன். என் தாயார், என் கண்ணைமூடி மெதுவாக இறக்கி என்னை அழைத்து வந்தாள்... உண்மையைச் சொல்லு கிறேன். இளவரசரைப் பார்த்த போதெல்லாம் அதே நிலைக்கு வந்து விடுகிறேன்.

(அக்பர் முன் மண்டியிட்டு அழுதுகொண்டே)

குதாவந்த்! அபசாரம் செய்கிறேன்...என்னை நான் தடுத் துக்கொள்ள முடியாமல் இருக்கிறேன்...அவர் கண் பார்வையில் இருக்கும் மட்டும், அவர் பக்கத்தில் இருக்கும்மட் டும்...அவர் பக்கத்தில் இருக்கும் மட்டும், நான் என்ன ஆய் விடுகிறேன் என்பதே தெரிகிறதில்லை. அவர் எட்டப் போனதும் என் உள்ளுக்குள்ளே இருப்பவை எல்லாம் இறந்து விட்டது போல்... சூனியமாய் விடுகிறேன். என்னால் ஒளிக்க முடியாது; பொய் சொல்ல முடியாது. அவரைக் காதலிக்காமல் இருக்க முடியாது. என்னால் வாழ முடியாது. என்னைக் கொன்று விடுங்கள்!

(விக்கி விக்கி அழுகிறாள்.

அக்பர் கண்ணை மூடிக் கொள்ளுகிறார்.

அபுல் பஸல் கல்லாய்ச் சமைந்து விடுகிறார்.

இரண்டு நிமிஷங்களுக்குப்பின் அக்பர் ஆதரவோடு அனார்க்கலியின் தோளைப் பற்றி எழுப்புகிறார்.)

அக்பர்: அம்மா! உன் காதல் புனிதமானது. இவ்வளவு கபடற்ற உள்ளத்தை வருத்தி, தூயதான காதலைக் கொலை செய்து என்னால் எதையும் தீர்மானிக்க முடியவில்லை. (நின்று அவள் மோவாயைப் பற்றி) நான் ஓர் அடிமையாகப் பிறக்கவில்லையே என்று வருந்துகிறேன். அப்படிப் பிறந்திருந்தால், உன்னை அன்புடன், கௌரவத்துடன் என் மருமகளாக ஏற்றுக் கொள்ள முடியும் அல்லவா? அனார்க்கலீ! இந்த மாமனார் சக்கரவர்த்திப் பதவியை...

அனர் : மகாப் பிரபுவே ! மகாப்பிரபுவே ! இனி, எனக்கு வாழ்க்கையே வேண்டாம்...

(பெருங்குரலில் அழுகிருள்.

அபுல் பஜல் ஜாடை காண்பிக்க வேலைக்காரன் வந்து அனர்கலியை நடத்திக்கொண்டு போகிருன்.

சற்று நேரம் நிசப்தம்.)

அக்பர் : (நீண்ட பெருமூச்சுடன்) அபுல் !

அபுல் : ஜஹாம்பஞ ? இந்த வாழ்க்கைக்கு இன்று பெரிய யோகம். நான் இன்று சாதாரணமான மனித உலகில் இல்லை. உலகத்தின் ஆழத்தில் எங்கோ கனிந்து கொண்டிருந்தாலும், அந்த வட வாக்கினியின் ஒளியில் விலை மதிப்பற்ற மாணிக்கங்களைப் பார்க்கிறேன். வடவாக்கினியின் கனலுக்கும் இந்த எண்ண அலைகளின் தாக்குதலுக்கும் என் மூளை ஈடு கொடுக்க முடியாமல் சோர்வடைகிறது. உலகை ஆட்டி அதிரவைக்கும் புயல் ஒரு பிரமாதம்மா—உள்ளத்தில் கிளம்பும் புயலுக்கு ஒப்பிட்டால் !

அக்பர் : அபுல் ! என்னல் ஒரு விதத்திலும் தீர்மாணிக்க முடிய வில்லை. என்ன சக்கரவர்த்திப் பதவி ! தன் சுகத்தைத்தான் பெற முடியாத அடிமைத்தனம் தான் அனர்க்கலியின் கிரகசாரம் என்ருல், நான் என்ன சொல்லிக் கொள்வது? சுத்தமான மனச்சாட்சிக்குத் தெளிவான நியாயத்தைக் கையாள முடியாமல், சாம்ராஜ்யத்தை நிலைநாட்டும் முயற்சியில் அடிமையாய் இருப்பது என் கிரகசாரம். அபுல், மந்திரி சபையின் தீர்ப்பைக் கண்ணை முடிக் கொண்டு ஒப்புக் கொள்கிறேன். அவ்வளவுதான்...எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது.

(விர்ரென்று எழுந்திருந்து போகிருர்.)

(பட படப்புடன் திரை விழுகிறது)

## காட்சி—3

(முன் இரவு.

ஆறடி உயரம் செங்கல் சுவர். நிசப்தம். விசிறி எறிந்த மின்னலைப் போல் ஸலீம் அந்தச் சுவரின் மேல் வந்து விழுகிறான்.

இரண்டு கைகளையும் நீட்டி, சுவரில் மார்பை ஒற்றி ஒற்றிப் பெரிய குரலில், நெஞ்சு அதிர, அழுதுகொண்டே)....

**ஸலீம்:** அனார்! அனார்!! அனார்!!!

(சுருண்டு விழுந்து விடுகிறான். அசையவே இல்லை. மூன்று நிமிஷங்கள். வேலைக்காரன் ஓடி வந்து, ஆச்சரியத்துடன் பக்கத்தில் நிற்கிறான். ஸலீம் திடீரென்று எழுந்திருந்து, சுவரிலிருந்து செங்கற்களை வெறியுடன் பெயர்க்கப் போகிறான்.)

அனார்! அனார்!! இன்னும் உயிரோடு இருக்கிறாயா? உன் காதல் இன்னும் உன் உயிரை நிறுத்தி வைத்திருக்கிறதா?

**வேலைக்:** குதாவந்த்.

**ஸலீம்:** சுவரிலிருந்து...அதோ அனாரின் குரல்!

**வேலைக்:** (பயத்துடன்) தங்களுக்கு அப்படித்தோன்றுகிறது. இன்னும் உயிரோடு இருக்க முடியாது.

**ஸலீம்:** காதலுக்கு முடியாததே இல்லையடா! உள்ளே உயிர் துடித்துக் கொண்டிருக்கும் போல் தெரிகிறதே!

வேலைக்: அவள் கடைசி மூச்சுப் போகும் வரையில் சேவகர்கள் இங்கேயே நின்று கொண்டிருந்தார்கள். அது சக்கரவர்த்தியின் உத்தரவு.

ஸலீம்: ஆ!

(உடலும் கண்ணும் சுழலுகின்றன. பெருமூச்சு விடுகிருன். யோசனையுடன் சுவர்ப்பக்கம் திரும்பி)

அனர்!

(கத்தியை மார்பின் மேல் வைத்துக் கொள்ளுகிருன். வேலைக்காரன் பயந்து கையை எடுக்கப் போகிருன்.)

நீ பயப்பட வேண்டியதில்லை, நான் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன்.

(மார்பில் சட்டையை ஒதுக்கி விட்டு, கத்தி முனை தோலில் இறங்கும்படி கொஞ்சம் கிழித்துக் கொள்ளுகிருன். கத்தி முனையில் சிறிது ரத்தம் ஒட்டிக் கொண்டிருக்கிறது.)

வேலைக்: (தத்தளித்து) பிரபுவே!

ஸலீம்: பயம் ஒன்றும் இல்லை. இந்தக் கத்தியைச் சக்கரவர்த்தியிடம் கொண்டுபோய்க் கொடு. அனர்க்கலியின் சுவரின் முன்பு நின்று கொண்டு ஸலீம் இந்தப் பாடம் கற்றுக் கொண்டான் என்று சொல்லு! சாம்ராஜ்யந்தான் எங்கள் புகழ். குடிகள் தாம் எங்கள் நோய். இயற்கையான மனிதத் தன்மை எங்களை விட்டு இன்றோடு ஒழிந்தது. இது அனர்க்கலியின் சாபம். அனர்க்கலி, சுவரில் மூச்சு த்திணறிச் சாக வில்லை. அவளை இந்தக் கத்தியால் குத்தி அக்பர் மகன் கொன்று விட்டானென்று சொல்லு. இந்த ரத்தத்தை முத்த மிட்டுக் கொண்டு சக்கரவர்த்தியைக் கூத்தாடச் சொல்லு.

(கத்தியைக் கொடுத்து விட்டு)

இந்த ரத்தம் அனர்க்கலியின் காதல் வெள்ளம், ஸலீமின் மார்பின் வழியாகப் பெருகியது. இந்த ரத்தத்தின் சிவப்பு அனர்க்கலியின் கொடிய சாபம். ஸலீமின் ஈரங்காயாத காதலின் சின்னம். இது தகப்பனுக்கும் மகனுக்கும் இருக்க வேண்டிய அன்புத் தளையை இரக்கம் இல்லாமல் வெட்டி யெறிந்த ரத்தந்தோய்ந்த கத்தி. நாங்கள் மனிதர்கள் அல்ல. இயற்கையான உள்ளத்துடன்

நாங்கள் வாழ்வது பிரயோஜனம் இல்லை. இதுதான், அக்பர் வரப்போகும் மொகல் ராஜகுமாரர்களுக்குப் போதிக்கும் பாடம். இது தான் கபடற்ற அனார்க்கலியின் சாவு. திக்கற்ற ஓர் அடிமையின் கொலையால் மொகல் ராஜ வமிசத்துக்கும் மொகல் சாம்ராஜ்யத்துக்கும் நேர்ந்த சாபம். இது கட்டாயம் பிடித்துத்தான் தீரும்.

சக்கர வர்த்தியையும் அடிமையையும் சமமாகப் பார்க்கும் ஒருகண் இருக்கிறது. அந்த நியாயக் கண், அனார்க்கலியின் சாபத்தை வருங்கால மொகல் வமிசத்தின் தலையெழுத்தாக ஒப்புக் கொண்டது. அனார்க்கலியின் அழிவுக்கும். வருங்காலத்து மொகல் வமிசத்தின் கதிக்கும் அடையாளமாய், என் காதலாகிய ரத்தத்தில் தோய்ந்த இந்தக் கத்திக்குத் தம் நியாய சபையில் சிம்மாசனத்துக்கு எதிரில், பொற் சுண்ணும்பாலும் சலவைக்கல்லாலும் கோரி கட்டச் சொல்லு.

(பின்னால் திரும்பி)

இந்தப் புனிதக் காதலுக்குரிய பிரதேசத்தில் நான் ஒண்டியாய் இருக்க வேண்டும், இந்தப் பக்கம் யாரும் வரக் கூடாது. நீ போ.

(வேலைக்காரன் மெதுவாய்ப் போகிறான்.

ஸலீம் நமாசுக்குக் குனிவதுபோல் சுவரின் அடிப்புறத்தில் மண்டியிட்டு, கை குவித்து, சுவரில் தலையைச் சார்த்தி)

ஸலீம்: அனார்! அனார்!! அனார்!!!

(பெரு மூச்சு அலையலையாகத் துரத்தி வர விக்கி விக்கி அழுகிறான்.)

(இரக்கக் குறியாக மெல்ல மெல்லத் திரை விழுகிறது)

# 5. மல்லம்ம தேவியின் சாபம்

★

ஆசிரியர்:

ஸ்ரீ ஆமஞ்சர்ல கோபாலராவ்

(1907-ல் பிறந்தவர். "பாரதீயக் கலை; ஆந்திர சிற்ப தர்ப் பணம்;" முதலிய கட்டுரைகளும், "விசுவந்தரா; வீம்பு;" முதலிய நாடகங்களும் எழுதி இருக்கிறார்.

மல்லம்ம தேவியின் சாபம் 'வீணா' என்னும் பத்திரிகையில் 1938-ல் பிரசுரமாயிற்று.

1938-ல் நடிக்கப் பெற்றது.)

## பாத்திரங்கள்

★

விஜய ராம ராஜா

வெங்கண்ணு

புஸ்ஸீ துரை

ஹைதர் ஜங்

சர்தார்

பாப்பா ராவ்

கங்கண்ணு

தாசிப் பெண்,

(விஜய ராம ராஜாவின் கூடாரம்: ஏறக்குறைய இரவு பத்து மணி இருக்கும். பொப்பிலிச் சண்டை முடிந்து விட்டது. கூடாரத்தில் நிசப்தமாக இருக்கிறது. ஆனல், அடிக்கடி தூரத்தில் பாராக்காரர்களின் குரலும், காயம்பட்ட காலாட்களின் முனகலும் நரிகளின் ஊளைச் சத்தமும் ஈன சுரத்தில் கேட்கின்றன. கூடாரத்தின் நடுவிலிருந்த ஜன்னலின்மூலம் பொப்பிலிக் கோட்டையில் எரிகின்ற தீயின் கொழுந்து ஆகாயத்தை எட்ட முயலுவது தூரத்தில் தெரிகிறது. கூடாரத்தின் ஒரு பக்கத்தில் தங்கப் பட்டைகளாலும் சந்தன மரத்தாலும் இழைத்த அழகிய கட்டில் ஒன்று இருக்கிறது. மற்ருெரு புறத்தில் திண்டும் திவாசுகளும் போட்டிருக்கிருர்கள். வலப் பக்கத்தில் இருக்கும் பெரிய தீப ஸ்தம்பம் கூடாரத்தின் பாதிப் பகுதிக்கு மட்டுமே வெளிச்சம் தருகிறது. விஜய ராம ராஜா உல்லாசமாகக் கட்டிலின்மேல் சாய்ந்தபடி பொப்பலித் தீயைப் பார்த்தவண்ணம் ஹுக்கா குடித்துக் கொண்டு நிற்கிருர். வெங்கண்ணு அவருடைய 'ஹுக்கா'வுக்கு விசிறிக் கொண்டிருக்கிருன். அவனுடைய தலையிலும் கையிலும் கட்டுக்கள் போடப்பட்டிருக்கிறது.)

விஜய: வெற்றி! முழுக்க முழுக்க வெற்றி கிடைத்து விட்டது. வெங்கண்ணு! நம் சபதத்தை நிறைவேற்றி விட்டோம்.

வெங்க: மகாராஜா தீரர். சபதம் செய்வதும் அதை நிறைவேற்றுவதும் தங்களுக்குத்தகும். இரண்டு சபதங்களை நிறைவேற்றி விட்டீர்கள்.

விஜய: (பெருமையோடு) நிச்சயமாய், வெங்கண்ணு! ஆம், நிச்சயமாய். ஒன்று, பொப்பிலியைத் தரை மட்டமாக்கினேன். அதோ, அந்தத் தீக்கொழுந்துகள் இன்னும் வானத்தை நோக்கி

எரிந்து கொண்டே இருக்கின்றன. இரண்டு, மல்லம்ம தேவியின் கட்டிலையும் தருவித்து விட்டேன்.

(கட்டிலைப் பார்க்கிருன். அட்டகாசச் சிரிப்புச் சிரிக்கிருன்.)

இன்று இரவு இதிலேதான் படுக்கப் போகிறேன்.

வெங்க: (கட்டிலை ஆராய்ந்து பார்த்த வண்ணம்) மகாராஜாவுக்குத் தெரியாத விஷயம் இல்லைங்க. இருந்தாலும் நான் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன்.

விஜய: வெங்கண்ணு! நீ சந்தேகப்படுகிறதைக் கண்டால் எனக்குச் சிரிப்பு வருகிறது. உன் மனசிலே இருக்கிறதைத்தான் சொல்லேன்.

வெங்க: இந்தக் கட்டிலைப் பார்க்கப் பார்க்க, எனக்கென்னமோ, ரொம்பப் பயமாய் இருக்கிறது. இதில் ஏதோ ஒரு பெரிய சக்தி இருக்கிறதென்று தோன்றுகிறது. மகாராஜா! அதிலே படுத்துக்கொள்வது யாருக்கும் நல்லதல்ல! மகாராஜாவுக்கு, அற்பனுகிய நான் என்ன சொல்ல முடியும்? ஒன்று; இந்தக் கட்டிலைத் தொட்டாலே, மல்லம்ம தேவியின் சாபம் நிச்சயமாகத் தொடரும். அந்த அம்மாள், சிறந்த பத்தினி.

(விஜய ராம ராஜா 'ஹோ' என்று சிரிக்கிருர்.)

தாங்கள் என் பேச்சை அலட்சியம் செய்யக் கூடாது. நான் உண்மையைச் சொல்லுகிறேன், கட்டிலின் மேலே கிடப்பது அன்னத் தூவியால் ஆன மெத்தை அன்று; கூரிய கத்தி நிறைந்த படுக்கை. தாங்கள் என் பேச்சுக்கு மதிப்புக் கொடுங்கள். அதில் மட்டும் படுக்க வேண்டாம். உங்கள் கட்டில் பக்கத்துக் கூடாரத்தில்தான் இருக்கிறது. இந்த நிமிஷமே அதைக் கொண்டு வருகிறேன்.

(விஜய ராம ராஜா புன்னகையோடு வெங்கண்ணுவைச் சமீபிக்கிருன்; அவனுடைய தோளைத் தட்டி நயமாகப் பேசுகிருன்.)

விஜய: வெங்கண்ணு! சண்டையில் தேர்ந்த வீரன் நீ. நீயே இப்படிப் பேசுவது ஆச்சரியம் மட்டும் அன்று; சிரிப்பாகக்கூட

இருக்கிறது. வேண்டுமானுல் கிட்ட வந்து தொட்டுப்பார். மெத்தென்ற அன்ன தூவி அடைத்த மெத்தைதான். பொன் பட்டைகளால் பின்னப்பட்டது.

(வெங்கண்ணுவைக் கட்டிலின் அருகே தள்ளிக் கொண்டுபோக முயல்கிருன்.)

வெங்க: வேண்டாம், வேண்டாம்! அதன் காற்றுக்கூட எனக்கு வேண்டாம்! தாங்கள் மகாராஜா! தாங்கள் தொட்டால் அது பொறுக்கலாம்; அற்பனுகிய என்னை நிச்சயமாய் எரித்துவிடும்.

விஜய: வெங்கண்ணு! உனக்கு ஏதோ காரணமற்ற பயம் தோன்றி யிருக்கிறது. நான் அதைப் போக்க முயல மாட்டேன். இதோ, பொப்பிலிக் கோட்டையை ஒரு தடவை பார். நம் ஆண்மைத் தீயால் பொப்பிலி வெந்து சாம்பலாய் விட்டது.

(தீக் கொழுந்துகள் மேலோங்குகின்றன.)

என்ன, அது? இன்னும் அணையாமல் தீ பரவுகிறதே! இவ்வளவு நேரம் எரிய, அந்தக் கோட்டையில் என்ன மிகுந்திருக்கிறது?

வெங்க: பொப்பிலித் தீ! அது இப்போதைக்கு அணையுமா? அது அணைகிற தீயன்று மகாராஜா!

(விஜய ராம ராஜா தூக்கி வாரிப்போட, வெங்கண் ணுவை ஒருகணம் ஏற இறங்கப் பார்க்கிருன்)

விஜய: என்னடா, சொன்னுய்?

வெங்க: ஒன்றும் இல்லை மகாராஜா! உள்ளதைச் சொன்னேன்.

விஜய: உள்ளதைச் சொன்னுயா? உன் தலை! அது என்ன தீ யென்று உனக்குத் தெரியுமா? மல்லம்ம தேவியும் மற்ற அரண் மனைப் பெண்களும் குதித்த தீக்குண்டத்தின் சிதை. இன்னும் அணையவில்லை.

வெங்க: தவறி விட்டீர்கள். அது மல்லம்ம தேவியின் கோபத்தீ. அது. ஆகுதி பெறும் வரையில் அணையாது.

விஜய: (கட, கட, வென்று சிரித்து) இன்னும் ஆகுதியாவது? வேண்டுமட்டும் ஆகுதி கொடுத்தாய் விட்டது. சற்றுநேரத்தில்

தானே அணைந்து விடும். இன்னும் ஆகுதி செய்யப் பொப்பிலி யைச்சேர்ந்த ஓர் ஈ காக்காய்கூட உயிரோடு இல்லை.

வெங்க: இன்னும் தவறு செய்கிறீர்கள். ஒரு வீரன் இன்னும் உயிரோடுதான் இருக்கிறான்.

விஜய: யாரடா அது?

வெங்க: யார் என்று கேட்கிறீர்கள்? பொப்பிலிப் புலி, பாப்பா ராவ் துரை!

விஜய: ஆமாண்டா ஆமாம். நிஜமாக மறந்து விட்டோம். பாப்பா ராவ் பிழைத்திருக்கும் வரையில் நமக்கு நிம்மதியே இல்லை. பாப்பா ராவ் உண்மையாகப் புலியேதான். (மறுபடியும் தைரியப் படுத்திக் கொள்ளுகிறான்.) ஆனாலும் ஒரு பாப்பா ராவ் என்ன செய்துவிட முடியும்? இத்தனை பேர் சிப்பாய்களையும் தாண்டி வரவேண்டும் அல்லவா?... பாப்பா ராவ் ஒருத்தனால் என்ன செய்ய முடியும்?

வெங்க: பாப்பா ராவ் அவர்கள் சங்கதியே வேறு. அப்படிச் சொல்லி விடாதீர்கள். அடிபட்ட புலியைச் சில சமயங்களில் கோட்டை கொத்தளம், சிப்பாய்கள் எதுவுமே தடுக்க முடியாது. மிக ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். கொஞ்சம்கூட ஏமாந்து விடக்கூடாது.

விஜய: வெங்கண்ணா! இந்த அநாவசியமான பயத்தை யெல்லாம் விட்டு விடு. இனி நீ போ. இப்பொழுதே படுக்கும் நேரம் மீறி விட்டது. படுக்க வேண்டும்.

வெங்க: உத்தரவு, மகாராஜா!

(ஹுக்காவுக்கு உதவும் சாமான்களை எல்லாம் ஒருபுற மாகச் சேர்க்கிறான். விஜய ராம ராஜா கட்டிலில் ஏறப் போகிறான். வெங்கண்ணா ஒரு பயங்கரக் கூச்சல் இடு கிறான். விஜய ராம ராஜா திடுக்கிட்டுப் பின்புறம் திரும்புகிறான்.)

விஜய: (பயத்துடன்) என்னடா, அது? பாப்பா ராவா? (உரக்க) யாரடா, அங்கே?

(சிப்பாய்கள் இருவர் ஆயுத பாணிகளாக நுழைகிறார்கள்.)

சிப்பாய்கள் : என்ன உத்தரவு? மகாராஜா!

விஜய : பொப்பிலிப் பாப்பா ராவ் வந்திருக்கிறான். பிடியுங்கள். இல்லை, இல்லை! கண்டவுடன் வெட்டிப் போடுங்கள்.

சிப்பாய் : உத்தரவுப்படியே.

(போகிறார்கள்.)

(திரையில், 'பிடி, பிடி' என்ற கூச்சல். சிப்பாய்களின் காலடிச் சத்தம். கத்தியின் 'டணார்' சத்தம் படிப்படியாகக் குறைந்து தேய்கிறது.)

விஜய : எந்தப் பக்கம் போனான், வெங்கண்ணா! பாப்பா ராவ்?

வெங்க : பாப்பா ராவ்காரு வரவே இல்லீங்க!

விஜய : (கோபத்துடன்) பின்னே! அந்த உன் பைத்தியக்காரக் கூச்சலுக்கு என்ன அர்த்தம்? பொப்பிலிச் சேனை எல்லாம் பிழைத்தெழுந்து வந்து தாக்கியதாக அல்லவா நினைத்துக் கொண்டேன்.

வெங்க : சூரன் பாப்பாராவ் அவர்கள் மட்டும் வந்திருந்தால்...அவ்வளவு தான். ஒரு பொப்பிலிச் சைனியம் மட்டும் அன்று, அதைப் போல் ஐந்து மடங்கு சைனியங்கள் தாக்கிய மாதிரிதான். இத்தனை நேரத்துக்கு நாம் இருவரும் மடிந்திருப்போம். ஆனால் ...அவர் இன்னும் வரவே இல்லை.

விஜய : ஆனால் நீ போட்ட கூச்சல்......?

வெங்க : தாங்கள் படுக்கிறேனென்று சொல்லி அந்தக் கட்டிலை நெருங்கும் போதே, என் உடம்பில் மயிர்க் குச்செறிந்தது. ஒரேயடியாய் மூச்சே நின்று விட்டது. அந்தக் குழப்பத்தில் ஒன்றுந் தொன்ற வில்லை. கத்தி விட்டேன்....தாங்கள் கட்டிலில் படுக்காதீர்கள். அதைத் தொடுவதே மிக ஆபத்து!

விஜய : (பெருங் கோபத்துடன்) பயங் கொள்ளி. உன் அசட்டுப் பயத்தால் கூடாரத்தையே ஒரு கலக்குக் கலக்கி விட்டாய்! இந்தச் செய்தியை மற்றச் சர்தார்கள் கேள்விப் பட்டால்...

(கோபத்தை அடக்க முடியாமல் தரையை ஓங்கிக் காலால் உதைக்கிருன். பக்கத்திலிருந்த ஓர் உறையிலி ருந்து கத்தியை உருவுகிருன்.)

உன் போன்ற பயந்தாங் கொள்ளிகள் உயிரோடு இருக்கவே கூடாது! உன்னே......

(புஸ்ஸீ துரையும் ஹைதரும் வருகிருர்கள்.)

புஸ்ஸீ : இதென்ன ரகளே ? கூடாரமெல்லாம் ஒரே யடியாய்ப்புரண்டு விட்டதே !

ஹைதர் : தங்கள் கூடாரத்துக்குப் பாப்பா ராவ் வந்தானும். நிஜந் தான ?

(விஜய ராம ராஜாவின் கோபம் அந்தக் கணமே மறைந்து விடுகிறது. கத்தியைக் கட்டிலின்மேல் நழுவ விடுகிருன். முகத்தில் தானகப் புன் சிரிப்பு வருகிறது)

விஜய : வெங்கண்ண பார்த்துக் கூச்சலிட்டான். அதற்கப்புறம் நடந்த தெல்லாம் உங்களுக்கே தெரிந்திருக்கும். வெங்கண்ண ! நீ இனி மேல் போய் ஓய்வெடுத்துக் கொள். உம் சீக்கிரம் !

வெங்க : (போகும்போது) இந்தக் கட்டில் மட்டும் ஜாக்கிரதை !

(போகிருன்.)

விஜய : இன்றைக் கேனே இப்படி விபரீதமாய் இருக்கிறது ? வெங் கண்ண மாறி விட்டதுதான் ஆச்சரியமாய் இருக்கிறது! இல்லா விட்டால்...அஞ்சா நெஞ்சம் படைத்த அவன்! ஒரு நாழிகை யாய் அர்த்த மற்ற பயத்தால் கஷ்டப்டுகிறதாவது ?

ஹைதர் : நிஜம்தான். வெங்கண்ண அஞ்சா நெஞ்சம் படைத்ததீரன்! அவனுடைய வீரதீரச் செயல்களே என் கண்ணலேயே கண் டேன். வேதாள மதில் வெங்கண்ண இல்லாவிட்டால் விழுந்தே இருக்காது ! கை வெட்டுப் பட்டாலும், தலே பிளந்தாலும் லட்சி யம் செய்யாமல் பின் வாங்காமல் கைக் குட்டையால், தானே கட்டுக் கட்டிக் கொண்டு மறுபடியும் போர் நடத்தினனே !

புஸ்ஸீ : இப்பொழுது என்ன நடந்தது ?

விஜய: வேறொன்றும் இல்லை...பொப்பிலிக் கோட்டைத் தீயைப் பார்த்தான். 'அது மல்லம்ம தேவியின் கோபம்; அது நம்மை எரித்து விடும்' என்கிறான். இந்தக் கட்டிலைப் பார்த்து விட்டு, இதில் படுத்தால் மல்லம்ம தேவியின் வயிற்றெரிச்சல் நம்மைத் தாக்கிப் பொசுக்கி விடும் என்கிறான். அவனுக்கு உற்சாக மூட்ட முயன்றால், 'பொப்பிலிப் புலி பாப்பா ராவ் இன்னும் உயிரோடே இருக்கிறான். நிச்சயமாக நமக்கு நன்மை இல்லை' என்கிறான்.

ஹைதர்: இந்தச் சண்டை, அவனுடைய மூளையைக் கொஞ்சம் கெடுத்திருக்கலாம். இவ்வளவு தீவிரமான யுத்தத்தை நான் இது வரையில் பார்த்ததே இல்லை.

விஜய: என்னமோ! எனக்குக் காரணம் தெரியவில்லை. கட்டிலேறப் போனேன். ஒரு வெறிக் கூச்சல் போட்டான். 'பாப்பா ராவ்' என்று கூட அதில் கேட்டது. வாசல் காப்பாளரும் பாராக் காரரும் அவன் கத்தலைக் கேட்டார்கள். அதற்கு மேல் நடந்த நிகழ்ச்சிகள் உங்களுக்குத் தெரிந்தது தானே!

புஸ்ஸீ: (யோசனையுடன்) வெங்கண்ணாவின் முகத்தில் மூளை கலங்கிய லட்சணம் ஒன்றும் எனக்குத் தெரிய வில்லை. அது இருக்கட்டும். பாப்பர ராவ் இப் போதைக்கு இங்கே வரவே இல்லை. ஒரு நாழி கைக்கு முன்பு தானே, இருபது மைல் தூரத்தில் அவன் இருப் பதாகச் செய்தி வந்தது.

ஹைதர்: பாப்பா ராவ் காருவின் விஷயத்தில் அப்படிச் சொல்லி விடா தீர்கள். சில சமயத்தில் அவருடைய வேகம் மின்னல் கொடியை யும் மிஞ்சி விடும்.

புஸ்ஸீ: பாப்பா ராவ் நிஜமாகவே சுத்த வீரனாய்த்தான் இருக்க வேண்டும். அவரைப் பற்றிக் கேட்கக் கேட்க அவரைப் பார்த்துப் பேசவேண்டு மென்ற ஆசை அதிகமாகிறது.

(ஒரு சர்தார் பிரவேசம்.)

சர்தார்: பாப்பா ராவ்...ராஜா...

புஸ்ஸீ: பாப்பா ராவ் காரு என்று சொல்லு. அவர் மாபெரும் வீரர். அவருக்கு மரியாதை கொடுக்காமல் பேசக் கூடாது.

சர்தார்: உத்தரவுப் படியே! எல்லாம் மகாராஜாவின் ஆணைப்படி தானே! பாப்பா ராவ் காரு தென்படவே இல்லை. ஜாடையே காணோம். ஓடிப் போயிருக்கலாம்.

ஹைதர்: பாப்பா ராவ் காரு ஓடிப்போக மாட்டார். என்றைக்கும் ஓடிப் போகக் கூடிய ஆசாமி அல்ல. அவர், வரவே இல்லை. எல்லாம் வெறுங் காப்ரா.

விஜய: பாராக் காரர்களைக் கண்ணில் எண்ணெய் விட்டுக் கொண்டு இன்று ராத்திரி கவனிக்கச் சொல்லு. அவசியம் ஏற்பட்டால் பாராவை இரட்டிக்கச் செய்.

சர்தார்: உத்தரவு; ஆண்டவர் ஆணைப்படியே!

புஸ்ஸீ: அப்படி யொன்றும் ஆபத்தைக் காணோம். ஆட்படை இன்னும் மூவாயிரத்துக்கு மேலே இருக்கிறது. அதற்குக் குறைவாய் இருந்தாலே போதும். சண்டையில் எல்லோரும் ரொம்பவும் சிரமப் பட்டுக் களைத்திருக்கிறார்கள். இஷ்டப்படி கூத்தடியுங்கள். போ!

விஜய: (திடுக்கிட்டு) இன்றிரவு...இந்த ஓய்வு அநுமதி கொடுப்பது எப்படி?...

புஸ்ஸீ: ஒன்றும் முழுகிப் போய்விடாது. சர்தார்! நீ போகலாம்

(சர்தார் போகிறான்.)

(திரையில் சந்தோஷக் கூச்சலும் சிரிப்பொலியும் மெல்ல மெல்லத் தேய்கிறது. சற்று நேரத்தில் எங்கும் நிசப்தம். காயம் பட்ட சிப்பாய்களின் முனகல் மட்டும் அங்கங்கே சற்று கேட்கிறது.)

புஸ்ஸீ: பாப்பா ராவ்! பாப்பா ராவ்! என்ன மாயப்பெயர்! இந்தப் பேரைக் கேட்டால் உலகமே நடுங்குகிறதே! எப்படிப் பட்ட அசகாய சூரரோ அவர்!

ஹைதர்: நிஜம்! நிஜம்! அவரைப் பார்த்தால் காட்டுப் புலி கூடப் பதுங்கி ஒதுங்கிப் போய்விடும்.

புஸ்ஸீ: அவருடைய உருவம் எப்படி இருக்குமோ! நீங்கள் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா?

விஜய: நான் பார்த்திருக்கிறேன்...ஆறுவருஷ மாயிற்று. ஆள், உருவத்தில் விசேஷமாய் ஒன்றும் சொல்ல முடியாது. சாதாரண மாகத்தான் இருப்பார்.

ஹைதர்: சே! சே! இரண்டு மூன்று மாதத்துக்கு முன்னால் பார்த்த வர்கள் சொல்லக் கேட்டேன். ரொம்பப், பயங்கரமாக இருப்பா ராம். கண்கள் எப்பொழுதும் நெருப்பைக் கக்குமாம். யாரா யிருந்தாலும் சரியே; தூக்கத்தின் நடுவில் தம்மை எழுப்பினால் அப்படியே வெட்டிப் போட்டு விடுவாராம். அதனாலே ரங்கா ராவ் துரை (ராஜா) கூட அவரைத் தூங்கும் போது எழுப்ப விட மாட்டாராம்!

புஸ்ஸீ: வீரனுக்குப் பயங்கரத் தோற்றம்தான் லட்சணமாய் இருக்க வேண்டும் என்பது இல்லை. சாதாரணமாகவே இருக்கலாம். அது கிடக்கட்டும். நாம் மூவரும் கோட்டை விழுந்தபின் சேரவே இல்லை. ஏதோ தற்செயலாகச் சந்தித்திருக்கிறோம். கொஞ்சம்... குஷியாய்...பொழுது போக்கினால்...

ஹைதர்: ஆம். இந்தயோசனை நன்றாயிருக்கிறது. ஆனால்...

புஸ்ஸீ: ஆனால்?

ஹைதர்: ஆனால் குஷியாய்ப் பொழுது போக்க இரண்டு பொருள் கள் முக்கியம். சாராயம்...பெண்....சாராயம் வேண்டிய அளவு கூடாரத்திலேயே கிடைக்கும். ஆனால்....பெண்....

விஜய: பூ! இது தானே! எங்கள் சிப்பாய்கள் கோட்டையில் இரண் டொரு தாசிப் பெண்களைக் கைது செய்திருக்கிறார்கள். அவர் களைத் தருவிப்போம்.

புஸ்ஸீ: விஜய ராமராஜாவே! நீ எத்தனை மேதாவி!

ஹைதர்: சந்தேகம் என்ன? பெண்கள் விஷயத்தில் இவரை மிஞ்சிய அறிவாளி இருக்க முடியாது! விஜய ராமராஜாவே! சீக்கிரம் தருவியுங்கள். தாமதம் ஏன்?

விஜய: (உரக்க) யாரடா, அங்கே?

(பதில் இல்லை. எங்கும் அமைதி. ராஜா வெளியே போய்ப் பார்த்து விட்டுச் சலிப்புடன் திரும்ப உள்ளே வருகிறான்)

மெய்க் காப்பாளர், வாயில் காவலர் எல்லோருமே கழுத்து வரையில் குடித்து விட்டு உடம்பை மறந்து தூங்கு கிறார்கள்.)

விஜய: என்ன உத்தரவு! புஸ்ஸீ துரை யவர்களின் உத்தரவு!

புஸ்ஸீ: காரணம் வேறு ஏதாவது இருக்கலாம். இவ்வளவு கடுமை யான யுத்தத்துக்குப் பின் படையெல்லாம் களைத்துப் போயிருக் காதா?

விஜய: சண்டைக் களைப்பே அல்ல இது. என் கூடாரக் காவலுக்காக வென்றே, இருநூறு சிப்பாய்களைச் சண்டையில் இறங்க விட வில்லை.

ஹைதர்: என்ன அமைதி! கூடாரம் பூராவிலும் ஓசை அடங்கி விட்டதே! பாரக் கூச்சல் கூடக் கேட்கவில்லை.

புஸ்ஸீ: உண்மைதான். இந்த அமைதி சுடுகாட்டின் அமைதியை யும் மீறி விட்டது. இதற்குத் துணை, கோட்டையில் ஓயாது எரியும் தீ வேறு!

விஜய: (எரியும் தீயைக் கவனிக்கிறான்) ஆம்! பொப்பிலித் தீ!...... இன்னும் அணையவில்லை.

ஹைதர்: நிச்சயம்! பாப்பா ராவ் ராஜா இன்னும் உயிரோடுதான் இருக்கிறார். அவர் இந்தச் சமயத்திலேயே...

(விஜயராம ராஜாவும் ஹைதரும் ஒருவர் முகத்தை ஒரு வர் பார்த்துக் கொள்ளுகிறார்கள்)

விஜய: ஆம்.

புஸ்ஸீ: ஏன் இந்தப் பைத்தியக்கார யோசனை! பாப்பாராவ் இப் பொழுது என்னமாய் வரமுடியும்? அந்தப் பெண்ணை வரவழை யுங்கள்! உல்லாசமாய்ச் சற்று நேரமாவது...

விஜய: என்ன முட்டாள்தனம்! மறந்தே போய்விட்டேன். (உரக்க) வெங்கண்ணா!

(வெங்கண்ணா வருகிறான்)

வெங்க: மகாராஜா! என்ன கட்டளை?

ஹைதர் : கோட்டையில் சிறை பிடித்த தாசிப் பெண்களையும்... சாராயத்தையும்...சீக்கிரம்...

வெங்க : தாசிப் பெண்களா ? மிகக் கஷ்டப்பட்டு ஒரு தாசிப் பெண்ணை மட்டும் கைது செய்தேன். மற்றவர்கள் எல்லோரும் சண்டையிலோ அல்லது தீக்குண்டத்திலோ உயிரை விட்டு விட்டார்கள்.

ஹைதர் : சரி ; அந்த ஒருத்தியைத்தான்...சாராயம்...சீக்கிரம் !

விஜய : வெங்கண்ணு ! மற்றெரு முக்கியமான விஷயம். இன்றிரவு பாரா, கவனமாகக் கொடுக்கக் காணும். பாராச் சேவகர்களை எச்சரித்துச் சரியாகக் காவல் செய்யவேண்டும்.

வெங்க : அப்படியே !

(போகிருன்)

ஹைதர் : உண்மை. உண்மை. கெட்டதை எண்ணித்தான் நல்லதை எண்ணவேண்டும் !

(ஒருகணம் நிசப்தம். புஸ்ஸீ, மல்லம்ம தேவியின் கட்டிலை ஆராய்கிருன்)

புஸ்ஸீ : இந்தக் கட்டிலை எத்தனை அழகாய் இழைத்திருக்கிருர்கள் ! இதன் ஒரு சட்டம் மட்டுமே ஐரோப்பாவில் உள்ள ஒரு ராஜ்யத்தின் மதிப்பைப் பெறும்.

விஜய : பின்னே, அவர்கள் கப்பங் கட்டாமல் ஏமாற்றிய பணமெல்லாம் எப்படிச் செலவாயின என்கிறீர்கள் ?

ஹைதர் : அதுவன்று விஷயம். இதில் இருக்கும் சிற்ப வேலைப்பாடு அருமையானது.

புஸ்ஸீ : (இன்னும் சரியாய்ப் பார்வையிடக் கட்டிலை நெருங்குகிஞன்) சந்தேகம் இல்லாமல் இது மிக அழகான பொருள். (தொடப் போய்ப் பின் வாங்குகிருன்) இதை நான் தொடமாட்டேன். வெங்கண்ணு சொல்லுகிறமாதிரி மல்லம்ம தேவியின் சாபம் பிடித்துக் கொள்ளும்.

(பிரவேசம். வெங்கண்ணு, பின்னுல் தாசிப் பெண். சாராயப்புட்டி, தம்ளர்களைத் தட்டில் வைத்துத் தலையில்

எடுத்துக்கொண்டு ஒரு சிப்பாய். தாசிப்பெண் கவலையுடன் காணப்படுகிருள். வயது 16, அல்லது 17 இருக்கும்)

வெங்க: உண்மை. அதைத் தொடுவது மகா அபாயம். மல்லம்ம தேவியின் சாபம் நிச்சயமாகத் தொடரும்.

(சிப்பாய் சாராயத்தையும் தம்ளர்களையும் விரிப்பின் மேல் வைத்துவிட்டு வெளியே போகிருன்)

வெங்க: பிரபுவின் உத்தரவுப்படி, தாசிப் பெண்ணை அழைத்து வந்து விட்டேன். அதோ சாராயம்.

விஜய: பாராச் சங்கதி!

வெங்க: மகாராஜாவின் உத்தரவை என்றைக்காவது மறப்பேஞ! தங்கள் கூடாரத்தின் முன்புகூடப் புதிய பாராக்காரர்களை அமர்த்தி யிருக்கிறேன்.

புஸ்ஸீ: சரி, போ!

(தாசிப்பெண் ஒதுங்கி, கூடாரத்தின் ஓர் ஓரமாய் நின்றுகொண்டு அவர்களை ஆராய்கிருள்)

புஸ்ஸீ: ஹைதர்! ஒரு கிளாஸ் நிரப்பிக் கொடு, முதலில்! உதடு வறண்டுபோகிறது.

(போய்த் திண்டில் சாய்ந்துகொண்டு, திவாசின்மேல் உட்கார்ந்து கொள்ளுகிருன். ஹைதரும் விஜய ராம ராஜுவும் புஸ்ஸீயின் இருபுறத்திலும் உட்கார்ந்து கொள்ளுகிருர்கள். ஹைதர் சாராயத்தைத் தம்ளர்களில் ஊற்றிக் கொடுக்கிருன். எல்லோரும் குடிக்கிருர்கள்)

ஹைதர்: என்ன மஜாவாய் இருக்கிறது. இந்தச் சாராயம்! இவ்வளவு ருசியான சாராயத்தை நான் குடித்ததே இல்லை.

விஜய: நிஜந்தான்! இது அசல் 'பராஸ்' தேசத்து உயர்ந்த ரகம். புஸ்ஸீ துரைக்காகச் சொல்லித் தருவித்தேன்.

(இப்பொழுதே எல்லோருக்கும் மயக்கம் கொஞ்சம் ஏறுகிறது)

ஹைதர்: இதைவிட ருசியான வஸ்து ஒன்றுதான் இருக்கிறது.

(தாசிப் பெண்ணைப் பார்க்கிருன்)

என்ன அழகு! என்ன அழகு! மேரே புல் புல்! இப்படி வா!

(தன் பக்கத்தில் உட்காரச் சொல்லுகிருன். அவள் பேசாமல் நிற்கிருள்)

புஸ்ஸீ: உல்லாசமாய் இருக்கத்தான் உன்னை வரவழைத்தேன், நீ முகத்தைத் தூக்கிக்கொண்டு நின்ருல் என்ன பிரயோசனம்?

விஜய: தன் சொந்தக்காரர்கள் எல்லோரும் மேலுலகம் போய் விட்டார்களே, என்ற வருத்தமோ, என்னமோ!

தாசி: வருத்தம் இருக்காதா? என் கூட்டாளிகளெல்லாம் இந்நேரத்துக்கு வீர சுவர்க்கத்தில் நாட்டியம் செய்து கொண்டிருப்பார்கள். என் தலையெழுத்து இப்படி முடிந்தது. பிழைத்தேன்—அடிமையானேன்!

ஹைதர்: அடிமையா! நீ அடிமையே அல்ல. உன்னை மகாராணியாக்குகிருேம். மூன்று பேர் இருக்கிருேம். மூன்று ராஜ்யங்களை ஆண்டு கொண்டு திரௌபதியைவிட அதிக போகத்தை அநுபவிப்பாய்!

(எல்லோருக்கும் நல்ல மயக்கம் ஏறி விடுகிறது.)

விஜய: இன்னும் ஏன் தாமதம்? வா!... பக்கத்தில் உட்கார்ந்து சுகமாக ஒரு நல்ல பாட்டுப் பாடு.

புஸ்ஸீ: பாட்டே வேண்டாம். ஆட்டம்! ஆட்டம்! நாட்டியம் செய். நிருத்தியம்! இந்திய நிருத்தியம் பார்க்க வேண்டுமென்று எனக்கு வெகு காலமாக ஆசை!

ஹைதர்: ஆம்! உன்னோடு சேர்ந்து நானும் ஆடுகிறேன்.

(எழுந்திருந்து நிற்கிருன்.)

தாசி: நான் ஆடமாட்டேன். பாடவும் மாட்டேன். என் நாட்டியம் ஒன்றுதான். அது பிரளய நாட்டியம்.

ஹைதர்: என்ன உன் வீருப்பு! உங்கள் ஆத்தா வீடென்று நினைத்தாயா? சொன்னத்தைக் கேட்கா விட்டால்???

தாசி: என்ன? என்னைப் பயமுறுத்துகிறீர்களா? என் ஊர் பொப்பிலி! கடைசியாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்! என்னைக் கிழித்தாலும் சரி! நான் ஆடவும் மாட்டேன், பாடவும் மாட்டேன்.

புஸ்ஸீ: பெண்களை நாங்கள் இம்சிக்கும் வழி வேறு. கத்தி, கட்டாரிகளைச் சண்டை முனையில் வீரர்களின் மேல் எறிவோம். பெண்களைக் கட்டி முத்தமிட்டே இம்சிப்போம்.

(சிரிக்கிறான். ஹைதரும் விஜய ராம ராஜாவும் சேர்ந்து சிரிக்கிறார்கள்.)

எனக்காக... ஒரு...

தாசி: உனக்காக அல்ல. உன்னைப் படைத்த தெய்வம் வந்தாலும் சரி...

ஹைதர்: இவள் கொழுப்பை அடக்கவேண்டும்.

(ஆடி விழுந்துகொண்டு வந்து அவளைப் பலவந்தமாக முத்தமிடப் போகிறான். அவன் முகத்தில் ஓர் உதை கொடுத்துத் தள்ளிவிட்டு அவள் ஓடி விடுகிறாள். ஹைதர் கீழே விழுகிறான். புஸ்ஸீயும் விஜய ராம ராஜாவும் சிரிக்கிறார்கள்.)

புஸ்ஸீ: என்ன தைரியம்! பொப்பிலிப் பெண் என்பதை நிரூபித்து விட்டாளே.

ஹைதர்: முதலிலிருந்து நான்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேனே! இவர்கள் எல்லோரும் மண்டைக் கர்வம் பிடித்தவர்கள்!

(திரையில் தாசிப் பெண்ணின் கூக்குரல்.)

புஸ்ஸீ: என்ன அது?

(விஜய ராம ராஜா வெளியே போய்ப் பார்த்து வருகிறான்.)

விஜய: அந்தத் தாசிப் பெண்ணின் கூக்குரல்தான். செத்துக் கிடந்த ஒரு சிப்பாயின் கத்தியை எடுத்துக் குத்திக் கொண்டு செத்து விழுந்திருக்கிறாள்.

புஸ்ஸீ : என்ன ரோஷம்! வாஸ்தவமாய் இவை எல்லாமே பொப்பிலித் தீதான்.

(மூவரும் கோட்டைத் தீயைப் பார்க்கிருர்கள்.)

விஜய : பொப்பிலித் தீ. அணையவில்லை இன்னும்!

ஹைதர் : ஆம். பாப்பா ராவ் காரு இன்னும் உயிரோடிருக்கிருர்.

விஜய : இந்தக் கூக்குரல் என்ன ?

புஸ்ஸீ : தாசிப் பெண்ணின் கூக்குரலோ...

விஜய : இது; அவள் குரல் அன்று.

ஹைதர் : இந்தக் கூக்குரல் இந்த மூலையிலிருந்து வந்தது.

(அருகில் மற்ருெரு அலறல். "செத்தேன்! புலி!")

விஜய : புலி !

புஸ்ஸீ : புலியாவது ! புலி எப்படி வந்தது ?

ஹைதர் : அவன் செத்துப் போய் விட்டான்போல் இருக்கிறது !

விஜய : பாரா இன்று சரியாக நடக்கவில்லை. எல்லாம் மயக்கம். எங்கே பார்த்தாலும் மயக்கம்.

ஹைதர் : அப்படிப் போய்ப் பார்த்து வருவோமா ?

விஜய : நீ பார்த்து விட்டுவா !

புஸ்ஸீ : நான் பார்த்து விட்டு வருகிறேன்.

(வெளியே போகிருன்.)

விஜய : புலி இப்பொழுது வந்துவிட்டால் என்ன செய்கிறது ? கையில் கத்தியோடு தயாராய் இருப்போம்.

(பக்கத்தில் இருந்த கத்தியொன்றைக் கையில் எடுத்துக் கொள்ளுகிருன்.)

ஹைதர் : சத்தமே இல்லையே ! என்ன அமைதி ! அது புலியல்லவோ, என்னமோ !

விஜய : வேறு எதுவாய் இருக்கும் ?

(பிரவேசம் புஸ்ஸீ.)

புஸ்ஸீ : புலியும் இல்லை ; கிலியும் இல்லை.

ஹைதர் : நான் சொல்லிக் கொண்டேதான் இருக்கிறேன். அது புலியே அன்று.

புஸ்ஸீ : இல்லா விட்டால் வேறு என்னவாம் ?

ஹைதர் : ஏதாவது பிரம்ம ராட்சஸனாக இருக்கலாம்.

விஜய : இருக்காலம். பிணங்களைத் தின்ன வரும்.

புஸ்ஸீ : என்ன இது, ஏன் இந்தப் பைத்தியக்கார எண்ணம் ? ஹைதர் ! நம் கூடாரத்துக்குப் போவோம். புறப்படு. தூக்கம் வருகிறது.

விஜய : இந்த நடு நிசியில் எங்கே போவீர்கள், இங்கேயே தூங்குங்கள்.

புஸ்ஸீ: இங்கே நான் படுக்க மாட்டேன். இந்தக் கட்டிலின் பக்கத்தில் இருப்பதே எனக்குப் பயமாக இருக்கிறது. விஜய ராம ராஜா, நீ இந்தக் கட்டிலைத் தருவித்து, உன் கூடாரத்தில் ஏன் வைத்துக் கொண்டாய் ? நாளைக்குக் காலையிலேயே இதை நெருப்பை வைத்துப் பொசுக்கு.

ஹைதர் : நாளை வரைக்கும் பிழைத்திருந்தால், அப்படியே !

விஜய : இதென்ன பேச்சு ! சுபமாக......

ஹைதர் : என்னமோ ! பாப்பா ராவு காரு வந்தால்......

(கூடாரத்துக்கு வெளியே ஏதோ விழுந்த ஓசை. முனகல். முவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ளுகிறார்கள். விஜய ராம ராஜா, முட்ட முட்டக் குடித்ததால் ஆடி விழுகிறான்.)

புஸ்ஸீ : இனி நான் தங்க மாட்டேன். இங்கே, இன்றிரவு ஏதோ பயங்கரச் சம்பவம் நடக்கப் போகிறது. வா, ஹைதர் !

விஜய: உங்களை அது வரைக்கும் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன்.

(மூவரும் போகிறார்கள்)

(பாப்பா ராவும் விஜய ராம ராஜாவின் சிப்பந்திகளில் ஒருவனாய் இருந்த கங்கண்ணாவும் வருகிறார்கள்.)

பாப்பா ராவ்: துரோகம் செய்தாயானால்...

கங்கண்ணா: துரையவர்களுக்குத் துரோகம் செய்ய என் ஜன்மத்திலும் துணிய மாட்டேன். இதோ விஜய ராம ராஜாவின் கூடாரத்துக்கே வந்து விட்டோம்.

பாப்பா: ஆனால் விஜய ராமன் எங்கே?

கங்க: எங்கே யாவது போயிருப்பார். பாருங்கள், இதோ மல்லம்ம தேவியின் கட்டில் கூட இருக்கிறது!

பாப்பா: (கட்டிலைக் கூர்ந்து கவனிக்கிறான்.) இதில் படுக்கப் போவதாகவா சபதம் செய்திருக்கிறான்? இதன் மேல் ஏறுவது சிதையில் ஏறுவது என்பது அவனுக்குத் தெரிய வில்லை.

(ஜன்னல் வழியாக எரியும் தீயைப் பார்க்கிறான்.)

என்ன இது? அந்தத் தீப் பிழம்பு! ஆகாயத்தை எட்டுகின்றதே! மறுபடியும் சுடர் விடுகிறது. உலகத்தையே எரித்து விடுமா, என்ன?

கங்க: அது அழிந்த பொப்பிலி. பொப்பிலிச் சிதை! அதைக் கண்டு மகிழவே விஜய ராம ராஜா, இங்கே கூடாரம் அடிக்கச் சொன்னார்.

பாப்பா: மூடன். பொப்பிலித்தீயை மூட்டினால் அது தன்னையே பொசுக்கிவிடும் என்பதைத் தெரிந்து கொள்ள வில்லை.

(கங்கண்ணாவின் பக்கம் திரும்புகிறான்.)

என் வரவை விஜய ராமனுக்குத் தெரிவிக்க வேண்டும். துரோகம்........

கங்க: கழுத்தை அறுத்தாலும் தங்களுக்குத் துரோகம் செய்ய மாட்டேன். தங்கள் வீர, தீர, பராக்கிரமங்களை என் கண்ணாரக்

கண்டேன். தங்களைப் பூஜை செய்ய வேண்டுமென்று கூட ஆசை உண்டாகிறது. துரையே, கேளுங்கள். அந்தக் காலத்தில் யாருக்கு அடிமையாக இருந்திருந்தாலும் இந்த விநாடியிலிருந்து தங்கள் அடிமை !

பாப்பா : இந்த மாறுதலுக்கு என்ன காரணம் ?

கங்க : தங்களுக்குள் அடங்கிய சக்தி, உங்கள் முகத்தில் ஒளி விடும் தேஜஸ், இவைதான். என்னைத் தங்கள் அடிமையாக ஏற்றுக் கொள்ளுங்கள். தங்கள் கையாலோ, தங்களுடன் சேர்ந்தோ சாவை மகாப் பிரசாதமாக வரவேற்கிறேன்.

(வெளியே யாரோ வரும் ஓசை.)

பாப்பா : அதோ வருவது விஜய ராமன் என்று நினைக்கிறேன். இந்த மூலையில் நிழலில் நான் இருக்கிறேன். ஆ ! மறந்து போய் விட்டேன். உன் பெயர் என்ன ?

கங்க : கங்கா ராமன் என்பார்கள்.

பாப்பா : சுலபமாய்க் கங்கண்ணு என்று கூப்பிடுகிறேன். கங்கண்ணு ! நீ நன்ருய் நடிக்க வேண்டும்.

(நிழலில் போய் நின்று கொள்ளுகிருன்.)

(பிரவேசம். விஜய ராம ராஜா. சாராய மயக்கத்தால் தள்ளாடிக் கொண்டு வருகிருன். கங்கண்ணுவைப் பார்க்கிருன்.)

விஜய : யார் நீ ?

கங்க : என்பெயர் கங்கண்ணு. முன்பு தங்கள் சிப்பாய்க் கூட்டத்தில் ஒருவனுயிருந்தேன்.

விஜய : இப்பொழுது ?....

கங்க : இப்பொழுது பாப்பா ராவ் துரை அவர்களின் அடிமை !

விஜய : நன்ருய்க் குடித்து விட்டு வாயில் வந்ததை உளறுகிருயா, தலை எகிறிப் போய் விடும், ஜாக்கிரதை ! எதற்காக வடா இங்கே வந்தாய் ?

கங்க: பாப்பா ராவ் துரையவர்கள் விஜயம் செய்திருக்கிருர்கள்.

விஜய: பாப்பா ராவா வந்திருக்கிருன்?

(மயக்கம் சற்றுத் தெளிகிறது. கங்கண்ணுவின் இரண்டு தோள்களையும் தன் கைகளால் பிடித்து உலுக்குகிருன். முகத்தருகே முகத்தை வைத்துப் பேசுகிருன்)

நிச்சயமாகப் பாப்பா ராவ் வரவில்லை, பாப்பா ராவ் வரவே இல்லை. சொல்லு! உண்மையைச் சொல்லு! பாப்பா ராவ் வரவில்லை.

கங்க: என் வாக்குப் பொய்யென்று நினைத்தால், சாட்சி கூடாரத்துக்கு வெளியிலேயே இருக்கிறது, பாருங்கள்.

விஜய: என்ன? வெளியில் இருக்கிருனு? பாராச் சேவர்களைக் கூப்பிடுகிறேன். (உரக்க) யாரடா, அங்கே?

(பதில் இல்லை.)

என்ன? பாராக் காரர்கள் எங்கே போனுர்கள்.

கங்க: பாப்பா ராவ் துரை அனுப்பிய வழியில் போனுர்கள்.

விஜய: என்ன விபரீதம்! கூடாரம் பூராவும் இன்று ராத்திரி, பாப்பா ராவின் ஆணைக்கு அடங்கி விட்டதா?

(வெளியே போகிருன். மறுபடியும் மிகுந்த பயத்துடன் உள்ளே நுழைகிருன். அவன் முகமெல்லாம் வேர்த்து வழிகிறது. மயக்கம் பூராவும் விடுகிறது.)

கங்க: பார்த்தீர்களா?

விஜய: பார்த்தேன்; பார்த்தேன்! இரண்டு பாராக்காரர்களும் வெட்டுப் பட்டுக் கிடக்கிருர்கள். கங்கண்ணு! கங்கண்ணு! நீ தான் எனக்கு அடைக்கலம். என்னைக் காப்பாற்று. உன்னைச் சர்தாராக, அன்று சிற்றரசனுகச் செய்கிறேன்.

(கட்டிலைப் பிடித்துக் கொள்ளப் பார்க்கிருன்.)

(பாப்பா ராவின் குரல் கம்பீரமாக ஒலிக்கிறது.)

பாப்பா : அந்தக் கட்டிலைத் தொட வேண்டாம்.

(பாப்பா ராவ் வெளிச்சத்துக்கு வருகிறான்.)

கங்கண்ணா! கூடாரத்துக்கு வெளியே போய்க் காவல் இரு. இவனோடு கொஞ்சம் பேச வேண்டும்.

(கங்கண்ணா வெளியே போகிறான்.)

விஜய : பாப்பா ராவா? நிஜமாகவா......பாப்பா ராவ் தான்! எங்கிருந்து?

பாப்பா : நீ எழுப்பிய தீயிலிருந்து வந்தேன். விஜய ராமா! அந்தத் தீயைப்பார். அதன் நாக்குகள் ஆகாயத்துக்குத் தாவுகின்றன. அவற்றின் பிடியில் அகப்பட்ட மனிதனுக்கு வாழ்க்கையில் ஆசை இருக்காது. விட்டிலைப் போல் பொசுங்கிப் போவான். விஜய ராமா! என் உடம்பு இப்பொழுது அந்தத் தீயைவிட ஆயிரம் மடங்கு சூடாக இருக்கிறது. உன்னை எரித்து விடுவேன்!

(விஜய ராம ராஜா நாலுபுறமும் பார்க்கிறான்)

விஜய ராமா! உன் எண்ணம் எனக்குத் தெரியும். சிப்பந்திகளைக் கூப்பிடப் போகிறாயா? ஹஹ் ஹஹ் ஹஹ் ஹா! உனக்கு இனிமேல் சிப்பந்தியே இல்லை. நாம் இருவர் மட்டுமே நேருக்கு நேர் நிற்கிறோம். நீ செய்த தீச் செயல்களுக்காக—பழி—அல்ல, அல்ல, நீசனே! தண்டனை கொடுக்கப் போகிறேன்.

(விஜய ராம ராஜாவின் சட்டையின் கழுத்துப் பட்டையைப் பிடித்து ஆட்டுகிறான்.)

இந்தக் கட்டில் உன் கூடாரத்தில் இருக்கிறது. இதில் படுத்தாயா?

(பதில் இல்லை.)

பதில் சொல்லு! படுத்தாயா, இல்லையா?

விஜய : இல்.........லை.

பாப்பா : கொஞ்சம் மேல். உன் அசுத்தமான உடலால் இதை அசுத்தப் படுத்தி யிருந்தால்...உன்னை எப்படித் தண்டிப்பதென்றே தீர்ப்புச் செய்ய முடியாது.

(கைப் பிடியைத் தளர்த்துகிருன். விஜய ராம ராஜா கீழே விழுகிருன். பாப்பா ராவ் ஓரடி பின்னுக்குச் சென்று விஜய ராமனை ஊடுருவிப் பார்த்தபடி பேசுகிருன்.)

நீ செய்த துரோகத்துக்கு உனக்கு என்ன தண்டனை விதிப் தென்றே எனக்குப் புரிய வில்லை. உன்னைச் சித்திர வதை செய்ய வேண்டும். துண்டு துண்டாகச் செதுக்க வேண்டும்.

விஜய : (தடாலென்று வந்து பாப்பா ராவின் கால்கள் இரண்டையும் கட்டிக் கொண்டு,) பாப்பா ராவ் காரு! அடைக்கலம், அடைக் கலம் ! எனக்கு உயிர்ப் பிச்சை கொடுங்கள் !

பாப்பா : (காலால் விஜய ராமனை எத்தி விடுகிருன்.) புலிக் குட்டிகளைக் கொன்று விட்டுப் புலியைச் சரணடைகின்ற கல் நெஞ்சன்— தூர்த்தன்—நீ ஒருவன் தான்.

(விஜய ராம ராஜாவின் கழுத்துப் பட்டையைப் பிடித்து ஜன்னலருகே இழுத்துக் கொண்டு போகிருன்.)

விஜய ராமா! பார்த்தாயா! அந்தத் தீக்கொழுந்துகளை! அவற்றைக் கண்டு மகிழ நினைத்தாயல்லவா ? யமனைப் பார்த்துச் சந்தோ ஷப்பட முடியுமா ? அஹ்ஹஹ்ஹஹ்ஹா ! மடையா ! அது பொப்பிலிச் சிதை அன்று ; வீர பொப்பிலியின் ஆக்கிரகம். அந்தத் தீச்சுடரில் பொப்பிலி வீரர்கள் எல்லோரும் நாட்டியம் செய்கிருர்கள். பார் ! மல்லம்ம தேவி, ரங்காராவ், வெங்களராவ் எல்லோரும் நம்மையே பார்க்கிருர்கள். விஜய ராமா ! அவர் களுடைய கோபம் குளிர்வதற்கு உன் ரத்தம் ஓடவேண்டும்!

விஜயராமா! ஒரு மணி நேரத்துக்கு முன்னுல்தான் அவர்கள் எனக்கு முன்தோன்றி, உன் கூடாரத்துக்கு வழி காட்டினுர்கள். 'மல்லம்ம தேவியின் கட்டிலில் படுப்பேன்' என்று செய்த சபதத்தை நிறைவேற்றி விடலாமென்று மனப்பால் குடித்தாய் அல்லவா ?

(கோபத்தை அடக்க முடியாமல் விஜய ராம ராஜா வைத் தரையில் எறிகிருன். விஜய ராம ராஜா மூன்று நாலு கஜ தூரத்தில் போய் விழுகிருன். பாப்பா ராவ் தன் இடுப்பில் இருந்த கத்தியை உருவி அதைப் பார்க்கிருன்.)

பாவி! உன் அசுத்த ரத்தத்தை என் கத்திகூடச் சகிக்காதாம்! தலையிலிருந்து கால் வரைக்கும் விஷ மயமான உன் ரத்தத்தை நாயும் சீண்டாது. உன் கத்தியாலேயே, உன்னை...

(தன் கத்தியை உறையில் வைக்கிறான். கூடாரமெல்லாம் கண்ணோட்டம் விடுகிறான். கட்டிலின்மேல் இருந்த கத்தியை உறையிலிருந்து உருவுகிறான்.)

விஜய: பாப்பா ராவ் காரு! எனக்கு உயிர்ப் பிச்சை கொடுங்கள். என் ராஜ்யத்தில் பாதியை...... பொப்பிலியோடு சேர்த்து உங்களுக்குக் காணிக்கையாகச் செலுத்துகிறேன்.

(பாப்பா ராவ் கேலிச் சிரிப்புச் சிரிக்கிறான்.)

பாப்பா: விஜய ராமா! சாகுந் தறுவாயில்கூட ராஜ தந்திரிகளில் முதலிடம் பெற்று விட்டாய்! எனக்கு... உன் ராஜ்யத்தில் பாதியும், பொப்பிலியும்! அஹ்ஹஹ்ஹஹ்ஹஹ்ஹா! எத்தனை மேதாவி! பொப்பிலியைக் கொடுக்கிறாயா? (கோபம் அதிகரிக்கிறது) பொப்பிலியையா கொடுக்கிறாய்? உன்னை இனி ஒரு கணமும் உயிரோடு வைக்க மாட்டேன். மல்லம்ம தேவியின் கட்டிலுக்கு உன்னைப் பலி கொடுக்கப் போகிறேன். உன் குற்றங்களுக்கெல்லாம், சுவர்க்கத்துக்குப் போய் அந்தத் தாயிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்.

(விஜய ராம ராஜாவைக் காலாலேயே கட்டிலின் பக்கமாகத் தள்ளுகிறான். அவன் கட்டிலின்மேல் மோதிக் கொண்டு கட்டில் காலைக் கட்டிப் பிடித்துக் கொள்ளுகிறான்.)

விஜய: தாயே, மல்லம்மா! நீதான் எனக்கு இனிமேல்...

(வாக்கியம் முடியவில்லை. பாப்பா ராவ் விஜய ராம ராஜாவைக் குத்துகிறான். விஜய ராம ராஜா கட்டிலை அணைத்தபடியே உயிரை விடுகிறான்.

பாப்பா ராவ் பொப்பிலித் தீக்கு அந்தக் கத்தியை உயர்த்திக் காண்பிக்கிறான். அதிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருக்கிறது.)

பாப்பா : ரங்காராயா ! வெங்களராயா ! மல்லம்ம தேவீ ! நீங்கள் எல்லோரும் திருப்தி யடைந்தீர்களா ? தங்கள் சேவகனுக்கு வேறு ஏதாவது கட்டளை உண்டா ?

(தீ தணிந்து போகிறது. சிவந்த ஒளிமட்டும் மிஞ்சு கிறது.)

திருப்தி யடைந்து விட்டார்கள்... என் வேலை முடிந்தது...

(கத்தியை நழுவ விடுகிருன்.)

ஆனல்... ஆனல்... எனக்கேனே திருப்தி இல்லை. இவன் ஒழிந்தான். ஆனல்... பொப்பிலிக்கு உயிர் வரவில்லை.

(விஜய ராம ராஜாவின் உடலைப் பார்க்கிருன். கூடாரம் பூராவும் பார்த்துப் பின்பு சாராயப் புட்டிகளைக் கால்களா லேயே நொறுக்கி விடுகிருன். தரையெல்லாம் சாராயம் சிவப்பாக ஓடுகிறது.)

கங்கண்ணு ! கங்கண்ணு !

(கங்கண்ணு வருகிருன்.)

கங்க : என்ன உத்தரவு, பிரபுவே !

பாப்பா : கங்கண்ணு ! விஜய ராமன் மடிந்தான். துரோகத்துக்குப் பழி வாங்கியாயிற்று. பொப்பிலித் தீ, தணிந்தது. ஆனல், ஆனல்—கங்கண்ணு ! என் மனசில் குழப்பம் தீரவில்லை. எனக்குத் திருப்தி இல்லை. என் கத்திக்கு—

(தன் கத்தியை உறையிலிருந்து எடுத்துப் பார்க் கிருன்.)

கங்க : பிரபுவே ! தாங்கள் உத்தரவு கொடுத்தால் கூடாரம் பூரா வையும் சித்திர வதை செய்கிறேன். படை எல்லாம் களைத்துச் சாராய போதையில் உருளுகிறது. மூவாயிரத்துக்கு இருக்கும்.

பாப்பா : வேண்டாம், கங்கண்ணு ! வேண்டாம் ! அது ராட்சஸச் செயல். படையில் வேலை செய்யும் ஆட்கள் செய்த பாவம் என்ன ? சம்பளத்துக்கு உழைக்கும் அடிமைகள்.

(தூரத்தில் கூச்சல்)

அது என்ன ?

(இருவரும் கவனித்துக் கேட்கிருர்கள்.

கூச்சல் "பாராக்காரர்களை யாரோ குத்தி விட்டார்கள். தேடுங்கள்"

சிப்பாய்கள் அங்கும் இங்கும் ஓடும் சப்தம்)

நான் குத்திவிட்ட பாரா ஜவான்களைப் பார்த்து விட்டார்கள். சற்று நேரத்தில் இங்கேயே வந்து விடுவார்கள். கங்கண்ணு! நான் ரொம்பக் களைத்து விட்டேன். சற்றுக் கண்ணை மூடு கிறேன். கூடாரத்துக்குக் காவல் இரு. யாரையும் உள்ளே விடாதே. உன் சக்திக்கு மீறி விட்டால் என்னை எழுப்பிவிடு.

கங்க: அப்படியே!

(போக யத்தனிக்கிருன்.)

பாப்பா: கங்கண்ணு! அந்த விளக்கை அணைத்து விட்டுப்போ. என் கண்ணைக் குத்துகிறது. அது விஜய ராமனுடைய விளக் கல்லவா?

கங்க: அப்படியே.

(விளக்கை அணைக்கிருன். கூடாரம் முழுவதும் சிவந்து மங்கிய ஒளி நிரம்புகிறது. பாப்பா ராவ், நிழலுக்குப் போய்க் கட்டிலில் சாய்ந்தபடி தூங்குகிருன். கங்கண்ணு வெளியே போகிருன்.)

(அரை நிமிஷம் அமைதி. சிப்பாய்களின் பேச்சுக்குரல் நெருங்கி வருகிறது.)

(திரையில்)

கங்க: துரையவர்கள் தூங்குகிருர்கள். உள்ளே யாரும் போகக் கூடாது.

ஹைதர்: நான் யாரென்று உனக்குத் தெரியுமா?

கங்க: தெரியுமே! ஹைதர். ஆனல் இப்பொழுது நைஜாம் சர்க்கார் வந்தாலும்—

(சண்டை, இருவர், மூவர் விழுந்த ஓசை.)

கங்க: அப்பா! செத்தேன். துரையே! நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்.

(பாப்பா ராவ் லேசாக அசைகிருன். மறுபடியும் தூக்கம்.

பிரவேசம். ஹைதரும், புஸ்ஸீயும்.)

ஹைதர்: புத்தியற்ற ஜவாஜை நியமித்ததற்காக விஜய ராம ராஜாவைத் தண்டிக்க வேண்டும். என் படையைச் சேர்ந்த மூன்று பேரைக் குத்தி விட்டான்.

புஸ்ஸீ: இந்தச் சிவப்பு வெளிச்சம் ஏது? பொப்பிலித் தீயின் ஒளியெல்லாம் இங்கேயே வந்து விட்டதா?

ஹைதர்: இந்தக் கூடாரம் எப்பொழுதும் இவ்வளவு பயங்கரமாய் இருக்காதே! விஜய ராம ராஜா! விஜய...

(புஸ்ஸீ கட்டிலின் காலைத் தழுவிக் கிடக்கும் விஜய ராம ராஜாவின் உடலைப் பார்த்து விடுகிருன்.)

புஸ்ஸீ: இப்படி நெஞ்சு வரையில் குடிப்பது எத்தனை தவறு? இங்கே ஏன் தூங்கி விட்டான்.

(போய்ப் பிணத்தை அசைக்கிருன்.)

ஹைதர்! ஹைதர்! நீ இனிமேல் விஜய ராம ராஜாவைத் தண்டிக்க முடியாது. இந்தக் கட்டிலே அவனைப் பலி வாங்கி விட்டது.

(பாப்பா ராவ் விழித்துக் கொள்ளுகிருன்.)

ஹைதர்: அப்படியானல், இதென்ன குழப்பம்? சேவகன் துரை தூங்குகிருர் என்று சொல்லி மூன்று பேரைக் குத்தி விட்டானே! அவனைப் பிணமாக்கியபின் அல்லவா கூடாரத்தில் நுழைய முடிந்தது? இதுதான ராஜாவின் தூக்கம்! அப்பப்பா! என்ன கோரம்! ராஜாவை அவன் ஏதாவது...

பாப்பா: (முன் வந்து) விஜய ராம ராஜாவைத் தண்டித்தது நான். கங்கண்ண எவ்வளவு நம்பிக்கையான சேவகன்! கங்கண்ண! வீரச் சுவர்க்கத்தில் இருந்து கொண்டு சிரிக்கிருயா? சீக்கிரமாக நானும் உன்னுடன் வந்து சேர்ந்து கொள்ளுகிறேன்.

(ஹைதருக்குத் தூக்கி வாரிப் போடுகிறது.)

புஸ்ஸீ: நீங்கள் யார்?

பாப்பா: நான் பாப்பா ராவ்.

ஹைதர் : பொப்பிலித் தீ!

பாப்பா : அல்ல! அல்ல! துரோகிகளின் தீக்குண்டம்.

(புஸ்ஸீயிடம்)

தாங்கள் தாம் புஸ்ஸீ துரையென்று நினைக்கிறேன். ஒரு நிமிஷத்துக்கு முன்புதான் விஜய ராமனை, மல்லம்ம தேவியின் கட்டிலுக்குப் பலியிட்டேன். ஆனால் பொப்பிலிக்கு நடந்த துரோகத்துக்கு இன்னும் பூராவாகப் பழி வாங்கவில்லை. என் உள்ளத்தில் மூண்ட ஊழித்தீ குளிரவில்லை.

(ஹைதரைப் பார்க்கிறான்)

இவனைக்கூட....

(வெளியில் பல சிப்பாய்கள் கூடிய சந்தடி)

புஸ்ஸீ : உள்ளே யாரும் வரக் கூடாது. இது புஸ்ஸீயின் ஆணை.

ஹைதர் : என்ன விசித்திரமான ஆணை! புலியோடு ஒரே குகையில் சேர்ந்து......

பாப்பா : புலிக்குப் புலி பயப்படாது. ஹைதர்! நீ...உன்னை...

(உருவிய கத்தியுடன் ஹைதரை நெருங்குகிறான். புஸ்ஸீ பாய்ந்து வந்து ஹைதருக்கும் பாப்பா ராவுக்கும் இடையில் நிற்கிறான்.)

புஸ்ஸீ : பாப்பா ராவ் காரு! தங்களை இப்பொழுது கண்ணாரக் கண்டேன். கதைகளில் வரும் அகில உலக வீரன் போன்ற ஒருவனை இன்று நேராகக் கண்டேன். நான் பிறந்ததன் பயனை இன்றே அடைந்தேன். ஆனால்...ஆனால்...பாப்பா ராவ் காரு! ஹைதர் என் ஆதரவில் இருக்கிறான். அவன் உயிரை வாங்க வேண்டுமென்றால் என் பிணத்தின் மேல் நடக்க வேண்டும்.

ஹைதர் : பாப்பா ராவ் துரையின் கையால் இறப்பதை விடப் பிரியமான விஷயம் வேறு இல்லை. எனக்கு அது மிகக் கௌரவமாகும்.

(வந்து புஸ்ஸீயின் பக்கத்தில் நிற்கிறான்.

பாப்பா ராவ், புஸ்ஸீயையும் ஹைதரையும் ஒரு கணம் பார்க்கிறான்.)

பாப்பா : ஹைதர்! உனக்குள்ளே, இவ்வளவு வீரவித்து அடங்கியிருக்குமென்று நான் நினைக்க வில்லை. என் பழைய அபிப்பிராயங்கள் எல்லாம் இப்பொழுது மாறுகின்றன. சுத்த வீரன் துரோகத்துக்குச் சாதாரணமாகத் துணிய மாட்டான். ஒரு வேளை, துரோகத்துக்கு முதலிலிருந்தே விஜய ராமன் தான் காரணமோ, என்னமோ! புஸ்ஸீ துரையே! தங்களைப் பற்றி நான் கேள்விப்பட்டதைவிடத் தாங்கள் சிறத்த வீரர். வீர வெலமர் (தெலுங்கு க்ஷத்திரியர்கள்) களுடன் சமமாக நிற்கக் கூடிய பயமற்ற வீரனைத் தங்களிடம் காண்கிறேன். தங்களிடம் ஏற்கனவே எனக்கு மதிப்பு அதிகம். அது தவிர, எங்கள் சின்ன வெங்கட ராயனைக் காப்பாற்றிய உபகாரி நீங்கள். உங்கள் வேண்டுகோளை மீறி நடக்க மாட்டேன்.

இனி என் வேலை முடிந்தது. நான்...

(கத்தியைத் தன் மார்புக்குத் திருப்புகிறான்.)

புஸ்ஸீ : பாப்பா ராவ் காரு! தங்களைப் போன்ற வீரர்கள் இந்த உலகில் இருப்பது அரிது. தாங்கள் சின்ன வெங்கட ராயனுக்குத் துணையாய் நின்று...

பாப்பா : புஸ்ஸீ துரையவர்களே! வெலமச் சிறுவர்களுக்குத் துணை வேண்டியதில்லை. தவிர, நீங்கள் இருக்கிறீர்கள்.

(குத்திக் கொண்டு கணக்காய்க் கட்டிலுக் கருகே சாய்கிறான்.)

புஸ்ஸீ : புலி உயிரை விட்டது! உலகமே வெறிச் சோடி விட்டது.

ஹைதர்: ஆம்! மூவாயிரம் சிப்பாய்களைத் துணையில்லாமல் தாண்டி, ஒண்டியாய்ப் பழி வாங்கக் கூடிய சுத்த வீரனை நாம் இனிமேல் பார்க்கமாட்டோம்; பார்க்க முடியாது!

புஸ்ஸீ : இந்தத் தடவை புலிக்கு ஆகாரம் மிகக் குறைவே. பாராச் சிப்பாய்கள் பன்னிரண்டு பேர் மட்டுமே இவருடைய கத்திக்குப் பலியானார்கள். ஹைதர்! இந்தத் தைரியமும் உறுதியும் போல், இது வரைக்கும் நான் எங்கும் கண்டதில்லை. யமனுடன் சரஸம் பேசிய தீரன்!

(பாப்பா ராவின் உடலை அரை நிமிஷ நேரம் இருவரும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.)

புஸ்ஸீ : யாரடா, அங்கே! ஒரு தீ வட்டி!

(வெங்கண்ணு தீவட்டியுடன் வருகிருன்.)

வெங்க : (நாலு புறமும் பார்த்து) என்ன, இது ?

புஸ்ஸீ : பொப்பிலித் தீ!

வெங்க : தவறி விட்டீர்கள். மல்லம்ம தேவியின் சாபம்.

புஸ்ஸீயும், ஹைதரும் : மல்லம்ம தேவியின் சாபம் !

(அமைதி)

(திரை)

# 6. உமர் கய்யாம்

★

ஆசிரியர்:

ஸ்ரீ சிவராஜு வெங்கட சுப்பா ராவ்

என்ற

புச்சிபாபு

(14—6—1916-ல் பிறந்தவர். ஹைதராபாத்து அகில இந்திய வானொலி நிலையத்தில் பணியாற்றுபவர். "ஆத்ம வஞ்சனை; வழியோடு போகும் தானையா; உத்தமியான இல்லாள்; ஆதியந்தங்கள்;" முதலியவற்றின் ஆசிரியர்.

உமர் கய்யாம் 'பாரதி' தெலுங்கு மாத இதழில் அக்டோபர், 1941-ல் பிரசுரமாயிற்று.

பெஜவாடா, அருணோதய நாட்டிய மண்டலியார் 20—3—56-ல் இதை நடித்தார்கள்.

உமர் கய்யாம் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த ஃபிட் ஜெரால்டு, தன் நன்பனுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் 'உமரைப் பரீட்சிக்கப் பெர்ஷிய ராணி மாறு வேடத்தோடு வந்ததாக இப்பொழுதும் அங்கிருக்கும் ஜனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்' என்று எழுதியிருக்கிறார். இந்த நாடகத்தின் கற்பனைக்கு அந்தச் செய்தி தான் ஆதாரம்.)

# பாத்திரங்கள்

★

| | | |
|---|---|---|
| உமர் | — | வான சாஸ்திரக் கவி |
| ஹம்ருன்னிஸா | — | சிஷ்யை, அடிமைப் பெண் |
| ஆகாஷாஹி | — | சீடன் |
| ஒரு பெண் | — | ஓமாஹு ராஜ குமாரி |
| முராத் | — | அவளுடைய கணவன் |

## காட்சி—1

(ஓமானுவில் (இடம்) மணல் மேட்டுக்குப் பின் உமரின் கூடாரம். மணல் மேட்டுக்குச் சற்று தூரத்தில் சாராயக் கடை. கூடாரத்துக்கு முன்புறம் ஒரு குளம். கரையில் விசித்திரமான மூன்று மரங்கள். பிற்பகல் மூன்று மணி. ஆகாஷாஹி மண் சட்டியின்மேல் அழகுக்காகக் கோடுகள் வரைகிறுன். மண் கூஜா ஒன்றைத் தோளில் வைத்துக் கொண்டு ஹம்ருன்னிஸா அவன் பக்கமாகப் போகிருள்.)

ஆகா: அப்படியே நில். அசையாதே. அசைந்தால் உன் அழகிய வளைவுகள் அமைந்த அவயவங்கள் என்னை, என்னை... எப்படியென்ருல்...

ஹம்ரு: நீ வந்து ஒரு வாரம் ஆகவில்லை. அதற்குள்ளே, என்னைச் சுத்த ஆரம்பித்து விட்டாயா? எப்போதும் என் மேலேயே உனக்குக் கண். அதென்ன கர்மமோ! குருஜீ ஞான சமாதியில் இருக்கும்போது நீ...

ஆகா: உன் சரீர சமாதியில் விழுந்து மயங்குகிறேன். தன்னை மறப்பதற்கு, உருவம் அற்றதைவிட உருவம் உள்ள உன்னைப் போன்ற பொருள் சுருக்கு வழி என்று நேற்றுத்தானே உமர் உன்னிடம் சொன்ஞர்.

ஹம்ரு: சுயநலத்தோடு கூடிய தாற்காலிகமான அபிப்பிராயம் அது உலகம் என்பதை அறியாத வ்யசிலிருந்தே என்னைத் தன்னுடன் வைத்துக் கொண்டு, அவசியமாய் இருக்கும் சற்று நேரத்துக்கு நயமான பேச்சால் என்னை ஆராதிப்பார் அவர். அப்புறம் வாடிய பூவை எறிவதுபோல் என்னை எறிந்துவிட்டு யோசனையில் முழுகி விடுவார்.

ஆகா: பேஷ்! ஆனால் உனக்கு வாட்டம் இல்லை. அவருடைய அன்பைப்போல் உன் உடலுக்கும் சாவு இல்லை.

ஹம்ரு: நீ பொல்லாதவன். திருட்டுத்தனம் உன் பேச்சில் நிறைந்திருக்கிறது. குருஜீ உன்னைச் சந்தேகிப்பதில்லை என்ற துணிச்சல் உனக்கு! என்னை முகஸ்துதி செய்து மனசைக் கலைத்து மோசஞ் செய்வது நியாயம் அன்று.

ஆகா: அப்பப்பா! ஓகோ! இதை நீ சொல்லும்போது உன் கண்ணில் தெரியும் கோபம் வேடிக்கையாக இருக்கிறது. பொய் சொல்லும்போது நீ மிக அழகாய் இருக்கிறாய். என் வாயைக் கிளறி என்னைச் சீண்டுவதில் உனக்கு ரொம்ப ஆசை. நம்மை ஏமாற்றிக் கொள்ளும் சக்தியையே பொறுத்திருக்கிறது, நம் ஆனந்தம் என்று குரு அன்றைக்குச் சொன்னார். உனக்கு என் மேல் ஆசை இல்லாதிருந்தால் முதலிலேயே உமரிடம் சொல்லியிருப்பாய், இல்லையா ?

ஹம்ரு: (சிரித்து) நன்றாய் டக்காகப் பேசக் கற்றுக் கொண்டிருக்கிறாய். உன் பார்வை திருட்டுப் பார்வை.

ஆகா: உன்னை நான் இப்படிச் சொன்னால் உனக்கு எவ்வளவு குதூகலமாக இருக்கும். என் மனசு உன் உடலை மழைத் துளிகள் மேகத்தைச் சூழ்ந்திருப்பது போல சூழ்ந்து கொண்டிருக்கிறது. உன் தோள், கூஜாவின் கனத்தினால் பள்ளமாகி விட்டது. ஓகோ! தோளின் வளைவு, மழமழப்பு, மென்மை இவற்றோடு கூடிய உறுதி, மார்பின் பாரத்தினால் ஒடிந்து சுக்கலாகிக் கீழே விழும் அந்த இடை... எல்லாவற்றையும், தாடிக்குப் பின்னால் மறைந்திருக்கும் உமரின் உதட்டுக்குச் சமர்ப்பணம் செய்யப் போகிறாயா ?

ஹம்ரு: பார்த்தாயா, பொறாமையை! இது ஆண் பிள்ளைகளுக்கே உள்ள நோய்தான். நீ பேசக்கற்ற பிராணி. உன் மனைவி உன்னைக் கண்டு துக்கப்பட்டு விரக்தி அடைந்திருந்தால் அதில் ஆச்சரியம் இல்லை.

ஆகா: அதை யார் உனக்குச் சொன்னார்கள் ?

ஹம்ரு: நீ என் எஜமானிடம் சொல்லும்போது கேட்டேன்.

ஆகா: அதை உனக்குத் தெரியாமல் மறைக்க நினைத்தேன். தெரிந்தால் நீ அசூயைப் படலாம்.

ஹம்ரு : சே, சே! நான் உணர்ச்சி வெறிகளுக்கெல்லாம் அப்பாற் பட்டவள்.

ஆகா : ஆண்பிள்ளையிடம் தவிர...

ஹம்ரு : எஜமானருக்கு ஓய்வு கொடுப்பதைத் தவிர எனக்கு வேறு லட்சியம் இல்லை. சொந்தமாக ஆசை எதுவும் இல்லை.

ஆகா : உன் எஜமானருக்காக உன் விருப்பங்களைத் தியாகம் செய்வதுகூட ஒரு விதமான சுயநலந்தான். ஞானத்துக்குச் சுயநலந்தான் முதல்படி. லயம் இல்லாத இந்த உலகத்தைச் சிருஷ்டித்ததால், அல்லா, தம் சுயநலத்தைத்தான் விளம்பரப் படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஹம்ரு : என் நடையில் லயம் இல்லையா? என் அவயவங்களின் ஒய்யாரக் குலுக்கலில் லயம் இல்லையா?

ஆகா : உன்னை விரும்பித் தோற்றுப் போனவனுடைய ஜன்மம் அல்லவா, ஜன்மம்!

ஹம்ரு : இவ்வளவு பலஹீனனாகவும் அற்பனாகவும் நீ இருப்பதால் தான் உன் மனைவியின் மனமே ஜீவச் சூட்டை இழந்து உறைந்தே போய்விட்டது.

ஆகா : காரணம் அதுவல்ல. இருட்டை உண்டாக்கும் முட்டாக் கால் மூடிக்கொண்டு, தன் உடம்பை என் பார்வையிலிருந்து மறைத்துக் கொண்டு வாழ்க்கையின் கனவுச் சங்கீதத்தில் அபஸ்வரத்தை ஒலிக்கச் செய்து ஊமையானாள்.

ஹம்ரு : உமரிடமிருந்து திருடிய கற்பனை இது. நீ இங்கே வந்தது எனக்காகவா, என் எஜமானருக்காகவா?

ஆகா : குருஜீயின் உபதேசத்தால் தானோ என்னமோ? என் மனசு உன்னை விரும்புகிறது. உன்னுள் இருக்கும் சிற்பமே அவரை இவ்வளவு பெரிய கவியாக ஆக்கி விட்டது. நானும் உன்னை ஒரு தரம் தொட்டால் அவரைப்போன்ற கவியாகலாம் என்று ஆசையாய் இருக்கிறது. எனக்குள் ஒளிந்திருக்கும் கவிதை வெள்ளத்துக்கு என் மனைவியால் போக்குக் காண்பிக்க முடிய வில்லை.

ஹம்ரு : அவருடைய கவிதைக்கு மூலம் நான் அல்ல. அவர் சிருங் கார மயமான உலகத்திடம் விரக்தி அடைந்து, கீழ் உலகத் துக்குப் போகாமல் தடுக்கும்...

ஆகா: உன் உடம்பு பனி மலை. உன் உதடுகளைத் தொட்டால், கைலாச மலையிலிருக்கும் பனிபோல் கவிதை இடை விடாமல் தோன்றிப் பெருகலாம். என்னுள் இருக்கும் ஒவ்வோர் அணுவும் விரும்புகிறது. ஒவ்வொரு சொட்டு ரத்தமும்...

ஹம்ரு: பைத்தியக்காரா! தோலைத் தொட்டவுடன் பிறக்கும் உன் கவிதையின் ஆழமும் அவ்வளவுதான் இருக்கும்.

ஆகா: ஆழம் இல்லாததுதான் கவிதை. வேகத்தையும் இயற்கை யான தன்மையையும் பொறுத்ததுதான் அதன் சிறப்பு. ஆழம் உள்ளது வேதாந்தமாக இருக்கலாம் என்று உமர் சொல்ல வில்லையா? பார்த்தாயா? போகிருயே! என் ஸ்தோத்திரத்தால் மனசை நிரப்பிக் கொண்டு விட்டாய். வேட்டைக்கு என்னை உசுப்பி விட்டுப் போகிருய். எனக்கு எட்டாமல் போவதில்தான் உனக்குப் பெருமை இருக்கிறது என்று நினைக்கிறேன்.

ஹம்ரு: அதனல் அல்ல; யாரோ ஒரு பெண் என் எஜமானனுடைய கூடாரத்துக்குள் நுழைகிருள் அவளைப் பார். அடே, அப்பா! தூரப் பார்வைக்கே எத்தனை அழகாக இருக்கிருள்!

ஆகா: பக்கத்துப் பார்வைக்கும் அழகாக இருப்பவள் நீ ஒருத்திதான். மூடிக் கொள்ளாதே. அழகு காட்டி, உதறி எறிந்து விடும் அந்தக் கண்கள், கூஜாவின் பாரத்தால் தோல் கன்றி, செவ் வானத்தின் கீழ்க்கோடுபோல் மின்னி, முத்தத்துக்காகக் குவியும் அந்த உதடுகள் இவற்றை, ஒரே கணம்—ஓடிப்போகின்ற கால வெள்ளத்தில் ஒரு சுழலில் மிருத்தியுவுக்கு அர்ப்பிக்கும் முன்—ஒரு தடவை எனக்கு...

ஹம்ரு: அம்மாடி! வேண்டாம். இன்னும் வெளிச்சம் இருக்கிறது; அது ஊசலாடுகிறது. கடைசிக் கிரணம்... இரு என்ருல் இப்பொழுது இருக்க முடியாது. வந்திருக்கிறவள் உன் மனைவி யாக இருக்க மாட்டாள் அல்லவா?

(அவசரமாகப் போகிருள்.)

ஆகா: சந்திரனும் நட்சத்திரங்களும் இன்றைக்கு நம் இருவருக்கு மட்டுந்தான். (போகிருன்)

(திரை)

## காட்சி—2

(அதே சமயம். உமரின் கூடாரத்தின் உட்புறம். உமர் மண் திண்ணையின்மேல் மெத்தையில் உட்கார்ந்திருக்கிறான். தட்டில் திராட்சைப்பழம், அத்திப்பழம், எழுது கருவிகள் இவைகள் இருக்கின்றன. ஜன்னலில் ஒரு மண்டையோடு இருக்கிறது. தலையைக் கைகளால் தாங்கிக் கொண்டு கண்களை மூடிக் கொள்கிறார் உமர். இருபத்தைந்து வயதுள்ள பெண் ஒருத்தி உள்ளே நுழைகிறாள். சால்வை போர்த்துக் கொண்டிருக்கிறாள். முகமூடி அணிந்திருக்கிறாள்.)

**பெண்** : நான் வணங்கும் மனிதர் உமர் கய்யாம் என்று நினைக்கிறேன்.

**உமர்** : இந்த உலகம் என்னை அப்படிச் சொல்லத் தீர்மானித்து விட்டது. இந்த இனிமையான குரல் எந்தப் பெண்ணினுடையதோ தெரியவில்லை ?

**பெண்** : உங்களைப்போல் கவலையோடு இருக்கும் ஒரு பெண்ணினுடையது.

**உமர்** : என் கவலையில் பங்கெடுத்துக் கொள்ள முன் வந்த இந்த சிநேகிதியின் வரவு கள்ளுக் கடையிலிருந்து அல்லவே ?

**பெண்** : இல்லை ; பிரபுவே !

**உமர்** : பெயரைக் கேட்க வேண்டும் போல் இருக்கிறது.

**பெண்** : ரோஷி மொகபத்தீன ஜீவா, பிரபுவே !

**உமர்** : நல்ல பேர், உன் குரலில் இருப்பது போலவே உன் பெயரிலும் கூடச் சோகம் ததும்புகிறது. துன்பம் எவ்வளவு அழகாக இருக்கும் என்பதை அறிந்து கொள்ள விரும்பு கிறவர்கள், உன் பேரைக் கேட்க வேண்டும். கவலையின் மேல் மனதார அன்பு செலுத்திக் கண்ணீருடன் நட்புச் செய்வோம் என்று புறப்பட்ட பெண்; இது வரையிலும் உலகத்தில் பிறக்க வில்லை...பெண்ணே !......அல்ல...ஏதோ பேர் சொன்னாயே ?

பெண்: ரோஷி மொகபத்தீ ஜீவா, பிரபு!

உமர்: ஆம்; இந்தப் பெயரைத் தினந்தோறும் பத்துத் தடவை உச்சரித்தால் பல் வலி பஞ்சாய்ப் பறந்து விடும்.

பெண்: நான் நட்புக்காக வரவில்லை, பிரபுவே! என் துக்கம் பங்கு கொள்ள முடியாதது—முக்கியமாக ஆண்களுடன்.

உமர்: தவருக நினைக்கிருய். பெண்ணே! உலகத்து மனிதர்கள் எல்லோரையும் ஒன்று படுத்துவது துன்பம். இதிலிருந்துதான் அன்பு பிறக்கிறது. அல்லா, மனிதர்களின் துன்பத்தைக் கண்டே இரங்கி அன்பு செலுத்துகிருர். நட்சத்திரமும் பச்சிளங் குழந்தையும் துன்பத்திலேயே ஜனிக்கின்றன. முதல் முத்தத்தில் ஊடல் துன்பம்; சாவில் வாய் எழும்பாத துன்பம். துன்பத்தில் கவி, கவிதைகளைப் பாடுகிருன். தூரிகையைக் கண்ணீரில் நனைத்துச் சித்திரக்காரன் படம் எழுதுகிருன். சிருஷ்டிக்கு மூலமான துன்பத்தை விட் உண்மையில் துன்பம் வேறு இருக்கிறதா? பெண்ணே! பெருமூச்சுடன் உன் துன்பத்தைச் சொல்லிக் கொள்ள மாட்டாயா? பெண்ணே!

பெண்: என் பேர் இன்னதென்று சொன்னேனே, குரு!

உமர்: தவருய் நினைக்காதே. என் கண்ணுக்குப் பெண், பெண்தான். ஆண், ஆண்தான். பெயர் சுய நலத்தைப் பலப்படுத்துகிறது. நீ பேரை மறந்து பெண்ணே என்று அழைக்கப்படுவது எவ்வளவு விசித்திரமான அநுபவம் என்பது உனக்கே தெரியும். எவ்வளவோ அபிப்பிராயங்கள் தாறு மாருகும்.

(தலையைத் தூக்கி மேலே பார்க்கிருர்)

ஒகோ! இந்த ஒளியின் முன்பா நான் அர்த்தமில்லாமல் பேத்திக் கொண்டிருக்கிறேன்! இந்த ஐந்து நிமிஷங்களில், திரும்பவும் பெற முடியாத அநுபவத்தை இழந்து விட்டேன். இப்படியே பல ஒளிக்கிரணங்கள் நழுவி விடுகின்றன. வாழ்க்கையை இருட்டாகச் செய்து கொள்கிருர்கள் மாய மனிதர்கள்.

பெண்: பிரபுவே! தாங்கள் நான் இருப்பதை அறிந்ததாகவே தெரியவில்லையே?

உமர்: இருப்பை அறிந்தால் அநுபவம் நசிக்கும். நிஜமான அநுபவத்துக்குக் கண்ணுவது காதாவது இல்லை, பெண்ணே! என்னைக் கேட்கச் சொல்லாதே; பார்க்கச் சொல்லு.

பெண்: நான் தங்கள் அநுபவத்துக்காக வர வில்லை, குரு!

உமர்: ஆம்; என் அநுபவத்துக்காகவே வந்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். நான் உன்னை அநுபவிப்பதிலேயே அநுபவம் இருக்கிறது. பெண்களே இப்படித்தான், அவர்களுக்குத் தங்களை உலகம் கவனித்து, பார்த்து, புகழ்ந்தால்தான் சந்தோஷம் நிறை வடையும். ஆனால் அவர்களுக்கு மட்டும் உலகத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையே இல்லை. சொந்த உழைப்பால் தனிப்பட்ட அநுபவம் பெற வேண்டும் என்ற எண்ணமே இல்லை. அவர்கள் மலை, மேகம், ஆறு, பூ இவைகளைப் போல் கண்டு, அநுபவிக்கப் பெற்று, புகழப் படுவதற்கே இருக்கிறார்கள். இயற்கையைப் புரிந்து கொள்ளாவிட்டால் சிருஷ்டியே இல்லாதது போல், பெண்ணைப் புரிந்து கொண்டாலொழியச் சிருஷ்டி இல்லை. இயற்கைக்கு இதயம் எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு தான் அவர்களுக்கும் இருக்கிறது.

பெண்: குரு! தங்களுடன் சிருஷ்டியைக் குறித்தும் அநுபவத்தைக் குறித்தும் வாதாட நான் வரவில்லை, உங்களிடம் ஒரு வேலையாக வந்தேன்.

உமர்: உலகத்தோடு எனக்கு வேலை யில்லை. வேலை எனக்கு எதிரி. வேலை என்றால் பணந்தான். பெண்களுக்கும் ஆண்களுக்கும் வேண்டியது பணம். பணம் இல்லாத, என்னைப் போன்ற ஏழைப் புருஷனைப் பெண் தூற்றுவாள். உனக்கு என்னோடு என்ன வேலை? பெண்ணே! முட்டாக்கை எடு. முகமூடி யுடன் உலகை எவ்வளவு காலம் ஏமாற்றுவாய்? ஓகோ! இந்த இரண்டு பின்னல்கள்—சுருண்டு பின்னிக் கொண்ட பாம்புக் குட்டிகளைப் போன்ற கூந்தல்! நெற்றியில் கிரீடம் போல் அமைக்கப் பெற்ற புருவங்கள்! பெண்ணே! நீ மகா ராணி!

பெண்: எனக்கும் அவ்வளவு பாக்கியமா, குரு! என் துயரக் கதையைக் கேட்க மாட்டீர்களா?

உமர்: 'பார்க்க மாட்டீர்களா?' என்று கேட்க வேண்டும். என் வாழ்க்கைக் காலம் பூராவும் இப்படியே உன்னைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பேன். ஏதோ துன்பம் உன் கண்களில் கவலையைக் காட்டுகிறது. வாயில், பயத்தால் பேச்சு எழும்பாமல் கழுத்தின் பச்சை நரம்புகளை அதிரச் செய்து, சங்கில் இட்ட கோடுகளைப் போல் மின்னு கின்றன. இந்தக் காட்சிக்குப் பேச்சு எதற்குப் பெண்ணே? நான் ராஜாவாயிருந்தால், உன்னை இமாலயச் சிகரத்தில் உட்கார வைத்து, உலகத்தைப் பார்த்து விட்டுச் சாகும்படி வேண்டுவேன். நாணல் புல்களின் ஸ்பரி

சத்துக்கே சிவந்து போயின, ராணியின் கால்கள். வலுத்து, உயர்ந்த இந்த இடுப்பின் பின் பாகத்தைத் தாங்கும் சிம்மாசனம் எந்த நாட்டில் இருக்கிறது. சிருஷ்டிக்கென்று உன்னை இந்த உலகத்துக்கு அனுப்பிய தெய்வத்துக்குத் தீர்க்க தரிசனம் இல்லை. உன்னைத் தொட எந்த அரசன் துணிவான்?

பெண்: நீங்கள் ஒரு பெண்ணுக்கு முன்பு பேசத் தகாத செய்திகளைப் பேசுகிறீர்கள். நான் ராணி அல்ல, நான் என் கணவரைத் தேடி வந்தேன்.

உமர்: ஆம். உனக்கு ஒரே ஒரு கடமை தான் உண்டு. அது சிருஷ்டி. அதை நிறைவேற்றுவதற்காக, கணவனைத் தேடி, இப்படி வந்து எனக்குத் தரிசனம் கொடுத்தாய். பெண்ணே! அதற்கு லாயக்கான ஆண்களே இல்லை. உனக்காகப் படைக்கப் பெற்ற ஆண்பிள்ளைகள் இல்லை. இருக்கிறவர்களுக்குள்ளே, நல்லவர்களைப் பொறுக்கிக் கொள்.

பெண்: உமர்! தாங்கள் கீழ்த்தரமான பாவங்களால் மனசை மிகவும் புண் படுத்துகிறீர்கள்.

உமர்: ஆம்! சத்தியம் நேராக இதயத்தையே பலி கேட்கும், உடலை அல்ல. இந்த உண்மையைச் சொல்ல நான் எவ்வளவு துன்பப் பட்டேன் என்பது தெரியுமா? நானும், உன்னைப் போன்ற ஒருத்தி என் முன்னால் இல்லாவிட்டால் இப்படிச் சொல்லியிருக்கமாட்டேன். சத்தியத்துக்குச் சௌந்தரியம் என்னும் ஒரு பௌதிகப் பொருள் எவ்வளவு நிறைவைக் கொண்டு வந்திருக்கிறதென்பது உனக்குத் தெரியுமா?

பெண்: நீங்கள் பெரிய சத்தியம் எதையும் கண்டுபிடித்து விடவில்லை. நீங்கள் பேசியதெல்லாம், கேட்பதற்கு இன்பமாக இருக்கும் பொய். என் கணவர் என்னை விட்டு விட்டுத் தங்களுடைய ஆசிரமத்துக்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் அவருக்காக வந்தேன்.

உமர்: எனக்கு நீ சொல்வது புரியவில்லை. இவ்வளவு சக்தியோடு, இவ்வளவு ஒளியோடு மின்னும் உன் உடலுக்கு, இத்த உலகத்தில் கணவன் ஒருவன் கிடைத்து விட்டானா? கோரம்! அந்த அயோக்கியன், உலகத்தைப் பார்க்க முடியாத நிலைக்கு உன்னைக் கொண்டு வந்து விட்டானா—கணவன் என்ற பெயரால்? முகமூடியைப் போட்டுக் கொள்ளாதே! வேண்டாம். உன் கதை, கனவுக்குள் ஒரு கனவுபோல் இருக்கிறது. உண்மையாக, நீ சாராயக் கடையிலிருந்து வரவில்லையே!

பெண் : இல்லை கவிஞரே ! எனக்கும் என் கணவருக்கும் கெட்ட பழக்கங்கள் இல்லை. அவர், உங்கள் பாட்டுக்களைக் கேட்டு விட்டு, சுயேச்சையாய் வாழ்ந்து காதலிக்கலாமென்று, என்னை ஒதுக்கி விட்டு, உங்கள் ஆசிரமத்துக்கு வந்தாரென்று கேள்விப்பட்டேன். நீங்கள் இப்படிப் பட்ட பாழும் நீதியைப் போதித்து, என் குடியைக் கெடுப்பது நியாயமா, கவிஞரே !

உமர் : உன்னை விட்டு விட்ட கணவனுக்கு, 'அழகு' என்றால் என்ன, என்பதே தெரியாதுபோல் இருக்கிறது. அழகு உன்னிடத்தில் நிறைவைப் பெற்று, தன் யாத்திரையை முடித்துக் கொண்டு விட்டது. இங்கே இறங்கும் அற்ப சுகங்களெல்லாம் தம் லேசான இறக்கைகளை மடக்கிக் கொண்டு, சாசுவதமாகத் தங்கி விடுவதற்காக, எஃகு மண்டையோடுகளாக மாறி விடுகின்றன. உன் கணவன் கொடுத்து வைக்காதவனாக இருப்பான். ஒருவேளை, உன் அழகின் கட்டுக்களுடைய இறுக்கத்தைத் தாங்க முடியாமல் உன் சிவந்த ஒளியின் தீவிரத்தைப் பொறுக்க முடியாமல் களை தீருவதற்காக, சுதந்திரத்துக்காக ஓடிப்போயிருப்பான். அவ்வளவே தவிர, என் கவிதையால் அன்று பெண்ணே ! கவிதையை நம்பி, வாழ்க்கையையே தாறு மாறாக்கிக் கொள்ளும் பிரகிருதிகள், இந்த உலகத்தில் இருக்கிறார்களா, என்பது சந்தேகம்.

பெண் : உங்கள் கவிதையின் நோக்கம் பெண்களைக் கவருவதே என்று கேள்விப்பட்டேன். உடலைச் சுகப்படச் செய், என்பீர்களாம் நீங்கள். மேல் உலகம், தெய்வம், பாவ புண்ணியங்கள் ஆகியவை மனிதன் கற்பனை செய்தவையே தவிர, உண்மையல்ல என்கிறீர்களாம் நீங்கள். நியாயம், கட்டுப்பாடு முதலியவற்றை மீறித் தீய காமத்துக்காக உடலை விற்று அடிமையாகும்படி நீங்கள் உபதேசிப்பீர்களாம். உங்கள் போதனை, சம்சாரிகளுக்கும் பதிவிரதைகளுக்கும் செய்யும் கேடு. கேடென்பதே இல்லை என்னும் உங்களைப் போன்றவருக்கு எப்படித் தெரியும்? தோலின் அளவே ஆழம் உள்ள அழகு, நிலையானதா பிரபுவே? எல்லாமே பொய், நிலையாதவை என்ற பிறகு, ஆசையும் சந்தோஷமும்கூட நிலையற்றதேயன்றி நிலையானதா கவிஞரே !

உமர் : உன்னை எந்த விதமாகப் புகழ்வதென்றே தெரியவில்லை. என் கவிதைகளின் சாரம் அத்தனையையும் சுருக்கமாக மூன்று வாக்கியங்களில் சொல்லிவிட்டாய். அப்படியானால் என் போதனைகளை நீ ஒப்புக்கொண்டு மெச்சிக்கொண்டிருந்தாலொழிய, உனக்கு

இவ்வளவு தெளிவாக என் பாட்டுக்கள் புரிந்திருக்காது. கடைசியில், ஒரு பெண்ணுக்குக்கூட, என் அழுகுரல் கேட்டுவிட்டது என்ருல், என் கவிதையின்மேல் எனக்கு அதிக ஆசையும் அதிக நம்பிக்கையும் உண்டாய்விட்டது பெண்ணே! பதிவிரதைகளுக்கு என் உபதேசம் செய்யும் கெடுதலைப்பற்றி நிச்சயமாகச்/சொன்ருய் !—கவிதைக்குப் பாழாய்ப்போன நீதி இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? கெட்டுப்போகாதவர்களுக்கு, நீதியில் அடங்கியிருக்கும் மதிப்பும் பெருமையும் எப்படித் தெரியும்? வேதாந்திகள் பலர், நீதி என்னும் மாளிகைக்குள் நுழைந்தார்கள். பல நாட்கள் தேடியும் அதைத் தெரிந்துகொள்ள முடியாமல மொட்டைத் தலையை அசைத்துக்கொண்டு, போன மச்சான் திரும்பியதுபோல் திரும்பிவிட்டார்கள். அதைக் காண்பதற்காக அவர்கள் வீணுக்கிய காலத்தில் அவர்களிடம் ஏற்பட்ட மாறுதல், அவர்களுடைய வழுக்கைத் தலையில் இருந்த நாலு நரை மயிர்களும் உதிர்ந்ததுதான். உடம்பு, பிறக்கும்போது, சின்னதாகப் பிறந்து, வளர்ந்து பெரிதாகி வளர்ச்சியடைகிறது. ஆத்மாவோ, கிழடாகப் பிறந்து வயது ஏற, ஏறப் பச்சைக் குழந்தையாக மாறுகிறது. இது வாழ்க்கையில் மிகத் துக்ககரமான சத்தியம்.

பெண் : ஐயா ! உம்மோடு வாதாட நான் வரவில்லை. என் கணவரை எனக்குக் காட்டுங்கள்.

உமர் : உன் கணவன் என்னுடைய ஆசிரமத்தில் இல்லை. என்னிடம் 'ஆகாஷாஹி' என்னும் ஓர் இளைஞன் இருக்கிருன். சில நாட்களாகத்தான் இங்கே தங்கியிருக்கிருன். அவனுக்கு என் கவிதைமேல் ரொம்ப ஆசையாம்.

பெண் : உங்களிடம் பெண்கள் எத்தனைபேர் இருக்கிருர்கள்?

உமர் : தற்காலம், ஹம்ருன்னிஸா என்னும் எனக்குப் பிரியமான சின்னப் பெண் மட்டும் இருக்கிருள். அவள் வெகு காலமாக இருப்பவள். வேறு யாரும் என்னிடம் இல்லை.

பெண் : அப்படியானுல், அந்தப் பெண்ணுக்காகவே என் கணவன் வந்திருப்பான்.

உமர் : என் ஹம்ருவிடம் கபடு இல்லை. மோசம் இல்லை. அவள் காதலைப் பற்றி ஆராயமாட்டாள். அவளுக்கு ஆண், பெண் வேற்றுமையே இல்லை. எங்கள் ஆகா பெரிய தர்க்க ஞானி. நானே கற்றுக்கொள்ளவேண்டியவை அவனிடம் இருக்கின்றன.

பெண் : ஆகாஷாஹிதான் என் கணவன்.

உமர் : அவனும் சம்சாரத் தொல்லை பொறுக்கமுடியாமல் மனைவியை விட்டு விட்டு வந்தவன்தான். ஆனால், உன்னைப்போல் அழகான மனைவி இருப்பதாக அவன் சொல்லவில்லையே! அவன், மனத் துன்பத்தை அகற்றும் ஹம்ருன்னிஸாவின் உடலையே மிகப் புகழ்ந்தான். அநேகமாய், உன் கணவனை மனசால் நேசிக்க உன்னால் முடியவில்லையோ, என்னமோ. இந்த இடத்தை விட்டு விட்டு அவன் உன்னுடன் திரும்பி வருவானா என்று சந்தேகிக்கிறேன். ஏனென்றால் ஓயாத சுயேச்சையும் ஒரு மாதிரி அடிமைத்தனந்தானே! அநேகமாய் உன்னுடன் வரலாம். உன்னைப் போன்ற புஷ்பங்கள் அடிக்கடி வாசனை பார்க்கவே சிருஷ்டிக்கப்பெற்றவை; கல்யாணம் செய்துகொண்டு பாழ் பண்ணிக்கொள்வதற்காக அல்ல. பூவுக்கு முள் இருப்பது போல் உனக்குச் சூனியத்துவம், கர்வம், அலங்காரத்தைப் போற்றும் தன்மை, ஆகியவை இருந்து துணை செய்கின்றன. சிருஷ்டிக்கு உதவியாக, நீ பெறப்போகும் குழந்தைகளுக்காக நீ செய்யக்கூடிய தியாகம் உன்னிடம் அமைக்கப்பட்டிருக்கிறது. தன்னுடைய அழகையும் அந்தஸ்தையும் கண்டு மோகித்து, அவனோடு காலங் கழிக்க, நீ ஒப்புக்கொண்டாய் என்று நினைக்கும் ஆண் முட்டாள். மோகிப்பது, குடித்தனம் நடத்துவது எல்லாம் உன் சுயநலத்துக்காகத்தான். பாஷை இல்லாத பெரிய கவி நீ. உன் கடமைக்கு உதவியாய் இருந்து நிர்வகிக்க முடியாத புருஷனை மன்னிக்கமாட்டாய் நீ. அதற்காக ஆண் உலகத்தையும் நீதியையும் பலியிடவும் பின்வாங்கமாட்டாய். அப்படியிருந்தும் கையாலாகாத இந்த ஆகாஷாஹியை மறுபடியும் வேட்டையாட நீ வந்திருக்கிறாயென்றால் அவன் இன்னும் உன் காரியத்தைச் சாதித்துவைப்பான் என்று உனக்கு ஆசை இருப்பதாகத் தெரிகிறது. அவனைக் கூப்பிடுகிறேன்.

பெண் : அப்பாடா! ஒரு வழியாய் முடிந்ததா, உங்கள் பிரசங்கம் சீக்கிரம் கூப்பிடுங்கள்.

உமர் : (கையைத்தட்டி ஆகாஷாஹியைக் கூப்பிடுகிறார்.) ஓகோ! சூரியன், மணல் மேடுகளுக்குப் பின்னால், காலில் காயம் பட்டவனைப்போல் நொண்டிக் கொண்டு இறங்குகிறான். காயத்தில் இருந்து வடியும் ரத்தம் ஆகாசத்தை மூடிவிட்டது. கள்ளுக் கடையிலிருந்து ஒட்டக மந்தை, புண்ணில் உட்கார வரும் ஈக்களைப் போல் நடக்கிறது. காற்றால், மணல் அலைகள் மேகம் போல் எழுந்து, சந்திர வட்டத்துக்கு வணக்கம் செலுத்து

கின்றன. வெளிச்சம் போய்விட்டது. சக்தி பூமியை விட்டு விட்டு, சிருங்காரத்துக்கு இடம் கொடுக்கிறது.

(மறுபடியும் கூப்பிடுகிறார். ஆகாஷாஹி வருகிறான்.)

உமர் : உன்னைத் தேடிக் கொண்டு உன் மனைவி வந்திருக்கிறாள். என் ஹம்ரு எங்கே ?

ஆகா : போது போக்காகக் கள்ளுக்கடைப் பக்கம் போனாள்.

உமர் : இல்லாவிட்டால் அவளை விட்டு விட்டு இவ்வளவு சீக்கிரம் வருவாயா ?

ஆகா : குருஜீ ! பரிகாசம் செய்கிறீர்கள். அவள் பேசினால் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும் போல் தோன்றுகிறது. இதற்குத் தானா என்னைக் கூப்பிட்டீர்கள் ?

உமர் : அதோ, அந்தப் பெண்ணைப் பார். உன் ராணி. வேலை ஒன்றும் இல்லாமல் சோம்பேறியாகத் திரியும் உனக்குக் காலட் சேபத்துக்காக உலகம் அருள் செய்த மனைவி.

ஆகா : குருஜீ ! பரிகாசத்தை எனக்கும் இன்னும் கேட்கலாம்போல் இருக்கிறது. ஆனால் அது அந்நியப் பெண்முன் செய்யத்தகாதது.

பெண் : தவறு. பிரபுவே ! இருட்டு அதிகமாக, ஆகத் தங்களுடைய கற்பனைகளுக்கு இன்னும் சுயேச்சை கிடைத்து விடும்போல் இருக்கிறது. மனைவியை விட்டுவிட்டு ஏன் இப்படி வந்து விட்டாரென்று தாங்கள் விசாரிக்க வேண்டும்.

உமர் : பெண்ணே ! உங்கள் ஊடல் காட்சிகளை யெல்லாம் என் முன் காண்பித்தால், நான் கண்டு இரக்கப்பட மாட்டேன். பிறரு டைய காதல் லீலைகளைக் கேட்பதைவிட வெறுப்பை உண் டாக்கும் விஷயம் வேறு இல்லை. ஆகா ! உன் மனைவிக்குச் சமாதானம் சொல்ல வேண்டும். என் ஆசிரமத்தின் கௌர வத்தை நிலை நிறுத்த வேண்டும்.

ஆகா : இதென்ன தொல்லை ? இவள் என் மனைவியல்ல பிரபுவே ! இவளை நான் பார்த்ததே யில்லையே ! கேலியை முடித்துக் கொண்டால் நான் போவேன்.

உமர் : இல்லை ஆகா ! நீ ஒளிந்து கொண்டு பிரயோஜனம் இல்லை. இந்தப் பெண்ணைப் பிரிந்து வெகுகாலம் உன்னால் வாழ முடியாது. வேறொரு பெண்ணின் கையில் அகப்பட்டுக்கொள் வாய். எங்கிருந்தாலும் பெண் உன் உடலைத் தன் சிருஷ்டிக் காகப் பலியாக்க விரும்புவாள்.

பெண்: பல நாட்களுக்கு முன்பு நாங்கள் ஒற்றுமையாக இருந்தோம்.

ஆகா : எனக்குக் கடந்த காலமே இல்லை.

உமர் : நிஜம். எங்கள் பாஷையில் நேற்றும் நாளையும் இல்லை. இன்றைக்கு, அவனுக்கு நீயும், நீ அவனுக்கும் அவசியமானால் சேர்ந்து ஓடி விடுங்கள்.

பெண் : என் கணவனுடன் இருப்பது என் உரிமை.

உமர் : அது, சிருஷ்டிக்கு நீ செலுத்தும் சுங்க வரி.

ஆகா : அதெல்லாம் அநாவசியம். இவள் என் மனைவி அன்று. இவ்வளவு அழகான மனைவி எனக்கு இருந்து வாழ்ந்தாளா? தங்கள் தியான சமாதிக்கு இத்தப் பெண் நம் ஆசிரமத்துக்கு அவசியம். பிரபுவே! என்ன சொல்லுகிறீர்கள் ?

உமர் : கணவன் இருக்கும் பெண்ணை நான் தொட மாட்டேன்.

ஆகா : நான் இவள் கணவன் அல்ல ; என் மனைவி என்று சொல்லிக் கொண்டதால் சொல்லுகிறேன்.

பெண் : நீ மனைவியை விட்டுவிட்டு வந்திருக்கிறாயா, இல்லையா ?

உமர் : அதை முதலில் சொல்லு.

ஆகா : நிஜமாய் இருக்கலாம். ஆனால் நீ என் மனைவி அல்ல. இதென்ன கர்மம்? என் மனைவி குள்ளமாயிருப்பாள். உனக்கு இருப்பதுபோல் அவளுக்குக் கன்னத்தில் மச்சம் இல்லை. அவளுக்கு இரட்டைப் பின்னல் இல்லை. தலைமுடியெல்லாம் உதிர்ந்து விட்டதால் அவளுக்குப் பின்னலே இல்லை.

பெண் : அது காரணமாகத்தான் விட்டு விட்டாயா ?

ஆகா : காரணம் உனக்கு அநாவசியம்.

உமர் : பெண்ணின்மேல் வெறுப்பு வந்தபின் அவள் எப்படி இருக்கிறாள் என்பதை மறந்துவிட்டு, இருக்கலாம். நீ இந்தப் பெண்ணை நெருங்கிப் பரீட்சை செய்.

ஆகா : அப்படியே... (ஆராய்ந்து பார்த்து)
ஐயய்ய! இவள் என் மனைவியே அல்ல. அவளுடைய ஜாடை கொஞ்சங்கூட இல்லை, பிரபு! ஏதோ சாக்கை வைத்துக்கொண்டு தங்களிடம் இருக்கலாம் என்று இவள் வந்திருக்கிறாள்.

உமர் : இந்தப் பெண்ணுக்காக நீ உலர்ந்து போய் உன் சக்திகளை அழித்துக் கொண்டால்... உன் தீட்சையும் உன் கவிதைப் பெருக்கும் அழிந்து விடும் என்னும் பயத்தால், உன் மனைவியை விட்டு வந்தால்... நான் உன்னை ஒன்றும் சொல்ல மாட்டேன். உண்மையாக இவள் உன் மனைவி அல்ல என்றாலும் இந்தப்

பெண், "ஆம்" என்கிருள். ஆகையால் இவளோடு போக நீ தயாராக இருக்கிருயா ?

ஆகா : குருஜீ ! என்னை இப்படிப் பரீட்சை செய்தால் நான் என்ன செய்து சாவேன். பெண்கள் சில சமயத்தில் அவசியமே தவிர, மனைவியாக வேண்டாம்.

பெண் : கோரம், கோரம் !

உமர் : அப்படியானுல் உனக்கு இந்தப் பெண் வேண்டாம் என்று சொல்லு.

ஆகா : அவ்வளவு பச்சையாய்க் கேட்டால் நான் என்ன சொல்லு வேன். தங்களுக்கு அவசியம் இல்லா விட்டால் ஆலோசிக் கிறேன்.

உமர் : அப்படியானுல் வெளியே போய் ஆலோசித்துக் கொள்.

ஆகா : பிழைத்தேன் ! போகிறேன். (போக முயல்கிருன்)

பெண் : ஒரு வார்த்தை ?

ஆகா : என்ன அது ?

பெண் : ஒரே ஒரு நாள் உன் மனைவி தண்ணீர் கொண்டு வரும் போது காற்ருல் முகமூடி நழுவி விட்டது என்று நீ அவளை இம்சை செய்தாயா ? இல்லையா ?

உமர் : என்ன ? இந்தச் சோனிப் பயலுக்குப் பெண்ணை அடிக்கும் சக்திகூட இருக்கிறதா ? அதுவும் உன்னைப் போன்றவளை !

ஆகா : குரு மகாராஜ் ! நன்ருகக் கேட்டீர்கள் ! இவளை நான் அடிக்க முடிந்த தென்ருல் யார் நம்புவார்கள் ?

உமர் : ஆகாவின் பேச்சு நிஜம். இல்லாவிட்டால் எந்த ஆண் பிள்ளை, பெண்ணுக்கு முன்னுல் தன் பலவீனத்தை வெளிப் படுத்திக் கொள்வான் ? அதிலும் அந்நியப் பெண் முன் ! இதுதான் சத்தியத்துக்காகச் சுயநலத்தைத் தியாகம் செய்வது என்கிறேன்.

பெண் : அப்புறம் அறையில் விளக்கைச் சிறிதாக்கி, அவள் முக மூடியை நீ தள்ளியபொழுது வெட்கப்பட்டதற்காக அவளை இப்சித்தது நிஜந்தானு ?

ஆகா : நான் என் மனைவியை என்ன செய்தால் உனக்கென்ன ? இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது என்கிறேன் ?

பெண் : உன் மனைவியான தால்.

ஆகா : இவள் புருஷர்களை வஞ்சிப்பவள், பிரபு ! வேட்டைக்காரி ! (அவளைப் பார்த்து)

எவ்வளவு பேர் உன் வலையில் விழுந்தார்கள் ?

**உமர் :** அல்லஹோ துஷ்மன் !

**பெண் :** (ஆகாவைப் பார்த்து) வாயை மூடு !

**ஆகா :** போதாததற்கு இந்த அக்கிரமம் வேறயா ? பிரபுவே ! எனக்கு உத்தரவு கொடுங்கள். இவள் பிசாசாக இருக்கிருள். அல்லா இவளிடமிருந்து உங்களைக் காப்பாற்றட்டும். இந்த மண்டையோட்டைத் தங்கள் கையில் வைத்துக் கொள்ளுங்கள். பிசாசு ஓடிப்போய் விடும். (போகிருன்)

**உமர் :** என்னைப்பற்றிக் கேள்விப்பட்டுப் பார்க்க வருவதற்காக இப்படிச் சூழ்ச்சி செய்ய வேண்டுமா ? என்னிடம் என்ன இருக்கிறது ? பெண்ணே ! ஆனல் பெண் அழகை விரும்ப மாட்டாள். ஆகையால் எனக்குக் கொஞ்சம் ஆசையாக இருக்கிறது. நீ என்னிடம் இருக்க வேண்டும். என் கற்பனைச் சாம்ராஜ்யத்திற்கு உன்னை ராணியாக்குகிறேன். இடைவெளியற்ற வாழ்க்கைப் பாலைவனத்தில் உன் கண் இமைகளின் நிழலில் தூங்கினல்... நான்...

**பெண் :** எல்லாப் பெண்களிடமும் நீங்கள் இப்படித்தான் பேசுவீர்களா ? உங்கள் ஹம்ரு போதாதா ?

**உமர் :** பெண்ணுனவள்—பாட்டில் பொருமை என்னும் அபஸ்வரம். ஹம்ரு, தலை இல்லாத உடல். கனவுகள் இல்லாத இருட்டு வாழ்க்கை அவளுடையது. தண்ணீரின் கீழ்ப்பாசி. என்னேடு வான மண்டலத்தில் பறந்து உலாவ அவளால் முடியாது. பள்ளத்தாக்கில் இறங்குவோம் என்பாள். சாதம் போடுவாள் ; கால்களைப் பிடித்து விடுவாள். ஆனல், தான் அப்படியே இருந்து விடுவாள். உன்னைப்போல் எனக்குள்ளே பெருக்கெடுத்தோடும் சக்தி அவளுக்கு இல்லை. எல்லா ஆறுகளின் பிரவாகமும் தன்மேல் பெருகி ஓடினுலும் அசைந்து கொடுக்காத கல் போன்றது என் இருதயம்.

**பெண் :** உங்களுக்குப் பெண்களின் அவசியம் என்ன ?

**உமர் :** எனக்குப் பெண்களின் அவசியம் இல்லை. ஸ்திரமான நடத்தை இல்லை. என் கற்பனைகள் சௌந்தரியத்திற்கு பலத்தை நிறைத்துக்கொண்டு, மாறுதலிலிருந்து இனிமையைப் பெற்று, முன்னேறி, பொருளற்ற சூனியத்தில் போய் ஊமை

யாகிவிடும். வழியில் கொஞ்சம் இனிமையும் பலமும் தங்கிப் போய் அவை சமூகத்துக்குக் கிடைக்கும். அவைதான் என் கவிதைகள். உன்னைப்போன்ற பொருள்கள், வழியில் அடிக்கடி தட்டுப்படா விட்டால் என்றைக்கோ எனக்கு இந்த உலகம் இருண்டு போயிருக்கும். உன்னைப் பார்க்கப் பார்க்க உலகத்தைக் கவிதையால் வென்று விடலாம் என்ற பிரமை எனக்கு உண்டாகிறது.

பெண் : இதுவரைக்கும் நீங்கள் எழுதிய கவிதைகளால் பத்துப் பேர் பாழானது போதாதென்ரு ?

உமர் : தப்பு, பெண்ணே ! என்னையும் என்னைப் பிறப்பித்த சமூகத்தையும் அதன் நீதியையும் திட்டு. கவிதையைத் தூஷிப்பது தகாது. கவிதையில் சத்தியத்துக்கு மிகப் பக்கத்தில் வருகிறேன் நான். அது இல்லாத சமயத்தில் நான் நடைப்பிணம் மாதிரி தான்.

பெண் : உலகத்துக்கு உபயோகப்படாத பிதற்றல் கவிதைகளை எழுதுவது எதற்காக ? அந்தப் பொழுதை உபயோகமான வேலையில் செலவிட்டுப் புகழ் பெறக் கூடாதா ? கவிதையால் வயிற்றுப் பிழைப்பு நடக்குமா ?

உமர் : அல்ல, பெண்ணே ! பெண்களுக்குப் பணக்காரன்தான் உயர்ந்தவன் என்பது குருட்டு நம்பிக்கை. அதனால்தான் அவர்கள் என்னைப்போன்ற ஏழைகளை நேசிக்க மாட்டார்கள். உலகத்துக்கு உபயோகப்படும் வேலைகளையும் செய்வேன். கூடை முடைவேன். விரிப்புகளின்மேல் சித்திரங்கள் போடுவேன். சட்டி பானை பண்ணுவேன். அல்லா மாதிரியாக நிறையப் பணம் கேட்பேன். தங்கத்துக்காகக் கையை நீட்டினேன். ஆனால் நடுவில் அழகிய இரண்டு உதடுகள் குறுக்கே வந்தன. வச்சிர வயிடூரியங்களுக்காக ஓடினேன். ஆனால் இரண்டு காதல் காவியங்கள பட்டன. சிம்மாசனத்துக்காகத் தாடியை உருவினேன். ஆனால் இரண்டு உதடுகள் முத்தத்துக்காகக் குவிந்தன. உலகம் என்னுடையதென்று இறுமாந்தேன். அல்லவென்று இரண்டு உதடுகள் அழகு காட்டின. சாவைக் கண்டு உதட்டைப் பிதுக்கினேன். அது, துன்பத்தைப் பலியாகக் கேட்டது. என் காதலையும் பாப புண்ணியங்களின் பலனையும் சாவு வெற்றி கொண்டது. ஆனால் ஐயோ ! காதலால் சாவை

ஜயிக்க முடியாமல் போய்விட்டது. என் காதல் இருப்பதற்கு இந்த உலகத்தில் இடம் போதாமல் புதிய உலகத்தைக் கற்பனை செய்தேன். விரிந்த கண் இரப்பைகளின் கீழே படுத்தேன். தூக்கத்தில் கற்பனைக்கு நழுவினேன். ஜயித்து விட்டேன் என்று கை கொட்டினேன். உதடுகளைப் பார்த்து அழகு காட்டி, 'உங்களால் வரமுடியாது' என்றேன். ஆனால் நான்தான் தோற்று விட்டேன். பெண்ணே! பணத்தை யாசிக்கவும் முடியவில்லை. கவியாகவும் ஆக முடியவில்லை. உன்னைப் போன்ற பொருள் மெய்ம்மறதியைக் கொடுக்காததால் கவிதை பாட முடியாமல் வேதாந்தத்தில் விழுந்தேன். பாடங்கள் சொன்னேன். வீணான ஞானத்தால் நான் தெரிந்து கொண்ட உயர்ந்த சத்தியம், ஞானம் வீண் என்பதே. நான் உண்மை யான கவியாக இருந்தால் உலகம் என்னைக் கவனித்தே இருக் காது. அதுதான் சொன்னேனே, 'சுயநலம் இல்லாத நன்மை, சமூகத்துக்கு அவசியம் இல்லை' என்று.

பெண்: இன்று என்னை விரும்பி, நாளைக்கு இன்னொருத்தியை விரும்பும் உங்கள்மேல் எனக்கு எப்படி நம்பிக்கை பிறக்கும் பிரபுவே!

உமர்: எனக்கு நாளை என்பதே இல்லை, பெண்ணே! நான் பிறந் ததும் வாழ்வதும் இன்றுதான். என் கவிதையின் முதல் பாதம் அதுதான். சரீரம் பிரதானமானது. அதை அழியச் செய்வது கவலை, கற்பனை. இவற்றின் முயற்சிக்கு இடம் இல்லாமல், இவற்றை நுழைய விடாமல் உடலுக்கு ஓயாமல் வேலை கொடுத் துக்கொண்டிருக்க வேண்டும். இது என்னுடைய இரண்டாவது உபதேசம். இதுவும் எல்லாருக்கும் பிடித்ததுதான். ஆனால் எல்லோரும் தாம் சிருஷ்டித்த மாயச் சமூகத்தை நிலை நிறுத்து வதற்காக, நீதியைச் சிருஷ்டித்து அதை நிலை நிறுத்துவதற்காக உடலைத் தூஷிக்கிறார்கள். உன் மனசுக்குள்ளே உனக்கே உடல் முக்கியம் என்று தெரியும்.

பெண்: ஆனால் எனக்கு ஆத்மா இருக்கிறது.

உமர்: அது சந்தேகத்துக்கு இடமானது. இருக்கிற தென்று நீ நினைக்கும்படி உன் மூளை சிறு வயதிலிருந்தே சமூகம் உன்னைப் பழக்கி விட்டது. சந்தேகப் பட்ட ஒவ்வொரு பொருளும் அசத் தியம், அநாவசியம் என்பது என் மூன்றாவது உபதேசம்.

பெண் : சுவாமி ! உங்கள் பாடம் எனக்கு ருசிக்க வில்லை. ஆனால் உங்களைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது. உங்களுக் கென்று ஒன்றும் இல்லை ; யாரும் இல்லை.

உமர் : ஆம், பெண்ணே ! சுயநலம் இல்லாத துரதிருஷ்டம் பிடித்தவன் கவி ஒருவன்தான். அவன் எதையும் விரும்பமாட்டான் ; எதற்கும் ஆசைப்பட மாட்டான் ; முயல மாட்டான். என் கற்பனை பறந்து போய்ச் சுற்றிச் சுற்றிச் சௌந்தரியத்தை வேட்டை யாடிக் களைத்து ஓய்வுக்காகக் கீழே இறங்கி, உன் கண் இமையில், உன் உதடுகளில் தேடும். அதற்காக நீ வேண்டும்.

பெண் : அநியாயம், பிரபு ! பிறன் மனைவியை இப்படி விரும்புவது நியாயமா ?

உமர் : நீ ஒப்புக் கொள்ளா விட்டால் உமரின் வாழ்க்கையில் உயர்ந்த கவிதை அழிந்து விடும். களைத்துப் போன கற்பனையும் கருத்துக்களும் நொண்டியாய், அசையாமல், அழுகிப் போய் விடும். களைப்பைத் தீர்த்து அவைகளுக்கு நீ தான் ஜீவன் ஏற்றிக் கவிதை உலகத்தை உயர்ந்ததாகச் செய்ய வேண்டும். இந்தச் சமயத்தில் நம் இருவருடைய சிநேகத்தாலும் இவ்வுலகம் கவிதையை அநுபவிக்கும். எனக்கு உலகத்தைப் பற்றி அக்கறை இல்லை. உலகம் உன்னைப் பற்றி 'அந்த உமரே காதலித்த பெண் இவள் !' என்று சொல்லிக் கொள்ளும். என் கவிதைகளின் மூலம் அமரத்வத்தைச் சம்பாதிப்பாய். என் கவிதைகள் உனக்குப் பிறந்த குழந்தைகள், உன் சிருஷ்டி.

பெண் : பிரபுவைப் பார்த்தால் இரக்கமாக இருக்கிறது. குழந்தை இல்லாத எனக்கு நீங்கள் பச்சைக் குழந்தை போல் இருக்கிறீர்கள். உங்களிடத்தில் கள்ளங்கபடு இல்லை. உங்களைக் கொஞ்ச வேண்டும் என்று இருக்கிறது.

(சேவகன் உள்ளே நுழைகிறான்)

சேவகன் : ராணி ! நமஸ்காரம். முராத் பிரபு உலாவி முடித்துக் கொண்டு தங்களுக்காகக் காத்திருக்கிறார். வண்டி தயாராக இருக்கிறது.

உமர் : (ஆச்சரியத்துடன்) இந்தப் பெண் முராதின் மனைவியா ! ஓமானா இளவரசி !

பெண் : உமர் ! பயப்பட வேண்டாம். உமரைப் பரீட்சித்தது ராணிக்கு வெகு திருப்திகரமாக இருக்கிறது. ஆரம்பத்திலேயே என்னை

ராணி என்று நீ கண்டு பிடித்து விட்டாய். நீ தான் நிஜமான மனிதன்.

உமர்: ஆனால், தாங்கள் ஆகாவைப் பற்றிக் கேட்ட கேள்விகள்?

பெண்: ஆகாவின் மனைவி என்னுடன் சொல்லி முறையிட்டாள். நீ பலருக்கு அநியாயம் செய்கிறாய் என்று கேள்விப் பட்டேன். அது தவறு. உன்னுடைய போதனைகளில் சில சரியல்லா விட்டாலும் நீ உண்மையான மனிதன். உன் வாழ்க்கை எல்லாம் குழந்தை யென்ற சொல்லிலேயே அடங்கி விட்டது. உன் ஆசை என்ன? ராணி அதை நிறை வேற்றத் தயாராக இருக்கிறாள்.

உமர்: பணம் வேண்டாம், ராணி!

பெண்: அதை விட உனக்கு அவசியமானது ஏதாவது இருந்தால் கேள்.

உமர்: அதைச் சொல்லத் தெரிய வில்லை, ராணி! மன்னித்து விடுங்கள் என்று கேட்கும் கோரிக்கை. கோரிக்கை யானால் அதைக் கொடுங்கள். என் விருப்பம் ஒன்று தான். தாங்கள் வாழ்க்கையை நிச்சயமற்ற தர்க்கத்தாலும் வாதத்தாலும் கெடுத்துக் கொள்ளாதீர்கள். உடல் சாகும் மட்டுமாவது இருக்கிறது. ஆனால் ஞானம், தர்க்கம், நீதி நியமங்கள், சமூக லட்சியங்கள் ஆகிய எல்லாம் தோன்றிய மறுகணமே அழிந்து விடுகின்றன. தன்னை ஒருவரும் கவனிக்க மாட்டார்களோ என்ற பயத்தால் சரீரம், மனசு ஆத்மா என்ற பிரமைகளைக் கற்பனை செய்து கொண்டது.

(ராணி சிரிக்கிறாள்)

நான் இப்படிச் சொல்வதைக் கேட்டு நீங்கள் சிரிக்கிறீர்கள். ஓகோ! சந்திரபிம்பம் இந்தக் காட்சியைக் கண்டு வெட்கப்பட்டு மேகத்தை முகமூடி போலப் போர்த்துக் கொண்டு விட்டது. ஐயோ, ராணி! போகிறாயா? இந்தப் பிச்சைக் காரனால் உனக்கு என்ன காணிக்கை கொடுக்க முடியும்? சந்திரன் முகமூடியைத் திறந்து விட்டுப் பொக்கை வாய்ச் சிரிப்புச்சிரிக்கிறான். எங்கே என் ஹம்ரு. ஆகா! வா, வாப்பா.

ஆகா, தம்பி! இந்தச் சந்தோஷத்தினால் பொங்கிப் பொங்கி வேகமாக அடித்துக் கொண்டு, என் இருதயம் நின்று விடாமல் அமுக்கிப் பிடித்துக் கொள் அப்பா! கதவு இரண்டானாலும் வழி ஒன்று. ராத்திரி, பகல் இரண்டானாலும் நாள் ஒன்றுதான். தாய்க்குத் துன்பம் குழந்தைக்கு அழுகை என்பவை இரண்டானாலும் அன்பு

ஒன்றுதான். சாவும் பிறப்பும் இரண்டானாலும் வாழ்க்கை ஒன்று தான்.

(ஆகா ஷாஹி வருகிறான்.)

ஆகா : குருஜீ, கள்ளால் மயங்கிப் போதையில் இருக்கிறார். நம் ஹம்ரு ஓடி விட்டாள். யரோ முராத்தாம். அந்தப் பயலுடன் வண்டியேறிப் போய் விட்டாள். உம்......

உமர் : அல்லா ஹோ துஷ்மன்! நம்மோடு பேசிக் கொண்டிருந்தவள் முராதின் மனைவி. முராத் நம் இளவரசர். பைத்தியக்கார ஆகா! நம்மை மோசம் செய்து ஹம்ருவை அடித்துக் கொண்டு போய் இளவரசனிடம் ஒப்புவிப்பதற்காக, அவள் செய்த சூழ்ச்சி இதெல்லாம். கோரம்! நட, போகலாம். ராணியும் வேண்டாம்! ராஜ்யமும் வேண்டாம். நம் ஹம் ருவை யாவது நமக்குக் கொடுக்க மாட்டார்களா?

ஆகா : முராதை உதைத்து அழைத்துக் கொண்டு வருகிறேன். என்னிடம் இதெல்லாம் நடக்காது. அந்த முராத் பயலின் மனைவியைப் பார், என்ன செய்கிறேன்!.........மன்னியுங்கள். கோபத்தில் உங்களைக் கூட ஒருமையில் பேசி விட்டேன்.

உமர் : அமைதியாக இரு, ஆகா! அவர்களைத் திட்டாதே! தவறு ஹம்ருவுடையது. அவள் தலையில்லாத உடல் என்று முன்னமே நான் சொல்லியிருக்கிறேனே. பணம், பணம், காசு! இது தான் உலகத்தின் புலம்பல். அதைத்தான் அவள் மோகித்தாள். ஆகா! பெண், ஏழையை மன்னிக்க மாட்டாள். இந்தப் பாழும் சமூகம் இரண்டு பிச்சைக்கார ஆண்களுக்கு ஒரு பெண்ணையாவது பொதுவாகக் கொடுக்கக் கூடாதா?

ஆகா : சமூகம் கொடுக்கிற தென்ன? அதை அடித்துத் தள்ளி விட்டு இழுத்துக் கொண்டு வருகிறேன்.

உமர் : நிதானம், மெதுவாக. காற்று, இந்தப் பேச்சைக் கேட்டு உலகத்துக்குச் சுமந்து கொண்டு போகும். நம் குதிரையைத் தயார் செய்.

ஆகா : தயார் செய் என்று இப்போது தான் மெதுவாகச் சொல்லுகிறீர்களே!

# காட்சி—3

(அதே இரவு ; முராத்தின் மாளிகை ; உமரும் ஆகாஷா ஹியும் மாளிகைக்குள் நுழைகிறார்கள். தூரத்தில் முற்றத் தில் கட்டிலின் மேல் முராத் குடித்து விட்டுப் படுத்துக் கிடக் கிறான். அதே நிலையில் ஹம் ருன்னிஸா அவனுடைய காலின் கீழ் விழுந்து கிடக்கிறாள்.)

ஆகா : ஹம்ரு, ஹம்ரு !

உமர் : உஷ் ! மெதுவாக. அநுபவத்தில் இருக்கிறவர்களுக்குப் பங்கம் விளை விப்பது நம் கொள்கைக்கே விரோதம்.

ஆகா : இப்போது என்ன கொள்கை குரு ? எங்கே ? ஹம்ரு?
(கையைத் தட்டுகிறான்.)

உமர் : மெதுவாய்! அதோ! எந்த உடற் சுகத்துக்காக இத்தனை பாடு படுகிறார்களோ அந்த உடலையே மறந்து கனத்த கண்ணீ ரை மழையாகப் பொழிந்துவிட்டு, காற்றோடு அடித்துக் கொண்டு போகப் படும் மேக ஜோடிகளைப் போல் அதோ !

ஆகா : இப்போது யாருக்கையா வேண்டும், கவிதை ?.........என் ஹம்ரு !......

உமர் : தோஷம்! வாயை மூடிக் கொள். என் உபதேசத்தைக் கேட்டு அபிப்பிராயங்களைச் செயலில் கொண்டு வரும் ஹம்ருவை மெச்சிக் கொள்வதை விட்டுத் திட்டுகிறாயே ? என் முறையீடு ஒரு சிஷ்யைக்காவது புரிந்தது என்றால் எனக்குப் பெருமையாக இருக்கிறது. ஹம்ருவை விட்டு விட்டுப் போவோம்.

ஆகா : அவள் என்னைக் காதலித்தேன் என்று சொன்னாள். உங்க ளுக்கு அவசியம் இல்லாவிட்டால் அவளை விட்டு விட வேண்டி யது தானா ?

உமர் : பைத்தியக்கார ஆண் பிள்ளையே ! மண் சட்டியில் தண்ணீர் குடிக்கும் என்னைப் போன்ற பரம தரித்திரனை உன்னை ஹம்ரு காதலிப்பது நடக்கக் கூடியது அல்ல ; அப்பா !

ஆகா : அவளுக்குப் பணம் எதற்கு? நான் நன்றாகப் பேசுறேன் என்பதால் என்னைக் காதலிப்பதாகச் சொன்னாள்.

உமர் : காதல் என்பது உடல் இச்சைக்கு மனித பாஷை கற்பனை செய்த இனிமையான பெயர். பெண்களுக்கு அது இல்லை அப்பா! பணக்காரனைக் காதலித்தால்தான் அவர்களுடைய சுயநலம் பூர்த்தியாகும். எத்தனையோ நகைகள் போடுவாள். வயிர மாகவே இழைத்து விடுவாள். வெள்ளி மெத்தை மேல் படுத் துக் கொள்வாள். தங்கக் கூடாக அடித்து இறக்கிக் கொள்வாள். மற்றப் பெண்களுக்குத் தன் செல்வத்தை விளம்பரப் படுத்தி அவர்கள் ஆவலையும் தூண்டி விடுவாள். வேறு பெண்கள் பொறாமைப் பட்டால் தன் காதல் பூர்த்தியாகி விடும். எல்லோ ருக்கும் எட்டாத நிலையில் காணப்படுவது, எல்லோரும் தன்னை யே சுற்றிச் சுற்றி வருவது என்ற இரண்டுந்தான் அவள் விரும்புவது.

ஆகா: இந்த உபந்நியாசங்கள் எதற்கையா? சற்று முன்னால் கூட எத்தனையோ பேச்சுப் பேசினாள்; எத்தனையோ சத்தியங்கள் செய்தாள்.

உமர்: வேட்டைக்கு உன்னை உசுப்பி விட்டு விட்டு அவள் பாட்டுக்கு அரசனுடன் போய் விட்டாள். உனக்கு இன்னும் எட்டாக்கனி ஆவதற்காக. ஓகோ! ராணியா? வெண்ணிலவில் இற்று விழுந்த சந்தன மரம் போல......

ஆகா: இந்த உபமானங்களைக் கேட்டால் வயிறு நிரம்பாது. செயலில் இறங்குங்கள், ஹம்ரு...! ஹம்ரு...!

ஹம்ரு: எவன் அது? இல்லெ எனக்குத் தூக்கம்; தூக்கம் எனக்கு இல்லை.

முராத்: நிஜம்...வண்டி ஏறினேன் நான்.

ஹம்ரு: பெயர் எனக்கு இல்லை. இல்லை எனக்கு.

முராத்: கொடு, முத்தம்!

ஆகா: அடே! நம்ப முன்னாலேயா! நெஞ்சுவரைக்கும் குடித்து விட்டுப் போதாதற்கு முத்தமாம் முத்தம்!

(ராணி வருகிறாள்)

பெண்: ஹம்ருவுக்காகத் தானே வந்திருக்கிறீர்கள்?

ஆகா: நான் அதற்காகத்தான் வநதேன்.

பெண்: ஹம்ரு, என் எஜமானனை விட்டு விட்டுப் போக மாட்டேன் என்று வாக்குத் தத்தம் செய்ததைக் கேட்டேன்.

ஆகா: நீங்கள் இதையெல்லாம் கண்டும் கேட்டும் சும்மாவா இருந்தீர்கள்?

பெண்: இந்த அநுபவம் எனக்குப் புதிதல்ல.

ஆகா: என் மனைவி எதிரில் இந்த மாதிரி வேலை செய்தால் என்னை வெட்டித் துண்டு போட்டு...

உமர்: குடிகளின் பாவத்தை அரசன் ஏற்றுக் கொள்கிறான். அரசனுடைய பாவங்களை ராணி ஏற்றுக் கொள்கிறாள்.

பெண்: எத்தனை காலம் இப்படி? எனக்கு ஆசை இல்லையா? விருப்பம் இல்லையா? உமர்! நான் உன்னை...

ஆகா: இதென்ன கூத்து! ராணிக்கு முன்னால் ராஜா; ராஜாவுக்கு முன்னால் ராணி; எங்களுக்கு முன்னால் ஹம்ரு. இதென்ன காதல் நாடகம். எனக்கு எல்லாம் ஒரே குழப்பமாக இருக்கிறது.

உமர்: பெண்ணே! நீ ஆசையை விட்டு விடு. மகாராஜாவின் மனைவி என்பதை விட வேறு பாக்கியம் என்ன வேண்டும். அதோடு உன்னைக் காப்பாற்ற என்னிடம் ஒன்றும் இல்லை. என் நார்ப்பாய்கள், மண்டை யோடுகள், பொருளற்ற கவிதைகள்—இவைகளெல்லாம் உனக்கு எதற்குப் பெண்ணே? பாக்யத்தை ருசி கண்ட நீ, என்னை விட்டு நாளைக்கே திரும்பி விடுவாய்.

பெண் : கவியே! உனக்கு நாளை என்பதே இல்லை என்றாய் ?

உமர் : எனக்கு இல்லைதான். உனக்கு இருக்கலாம், பெண்ணே! எனக்கு உன்மேல் உடல் இச்சை கூட இல்லை. உன்னைப் பார்த்தால் மெய்ம் மறதி பெறலாம். உன்னைத் தொட்டால் அதன் பலன் உலர்ந்த நாக்கு, கொதிக்கும் நெற்றி, வறண்டு போன குரல், ஓய்ந்து விட்ட கால்கள் இவைதான் கிடைக்கும். நான் கவியாக இருப்பது உனக்கு இஷ்டம் இல்லா விட்டால் என்னொடு வரலாம். பெண்ணே! என் ஆத்திரம், என் ஆசைகள், இவற்றைக் கவிதை மூலமாகத் தீர்த்துக் கொண்டு, ஆத்மிகமாய், லட்சியமாய் நிறை வேற்றிக் கொள்வேன். நான் கலைந்த மேகங்களின் நடுவில் மாயமாக மறைந்த சந்திரனைப் போல......

ஆகா : சரி; மறுபடியும் தொடங்கி விட்டார் உபமானத்தை! அசைகிறான் முராத்...பிரபுவே! அவள் என்னுடைய ஹம்ரு. எங்களுடன் அவளை அனுப்பி விடுங்கள். இது உங்களுக்குக் கொஞ்சங் கூட நன்றாயில்லை.

முராத் : இன்னும் கொட்டு, இதில் சாரயத்தை! கூந்தலை என் கழுத்தில் சுற்று.

ஹம்ரு : அம்மாடி !...என்ன குளிர்...அடே உமர்! உடைந்ததடா, உன் சட்டி !

ஆகா : குருஜீ! வெறியில் அவனைப் பின்னலால் சுருக்கிட்டுக் கொன்றுவிட மாட்டாளே !

ஹம்ரு: உடைந்தது உன் சட்டி, உமர்! (கலயத்தை விட்டெறிகிறாள்)

உமர் : ஐயோ ! என் வாழ்க்கைக் கலயம் போயிற்றா ? கள்ளை எதனால் குடிப்பது? ஏ பெண்ணே, ஏ ராணி! எனக்கு நீ வேண்டாமம்மா! பொன் ஒட்டடை படிந்த தோள்களை என்னால் சுமக்க முடியாது. வேண்டாம் எனக்கு ஹம்ரு! பெண் உலகத்தோடு என்னை இணைத்திருக்கும் கட்டுக்களை அறுத்தெறியப்பா, ஆகா !

பெண் : உமர்! உன் இனிய பாட்டை ஒருதரம் பாட மாட்டாயா? உன் ஏகாந்தக் கனவுகளுக்கு என்னைக் கருப் பொருளாக வைத்துக் கொள்ளேன்! இந்தப் பாழ் பட்ட அந்தப் புரத்திலிருந்து எனக்கு விடுதலை கொடுத்து, உன் வேதாந்தத்தில் சாசுவதமான கீர்த்தியை எனக்குச் சம்பாதித்து வைக்க மாட்டாயா? பச்சைக் குழந்தை போன்ற உன் உள்ளத்தைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, கொஞ்ச வேண்டு மென்றிருக்கிறது.

உமர் : ஐயோ, உன்னை அங்கீகரிக்க முடியாமல் என் வாயே விழுந்து விட்டது, பெண்ணே! இந்த மண்ணால் அழுக்கடைந்த வாழ்க்கையில் மின்னல் எதற்கு? நிலையான இந்தப் பாலைவனத்தில் ஆலங்கட்டிகளா? என் கவிதையில் பிராணிகளின் பெரு மூச்சுக் கேட்கக் கூடாது, பெண்ணே! என் கவித்துவத்தைக் கெடுக்காதே!

ஆகா : ஏய், ஹம்ரு ! வரப் போகிறுயா, இல்லையா ?

ஹம்ரு : யாரடா, அவன் ? என்னை எதிர்த்தவனைத் தூக்கில் ஏற்றி விடுவேன்.

முராத் : உடைந்த சட்டியில் படுத்துக் கொள்.

ஆகா : சீச்சீ ! நான் இங்கே இருக்கமாட்டேன், குருவே !

உமர் : இருட்டு நிறைந்திருந்த சட்டி இன்று உடைந்து, வெளிச் சத்தைக் கண்டது. அல்லா, சட்டிகளுக்கு ஒட்டுப் போடுவதை நிறுத்திக் கொண்டு...விட்டார். போவோம். வா......கோணல் இடுப்புக்களும், பாவத்தால் நடுங்கும் உதடுகளும், கத்தியாகப் பொசுங்கும் மார்புகளும் நமக்கு வேண்டாம்.

பெண் : உன்னேடு நானும் வருகிறேன்...

உமர் : வேண்டாமம்மா, பெண்ணே ! வைரங்களைப் பொறுக்கிக் கொண்டு, சிம்மாசனம் ஏறி, உன் கணவனுடைய பிணத்தின் மேல் ஏறி நாட்டியம் செய்.

(முராத், கள்ளுக் கலயத்தை விட்டெறிகிருன்.)

துண்டு துண்டாகி வெட்ட வெளியில் நாட்டியம் செய்கிறது கலயம். நீ உடைகளைக் களைந்து பாரத்தைக் குறைத்துக்கொண்டு நாட்டியம் செய்...... (ஆகாவின் பக்கம் திரும்பி)

நாம் வந்த வழியே திரும்ப வேண்டும், ஆகா ? நாம் வெளிச்சத் திலிருந்து வந்தோம். வெளிச் சத்துடனேயே போக வேண்டும். சுவர்க்கத்திலிருந்து வந்த பாட்டு, மறுபடியும் சொர்க்கத்துக்கே தான் போக வேண்டும். அதோ, பொழுது விடிகிறது. இருட்டுச் சட்டியிலிருந்து ஒளிப் பிழம்பை உருட்டித் திரட்டி வானத்தின் மேல் யாரோ எறிந்து விட்டார்கள். கிரணம் என்னை அழைக் கிறது. இயற்கை தன்னைக் கொஞ்ச வா என்கிறது. வேதாந்தி கள் மொட்டைத் தலையை ஆட்டிக் கொண்டு, பகல், பகல்தானு என்று கேள்வி போட்டுக் களைத்துப் படுத்து விட்டார்கள். நட, பரந்த உலகுக்கு. உடைந்த சட்டிக்கு ஒட்டுப் போடுவோம்.

பெண் : முராத் மகாராஜாவே ! பொழுது விடிந்தது.

ஹம்ரு : எனக்கு இன்னும் இருட்டுத்தான். எழுந்திருக் காதே, முராத் ! என் கூந்தலால் உன் கண்களை மூடிக் கொள்.

ஆகா : மூடிக் கொண்டு கோரி கட்டச் சொல்லு !

[ திரை ]

---

Printed at Industries Press, 63, Usman Road, T. Nagar, Madras-17




## நூலடக்கம்....

ஸ்ரீ பி. வி. ராஜமன்னரின் சிறந்த நாடக அமைப்புக்கு இலக்கணமாய் அமையும் 'என்ன ஆண் பிள்ளைகள்'; அருவருக்கத்தக்க சோம்பேறித்தனத்தால் நேரிடும் துன்பங்களைச் சோகம் ததும்ப வெளியிடும் 'தலையெழுத்து'; கற்புநெறிபற்றிக் கூரிய விமரிசன நோக்கை வெளியிடும் 'சிவம்'; ஏழை பணக்காரன் வேறுபாட்டால் ஏற்படும் தீமையை விளக்கும் 'அனார்க்கலி'; சுதந்திர இயக்கத்தில் ஆந்திரத்திற்கு ஓர் இடம் தேடித் தரும் 'மல்லம்ம தேவியின் சாபம்'; பாரஸீகக் கவி உமரின் தத்துவத்தை எளிய முறையில் வெளியிடும் 'உமர் கய்யாம்' ஆகிய நாடகங்கள் ஆறும் இடம் பெற்ற இத்தொகுதி ஓர் அரிய முயற்சியாகும்.

SIVAM

TELUGU PLAYS IN TAMIL

தென்மொழிகள் புத்த
டிரஸ்டு ஆதரவி
பதிப்பிக்கப்பெற்ற